# சங்ககால வாழ்வியல் நெறிகள்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி.)
பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்

**அ.பு. சரஸ்வதி**

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
தரமணி, சென்னை — 600 113

**ஜூலை – 2010**

**முனைவர் தா. ரெங்கநாதன்**
பேராசிரியர்
தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

'**சங்ககால வாழ்வியல் நெறிகள்**' என்னும் தலைப்பில் திருமதி. அ.பு. சரஸ்வதி எழுதியுள்ள இவ்வாய்வேடு 2005–2010 ஆம் ஆண்டில் முனைவர் பட்டத்திற்காக எனது மேற்பார்வையில் எழுதப் பெற்றதாகும். இவ்வாய்வேடு அவரது தனி முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அனுப்பப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை
நாள் : 15/07/2010

**(தா. ரெங்கநாதன்)**
மேற்பார்வையாளர்

Dr. D. RENGANATHAN
Professor
Faculty of Language & Linguistics
International Institute of Tamil Studies
C.I.T. Campus, Chennai - 600 113.

DIRECTOR
International Institute of Tamil Studies
T.T.T.I. Post, C.I.T. Campus
Chennai-600 113.
Ph; 22542781

**அ.பு. சரஸ்வதி**
முனைவர்பட்ட ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113

# ஆய்வாளர் உறுதிமொழி

'**சங்ககால வாழ்வியல் நெறிகள்**' என்னும் தலைப்பில் முனைவர் பட்டம் பெறுவதற்காக அளிக்கப் பெறும் இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது. இதற்கு முன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

அ.பு. சரஸ்வதி.

*இடம் : சென்னை*
*நாள் :* 15.7.10

**(அ.பு. சரஸ்வதி)**
*ஆய்வாளர்*

# நன்றியுரை

**சங்ககால வாழ்வியல் நெறிகள்** என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு இசைவளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வு செய்வதற்கு வாய்ப்பளித்த இயக்குநர், பேரா. கரு.அழ. குணசேகரன் அவர்களுக்கு என்றென்றும் நன்றி.

**சங்ககால வாழ்வியல் நெறிகள்** என்ற இவ்வாய்வேட்டைச் செம்மைச் செய்த ஆய்வு மேற்பார்வையாளர் பேரா. தா. ரெங்கநாதன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னின் எல்லாமுமாய் என்னுள் வாழ்ந்து கொண்டிருக்கும் எனது பெற்றோர் திரு. அ.ரா.புஷ்புநாதன் அவர்களுக்கும், திருமதி பு.கெஜேஸ்வரி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி. வாழ்வின் அனைத்து நிலைகளிலும் உதவியாக இருக்கும் சகோதரர்கள் அவர்களின் துணைவியார்கள், சகோதரிகள் அவர்களின் துணைவர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி. நான் சோர்ந்த போதெல்லாம் எனக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து எல்லா வகையிலும் துணையாக நிற்கும் என் கணவர் திரு.ந. சரவணனுக்கும், தாயார் திருமதி ந. லஷ்மி நந்தகோபால் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

என் ஆய்வுப் பணியில் பெரிதும் ஊக்கமளித்து உதவிய நண்பர்கள் திரு.ஜே.ஜெகத்ரட்சகன், திரு.எ. பாவலன், திருமதி. ப. ஜெயசெல்வி ஆகியோருக்கு என் மனமார்ந்த நன்றி.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர் திருமதி. இரா. பார்வதி அம்மா அவர்களுக்கும், திரு. இரா. பெருமாள், திரு. கு. செல்வகுமார் மற்றும் திருமதி. பா. கௌசல்யா அவர்களுக்கும் நன்றி. சில அரிய நூல்களைப் பயன்படுத்த அனுமதித்த ரோஜா முத்தையா நூலகத்திற்கும், கன்னிமாரா நூலகத்திற்கும் நன்றி.

இவ்வாய்வேட்டினைச் செம்மையாக தட்டச்சு செய்து கொடுத்த வெங்கடேஸ்வரா கணினி மையத்திற்கும் நன்றி.

அ.பு. சரஸ்வதி

**அ.பு. சரஸ்வதி**

ஆய்வாளர்

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| ஆ.ஆ. | – | ஆங்கில ஆக்கம் |
| ஆ.சூ. | – | ஆத்திசூடி |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ஐங்குறு. | – | ஐங்குறுநூறு |
| க.ஆ. | – | கட்டுரையாசிரியர் |
| கலி. | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறு. | – | குறுந்தொகை |
| கொன்.வே. | – | கொன்றைவேந்தன் |
| சிறு. | – | சிறுபாணாற்றுப்படை |
| சூடா.நிக.நூற். | – | சூடாமணி நிகண்டு நூற்பா |
| சேந்.திவ.நூற். | – | சேந்தன் திவாகரம் நூற்பா |
| திரு.முருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| திவாகரம்.நூற். | – | திவாகரம் நூற்பா |
| தொல்.செய்யு. | – | தொல்காப்பியம் செய்யுளியல் |
| தொல்.பொருள். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொல்.பொரு.அக. | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை |
| தொல்.பொ.மெய். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் |
| நற். | – | நற்றிணை |
| நாம.தீப.நிக. | – | நாமதீபநிகண்டு |
| பட்டி. | – | பட்டினப்பாலை |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |
| பாரதி.கவி. | – | பாரதியார் கவிதைகள் |
| பிங்.நிக.நூற். | – | பிங்கல நிகண்டு நூற்பா |
| புறம். | – | புறநானூறு |
| புறப்.வெண். | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொதிகை.நிக. | – | பொதிகை நிகண்டு |
| பொரு. | – | பொருநராற்றுப்படை |
| மணி.விழா. | – | மணிமேகலை விழாவறைக் காதை |
| மணி. பாத்.காதை | – | மணிமேகலை பாத்திரம் பெற்ற காதை |
| மதுரை. | – | மதுரைக் காஞ்சி |
| ம.ப. | – | மறுபதிப்பு |
| முது.மொ.கா. | – | முதுமொழிக் காஞ்சி |

# முன்னுரை

*பல நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழ்ச் சமூகத்தின் நாகரிகம், பண்பாடு, அரசியல், பழக்க வழக்கங்களை விளக்கும் வரலாற்றுக் களஞ்சியமாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. இலக்கியத்தின் உள்ளடக்கம் சமூகம். சமூகத்தின் உள்ளடக்கம் இலக்கியம். ஒவ்வொரு இலக்கியமும் அவ்வக்கால சமூகத்தைத் தன்னுள் கொண்டுள்ளது. சமூகத்தோடு தொடர்புடைய இலக்கியம் சமூகத்தின் நிகழ்வுகளைப் படம் பிடித்துக் காட்டுகிறது. கண்ணாடி உள்ளதை உள்ளபடியே காட்டும் இயல்புடையது. அதுபோன்று சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழரின் வாழ்க்கை நிகழ்வுகளை உள்ளவாறே வெளிப்படுத்திக் காட்டுகின்றன.*

*வரலாற்று ஆய்விற்கும் சமூக ஆய்விற்கும் இலக்கியங்கள் முதன்மை நிலைச் சான்றுகளாகக் கருதப்படுகின்றன. காரணம் அவை அக்காலத்தின் நிகழ்வுகளைப் பதிவு செய்கின்றன. அவ்வகையில், சங்க இலக்கியங்களை முதன்மை நிலைச் சான்றுகளாகக் கொண்டு பழந்தமிழரின் வாழ்வியல் நெறிகளை வெளிக்கொணர்வதாக இந்த ஆய்வு அமைகிறது.*

**ஆய்வு நோக்கம்**

*உலகத்திற்கோர் எடுத்துக்காட்டான வாழ்வை மேற்கொண்ட பழந்தமிழ் மக்களைச் சங்க இலக்கியங்கள் நன்முறையில் விளக்கி நிற்கின்றன. யாதொன்றுக்கும் இரு நிலைப்பாடுகள் உள்ளன. பழந்தமிழர் தம் வாழ்வியல் நெறிகளாகப் போற்றியவற்றை, ஏற்கத்தக்கன, ஏற்கத்தகாதன என்ற அளவுகோல் கொண்டு அவர்களின் வாழ்வியல் உண்மைகளை விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.*

## ஆய்வுத் தலைப்பு

**'சங்ககால வாழ்வியல் நெறிகள்' என்பது ஆய்வுத் தலைப்பாகும்.**

## ஆய்வுக் களன்

சங்க இலக்கியங்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய எட்டுத்தொகை நூல்களும், திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மலைபடுகடாம், பட்டினப்பாலை, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, மதுரைக்காஞ்சி ஆகிய பத்துப்பாட்டு நூல்களும் இந்த ஆய்விற்குக் களமாக அமைகின்றன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகியன ஆய்வுக்கு எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

பகுப்புமுறை, விளக்கமுறை மற்றும் ஒப்பீட்டு முறையில் இந்த ஆய்வு அமைகிறது. ஆய்வேட்டின் உரைப்போக்கிலேயே மேற்கோள் குறிப்புகள் தரப்பெற்று, அடிக்குறிப்புகள் தவிர்க்கப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

இந்த ஆய்வேடு முன்னுரை மற்றும் முடிவுரை நீங்கலாக, ஐந்து இயல்களைக் கொண்டதாக அமைகிறது.

| | | |
|---|---|---|
| இயல் ஒன்று | : | பழந்தமிழர் வாழ்வியலில் நன்னெறிகள் |
| இயல் இரண்டு | : | முறையற்ற வாழ்க்கை முறை |
| இயல் மூன்று | : | பண்டைத் தமிழர் வாழ்வியலில் வறுமை |
| இயல் நான்கு | : | பெண்கள் வாழ்வியலில் அவல நிலை |
| இயல் ஐந்து | : | பொற்கால வாழ்க்கை |

## இயல் ஒன்று : பழந்தமிழர் வாழ்வியலில் நன்னெறிகள்

'பழந்தமிழர் வாழ்வியலில் நன்னெறிகள்' என்ற முதல் இயலானது, பழந்தமிழரின் வாழ்வில் உள்ள நன்னெறிகள் பற்றி ஆய்வாளர்கள் கூறும் கருத்துரைகளை விளக்குகிறது. வாழ்வியலை நெறிப்படுத்தும் பண்புகளை வெளிக்காட்டுகிறது. இது இல்லற மாண்பு, நெறிதவறா இயல்பு, நற்பண்பின் தன்மை, வாய்மை, நட்பும் நட்பு கொள்ளும் முறையும், உயிரும் நட்பும், உதவும் பண்பு, செய்ந்நன்றி மறவாமை, நடுநிலை, அறநெறி, அறத்தின் இயல்பும் சிறப்பும், அறநெறியில் நிறுத்தும் பண்பு, அறிவுறுத்தும் இயல்பு, குடும்ப நலம் ஆகிய பகுதிகளைக் கொண்டு அமைகிறது.

## இயல் இரண்டு : முறையற்ற வாழ்க்கை

இவ்வியலானது, அற ஆட்சிக்குரிய தடைகள், நாடழிவு, கொள்ளை என்று மூன்று பெரும் பகுப்புகளையும், அவற்றில் பல உட்பகுப்புகளையும் கொண்டு அமைகிறது. அற ஆட்சிக்குரிய தடைகளில் ஒன்றாக சினம் அமைந்திருப்பது பற்றி எடுத்துரைக்கிறது. கள்வர் செயல், கள்வர் வாழ்க்கை எனும் உட்தலைப்புகளைக் கொண்டுள்ளது.

சினம்-சொல் விளக்கம், சினத்தின் பெயர்கள், சினக் குறிப்பு, சினம்-பிறப்பு, சினம்-வெளிப்பாடு, சினம் தவிர்த்தல், சினம் கொண்டார் தம் கேடு, நீதியுரைகள் என்பவை பொதுநிலையில் அமைகின்றன. எரியூட்டல், போருக்குரிய செயல், சினத்தின் ஆற்றல், சினத்தீயின் ஆற்றல், பெண்ணிற்காக தீ மூட்டல் என்பவை சினத்தின் அடிப்படையிலான செயல்பாடு என்பதில் அமைகின்றன.

இரண்டாவது பகுதியான நாடழிவு, வளங்கள் பாழாதல், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன், பாண்டியன் நெடுஞ்செழியன், திருமாவளவன் இவர்களின் பகைப்புல அழிவுகள், அம்பலங்கள் மன்றங்கள் பாழாதல், கழுதை ஏரிட்டு பாழாக்குதல், அச்சம் உருவாக்கல் எனும் பகுதிகளை உள்ளடக்கியுள்ளது.

மூன்றாவது பகுதியான கொள்ளை என்பது, குணம் கொள்ளாமை, கொள்ளை உருவாதல், விளை நிலங்கள் கொள்ளை போதல், பொன்னும் பொருளும் கொள்ளையிடல், ஆறலைக் கள்வரோடு ஒப்பாதல், கொண்டி மகளிர், கள்வர் உருவாதல், எனும் பகுதிகளை உள்ளடக்கியுள்ளது.

## இயல் மூன்று : பண்டைத் தமிழர் வாழ்வியலில் வறுமை

இவ்வியலானது, வறுமை, பசி துன்பம், மக்களும் வறுமையும் என்ற மூன்று பெரும் பகுப்புகளையும் அவற்றில் பல உட்பகுப்புகளையும் கொண்டு அமைகிறது. இவற்றில் வறுமை என்பது வறுமையைக் குறிப்பிடும் சொற்களை ஆராய்வதாக, வறுமையை உணர்த்தும் சொற்களை ஆராய்வதாக அமைகிறது. தொல்காப்பியத்தில் வறுமை பொருள், வறுமையின் இயல்பு, பொருள் இல்லார் அடையும் துன்பங்கள் ஆகியவற்றை இப்பகுதி விளக்குகிறது.

இரண்டாவது பகுதி வறுமையை உணர்த்தும் பசியின் துன்பத்தை விளக்குகிறது. இது பசிநோய், பசிப்பகை, பசிவருத்தம், பசியின் நிலைகள் ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளது.

மூன்றாவது பகுதியான மக்களும் வறுமையும் என்பது, புலவர் வறுமை, கலைஞர் வறுமை, இரவலர் சுற்றத்தின் வறுமை, வறுமையுற்ற உண்கலம் பெண்களின் வாழ்வில் வறுமை, வறுமையைப் பொறுத்தல், வறுமைக்குள்ளாதல், மனக்கலக்கம், வறுமையுற்ற ஊரின் குடிகள், உடையில் வறுமை, வாழுமிடம், குடிசைகள், செல்வநிலை ஆகியவற்றையும் கொண்டு அமைகிறது.

## இயல் நான்கு : பெண்கள் வாழ்வியலில் அவல நிலை

இவ்வியல், கைம்மை, உயிர்விடுதல், மகள் மறுத்தல், மகட்பாற்காஞ்சி ஆகிய தலைப்புகளில் பெண்களின் துன்பநிலையை விளக்குகிறது. இது சங்க இலக்கியத்தில் கைம்மை, கைம்மை முறைகள், கைம்மை நோற்றவர்கள், கைம்மை பற்றிய கூற்றுகள் ஆகிய உட்தலைப்புகளைக் கொண்டு அமைகிறது.

உயிர் விடுதல் என்பது உடனுயிர் விடுதல், தாழியில் அடக்கமாதல், தீப்பாய்தல், தீப்பாய்ந்த மகளிர் என்ற பகுதிகளைக் கொண்டு அமைகிறது.

மகள் மறுத்தல், பாரி மகளிரின் துன்பத்தை, மகட்பாற் காஞ்சி பெண்ணிற்காக உண்டாகும் ஊரழிவை விளக்குகிறது.

## இயல் ஐந்து : பொற்கால வாழ்க்கை

இவ்வியலானது, மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது. முதல் பகுதி, பொற்காலத்தின் தோற்றம், இலக்கிய வரலாற்றில் பொற்காலம், சங்ககாலம் பொற்காலம் என்பதற்கான வரையறை (செல்வம், வணிகம், ஏற்றத்தாழ்வற்ற சமூகம், நட்பின் சிறப்பு, புலமைச் செறிவு, மொழிவளம்), தேவை மற்றும் பயன்பாட்டு நோக்கில் பொற்கால பார்வை என்ற வகையில் அமைகிறது.

இரண்டாவது பகுதி, பொற்காலமாகக் குறிப்பிடும் சங்க காலத்தில் சில குறைவுற்ற பண்பு நடத்தைகள் இருந்ததைக் குறிப்பிடுகிறது. செய்ந்நன்றியின்மை, பொய்கூறுதல், பொய்ச்சான்று, புறங்கூறுதல், வஞ்சித்து மறைத்தல், சூதாட்டம் முதலான பண்பில் குறைவுற்ற செயல்களையும், இரக்கவுணர்வு மற்றும் மனிதநேயம் குறைந்த அரசர்களின் செயல்களையும் எடுத்துக்காட்டுகிறது.

சமுதாய நோக்கில் அரசர்களின் ஒற்றுமையின்மை விளக்கப்படுகிறது. பேரரசர்களின் உறவு நிலை, உறவுகளுக்குள்ளே ஒற்றுமையின்மை, சிற்றரசர்களின் உறவுநிலை, அமைதியின்மை என்ற உட்தலைப்புகளைக் கொண்டு அமைகிறது. சங்கச் சமுதாயத்தின் குடும்ப நிலையை எடுத்துக்காட்டி வளமை வறுமை என்ற பாகுபாட்டை விளக்குகிறது.

## நிறைவுரை

ஆய்வுக் கட்டுரையின் பகுப்பாகிய ஐந்து இயல்களின் மூலம் பெறப்பட்ட முடிவுகளைக் கூறுவதாக இப்பகுதி அமைகிறது.

இறுதியில், மேற்கோளாகவும், கருத்துருவாக்கத்திற்கும் பயன்பட்ட முதன்மை மற்றும் துணை நூல்களின் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது.

# 1. பழந்தமிழர் வாழ்வியலில் நன்னெறிகள்

உடல் நலமும் வாழ்க்கை வளமும் அமைய வாழவேண்டும். எவ்வித துன்பமுமின்றி இன்பமாக வாழ வேண்டும். இவை மக்கள் அனைவரும் பெற விரும்பும் நடைமுறை வாழ்க்கை சிந்தனையாகும். ஆனால், தன்னை மட்டுமே சிந்திக்கும் வாழ்வியல் சிந்தனைகளாக இவை உள்ளன. நாட்டில் அமைதி நிலவ வேண்டும். வறட்சி, பற்றாக்குறை, பசி இல்லாமல் நாடு செழிப்புடன் விளங்க வேண்டும். இவற்றை விட மக்களிடம் மனித நேயம் மிகுந்திருக்க வேண்டும். இத்தகையவை பொதுநல வாழ்வியல் சிந்தனைகளாக அமைகின்றன. தன்னலச் சிந்தனை, பொதுநலச் சிந்தனை எனப் பல இருந்தாலும், ஒவ்வொரு மனிதனிடமும் சில அடிப்படைப் பண்புகள் இருக்க வேண்டும். அவை அன்பு, இரக்கம், பணிவு, பொறுமை, வாய்மை, நடுநிலைமை முதலானவையாகும். மக்கள் ஒருங்கிணைந்து வாழ இப்பண்புகள் துணைபுரிகின்றன.

மேற்கூறியவற்றிலிருந்து மாறுபட்ட சூழ்நிலையில் வாழ்பவர்களும் உள்ளனர். சிலர், எதனை நோக்கி தம் வாழ்வு செல்கிறது எனுந் தெளிவின்றி வாழ்கின்றனர். பெரும்பான்மையோரின் வாழ்வின் அடிப்படை பிரச்சனையாய் இருப்பது பொருளாதாரக் குறைபாடு. பொருளாதாரம் நிரம்பப் பெற்றவர்களின் வாழ்விலும் குறைபாடுகள் உள்ளன. இவையிரண்டின்வழி குறைவில்லா வாழ்க்கை வாழ்வோர் எவருமில்லை எனும் பொதுமுடிவு கொள்ள வழிவகையமைகிறது.

ஒரு புறம் அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சி,பொருளியல் வளர்ச்சி எனப் பல நிலைகளில் உலகம் உயர்ந்து கொண்டு சென்றாலும், மறுபுறம் பொய், ஏமாற்று, வஞ்சகம், கொலை, கொள்ளை, வன்முறை ஆகியனவும், வீட்டில் கணவன் மனைவி கருத்து வேறுபாடு, மணமுறிவு, சொத்துத்தகராறு தலைமுறை இடைவெளி என, ஒட்டுமொத்த சமுதாயமும் ஏதாவது ஒரு நிலையில் துன்பத்தில் இருக்கின்றது. இத்துன்பங்கள் உருவாவதற்குக் காரணங்களாக,

1. மனிதன் தன் வாழ்க்கை நெறியை மறத்தல் அல்லது அதிலிருந்து விலகி நடத்தல்.

2. நற்பண்புகள் நீங்குதல்.

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் நன்மை தீமை, இன்பம் துன்பம், உயர்வு தாழ்வு கலந்திருப்பது போல ஒவ்வொரு மனிதரிடமும் நிறைகுறை கலந்தே உள்ளன. அவை வெளிப்படும் தன்மையில் ‘நல்லவன்’ என்றும் ‘தீயவன்’ என்றும் அடையாளப்படுத்தப்படுகிறான். அனைவரும் அனைத்து நற்பண்புகளையும் கொண்டுள்ளனர் என்று கூற முடியாது. சூழலுக்கும், தேவைக்கும் ஏற்ப மனிதனின் பண்புகள் வெளிப்பட்டு நிற்கின்றன.

ஒரு சமூகத்தில் தீய செயல்கள் அதிகமாக தலையெடுப்பதைக் காணும்போது, அச்சமூகம் மெல்ல மெல்ல தன் வாழ்க்கைப் பாதையில் சீரழிந்துக் கொண்டிருக்கிறது எனலாம். சீரழிகின்ற சமூகத்தைச் சீர்செய்வது, அச்சமூகத்தைக் காப்பாற்றுவது யாருடைய கடமை? என்ற கேள்வி எழுகிறது. ஆனால், சமூகத்தைச் சீர்செய்வதை விட, தனி மனித உள்ளத்தைச் சீர் செய்வது முதன்மை தேவையாகிறது. அவ்வாறு செய்பவர்கள் நல்ல குணமுடையவராக இருத்தல் வேண்டும். பொதுவாழ்வில் மக்களுக்கு அறிவுரை வழங்குபவர், தம் வாழ்க்கை என்று வரும்போது அதிலிருந்து மாறுபட்டு நடக்கின்றனர். இத்தகையவரால் தனிமனித பண்பு கேடும், அதனால் சமுதாயக் கேடும் அதிகரிக்கின்றன. சிலர் தன்னலமும் வஞ்சகமும் கொண்டு ஏமாற்றுவதை ஒரு தொழிலாக நடத்தி வருகின்றனர். இவ்வாறான சமுதாயத்தில் வாழும் மக்கள் தங்களைத் தாங்களே செம்மைப் படுத்திக் கொள்ள வேண்டும். இது இன்றைய சமுதாயத்தின் நிலை. ஆனால், சங்கச் சமூகத்தினர் பிறர் துன்பத்தைத் தம் துன்பமாக கருதும் இயல்புடையவராக இருந்தனர். அவ்வாறு உள்ளவர் ‘சான்றோர்’ என்று பாராட்டப் பெற்றனர். கலித்தொகையில்,

**பிறர் நோயும் தம்நோய் போல் போற்றி அறன்அறிதல்**
**சான்றவர்க்கு எல்லாம் கடன்** **(கலி. 139:1-2)**

என்று சான்றோரின் கடமையை உணர்த்துமிடத்து, அவர்தம் மனித நலம் பேணும் பண்பு வெளிப்படுகிறது. இக்கருத்தை அடியொற்றி திருக்குறளும்,

**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்**
**தன்நோய்போற் போற்றாக் கடை** **(குறள்.315)**

என்கிறது. பிறர் துன்பத்தைத் தமக்குற்றதாக நினைக்கும் சிந்தனையை அறிவால் பெறமுடியாது. அன்பும் இரக்கமும் கொண்ட மனத்தால் மட்டுமே பெற முடியும். இத்தகைய அன்பும் இரக்கமும் கொண்ட உள்ளம் சார்ந்த பண்புடையவராக பழந்தமிழர் வாழ்ந்துள்ளனர். அவர்களின் வாழ்க்கைப் பண்புகளை அறிந்து கொள்ள சங்க இலக்கியங்கள் துணைபுரிகின்றன.

## 1.1 வாழ்வியல் பற்றிய கருத்துரைகள்

அகம்-புறம் என்ற இரண்டின் அடிப்படையில் வாழ்க்கை அமைந்திருந்தது. அகவாழ்வை அன்புடைய இல்லறமாகவும், புறவாழ்வை வீரமிக்க வாழ்வாகவும் கொண்டு வாழ்ந்தனர். மேலும், தங்கள் வாழ்க்கையின் போக்கு மாறாமல் இருக்க, வாழ்க்கையைப் பண்படுத்தி வாழ நல்ல நெறிகளைப் பின்பற்றினர். கடலில் பயணம் செய்பவர்களுக்கு உதவும் கலங்கரை விளக்கம் போன்று வாழ்க்கையாகிய பயணத்தில் நல்வழிகாட்டும் ஒளிவிளக்காக 'நன்னெறிகள்' அமைந்திருந்தன. நன்னெறிகளை வாழ்வியல் நெறிகளாகக் கொண்டு வாழ்ந்தனர். அவர்களின் வாழ்வியல் சிந்தனைகளை ஆய்வாளர் பலர் எடுத்துரைத்துள்ளனர். சான்றாக, பண்டைத் தமிழர் வீரச் சிறப்பாலும் ஈர மாண்பாலும் மிக உயர்ந்தவராவர். பண்பாட்டாலும் பெருநிலையுற்றவர். உணவு, உடை முதல், ஆட்சிச் செம்மை, ஆன்மீகக் கோட்பாடு வரை பல்லாற்றானும் உயர்ந்த வாழ்வு பண்டைத் தமிழர் வாழ்வு (ம.ரா.போ. குருசாமி, 1974:98).

வாழ்வின் முதற்படியாக உணவு, உடை, உறையுள் என்ற மூன்றையும் கடந்து உள்ளத்தை நோக்கி நின்ற உயரிய வாழ்வு-பண்பட்டவாழ்வு சங்ககால வாழ்வு (மது.ச. விமலானந்தம், 2003:73). அடுத்து, தமிழ் இலக்கிய வாழ்வியல் எனும் ஆய்வுக் கட்டுரை 'குறிக்கோள் வாழ்க்கை' உடையது என்கிறது. எப்படியும் வாழலாம் என்ற நெறியின்றி இப்படித்தான் வாழ வேண்டும் என்ற உயர் நெறியது. வாழ்வில் அடிப்படையாக அமைந்த குறிக்கோள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றாகும் (இரா. சந்திர சேகரன், 2004:152).

தமிழர் வாழ்வியலை நாகரிகத்தோடு பொருத்திக் காண்கிறது தமிழர் நாகரிகம் எனும் நூல். அது தமிழர் வாழ்வியல் என்பதே தமிழரின் நாகரிகமாகும் (வீர. சிவராமன், 2002 : 9) என்று விளக்கம் அளிக்கிறது.

இந்த நாகரிகம் நின்று நிலவி வருவதற்குச் சிறப்புக் காரணம் உள்ளது. அது எத்துறையிலும் நல்வழியைக் கடைப்பிடித்து வருவதாகும். பன்னெடுங்காலமாகத் தமிழ்ச் சமுதாயம் எத்துறையிலும் இரண்டு எல்லைகளுக்குப் போகாமல் பெரும்பயன் விளையக்கூடிய நடுவழியைக் கடைப்பிடித்து வருகிறது. எதிலும் அளவாக மிதமாக இருப்பது நல்வாழ்விற்குரிய நன்னெறியாகும் (க.த. திருநாவுக்கரசு, 1977:14). இத்தகைய நன்னெறி தமிழரின் தனிநெறியாகக் காட்டப்படுகிறது.

நம்நெறி இயலாதவர்களுக்கு இரக்கம் காட்டுவது, காதலையும் கற்பையும் வெற்பாகப் போற்றுவது, கடமையையும் உடைமையையும் காவல் செய்வது, ஒழுக்கத்தையும் உண்மையையும் உயர்த்திப் பாடுவது. அன்பையும் அருளையும் அருமையாகப் போற்றுவது, உழைப்பையும் ஊக்கத்தையும் ஒளிப்படுத்திக் காட்டுவது, இத்தகைய சீரும் சிறப்பும் பெற்று இலங்குவதே தமிழ் நெறியாம். நம் தாயக நெறியாகும். தமிழன் கண்ட தனி நெறியாகும் (சா. மருதவாணனார், 1983 : 12) என்று பலவகைகளில் சிறப்பிக்கப்படுகிறது. இவ்வாறு பழந்தமிழரின் வாழ்வியல் நெறிகள் பல வகைகளில் சிறப்புற்று இருந்தாலும், அனைவரும் விரும்பும் பொதுவான வாழ்வியல் நெறி ஒன்று உள்ளது. அது, பிறந்து வளர்ந்து நலமுடன் எல்லாரும் வாழ்தல் வேண்டும். எல்லாரும் இன்பத்தோடு வாழவேண்டும். இவையே எல்லோருக்குமான வாழ்வியல் நெறியாகும் (கோ.விசய வேணுகோபால், 2003:49).

அனைவரும் நலமுடன் இன்பமுடன் வாழ, செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான் உள்ளது. அது, ஒருவருக்கு நல்லது செய்யவில்லை என்றாலும், தீயது மட்டும் செய்யாதீர்கள். இதனைப் புறநானூறு,

**நல்லது செய்தல் ஆற்றீராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்**
**எல்லாரும் உவப்பது அன்றியும்**
**நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே** **(புறம்.195)**

என்கிறது. தனிமனித அக்கறை இதில் மேலோங்கியுள்ளது. மேலும், நடைமுறை வாழ்க்கையில் பிறர்க்குத் துன்பத்தை உண்டாக்கி வருத்தாமல், தாம் இன்பமாக வாழ்வதோடு மற்றவரையும் மகிழ்ச்சியோடு வாழவிட வேண்டும் என்ற கருத்தை முன்வைக்கிறது. நல்ல முறையில் வாழ வழி செய்யும் இந்நெறியைத் தலையாய நெறியாக பண்டைத் தமிழர் போற்றியுள்ளனர்.

## 1.2 இல்லற மாண்பு

வாழ்வியலின் அடிப்படை இல்லறம். பண்டைத் தமிழர் இல்லறத்தை நல்லறமாகக் கொண்டனர். இல்லறப் பெருமை உணர்ந்து இனிய வாழ்வு வாழ்ந்தனர். பிறர்க்கு உதவுதல், விருந்தினரைப் பேணுதல் முதலான பண்புகளைப் போற்றினர். இல்லற வாழ்க்கையின் சிறப்பைத் தொல்காப்பியர்,

**காமஞ் சான்ற கடைக்கோட் காலை**
**யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி**
**யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்**
**சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே**

**(தொல். பொருள்.அக:192)**

என்று எடுத்துரைத்துள்ளார். மனைவி, மக்கள், சுற்றம் என உறவுகளுடன் கூடிவாழும் இன்ப வாழ்வு இல்லற வாழ்வாகும். அவ்வாழ்வில்,

**ஈதலில் குறைகாட்டாது அறன் அறிந்து ஒழுகிய (கலி.27:1)**

தன்மையோடு வாழ வேண்டும். இல்லறத்திற்கு உரிய நெறி அறநெறியாகும். அறநெறியில் தவறாது நடத்தல் வேண்டும். இதனை மதுரைக்காஞ்சி,

**அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகி (மதுரைக்காஞ்சி.500)**

என்று இல்லறத்தைச் சிறப்பிக்கின்றது. இத்தகைய சிறப்புடைய இல்லறம் சிலருக்குத் துன்பம் தருவதாக உள்ளது. இன்பம் துன்பம் இணைந்த வாழ்க்கையில், துன்பம் அதிகமாக உள்ளது என்று அவ்வாழ்க்கையை வெறுக்கக்கூடாது. துன்பத்திலும் இன்பம் காண முயலுதல் வேண்டும். துன்பத்திற்குப் பயந்து துறவு வாழ்வைத் தேடிச் செல்லக் கூடாது. துறவு வாழ்வு சுற்றம் இல்லாதவர்க்கு அமைவது. சுற்றத்தோடு இணைந்து வாழும் இல்லற வாழ்வே நன்னெறி வாழ்வாகும். இக்கருத்தை உவமை மூலம் காட்சிப்படுத்துகிறார் ஓரேருழவர். இதனை,

**அதள் எறிந்தன்ன நெடுவெண் களரின்**
**ஒருவன் ஆட்டும் புல்வாய் போல**
**ஓடி உய்தலும் கூடுமன்**
**ஒக்கல் வாழ்க்கை தட்கும்மா காலே** (புறம்.193)

என்னும் பாடல் மூலம் அறிய முடிகிறது. களர் நிலத்தில் தன்னைத் துரத்தும் வேடனிடமிருந்து மான் தப்பிப் பிழைத்து ஓடும். அது போன்று இல்வாழ்க்கையில் துன்பம் துரத்தும் போது, துறவு வாழ்க்கையை நாடி தப்பிப் பிழைக்கக் கூடும். ஆனால், அவ்வாறு போக விடாமல் தடுப்பது சுற்றத்தோடு கூடிய இல்வாழ்க்கையாகும் என்று உறவுகளுடன் ஒன்றிணைந்த இல்லற நெறியை உறுதிப்படுத்துகிறார் புலவர்.

### 1.2.1 நெறி தவறா இயல்பு

இல்லறத்தில் ஒருவர் நெறி தவறினாலும் அவர் மட்டுமன்றி, அக்குடும்பத்தில் உள்ளோரும் பழிக்கு உள்ளாகின்றனர். ஆண்மகனின் ஒழுக்க நெறி அக்குடும்பத்தின் அனைத்து நெறிகளையும் உள்ளடக்குகிறது. குடும்பம் மட்டுமன்றி உலக மேம்பாட்டிற்கும் ஆணின் ஒழுக்கம் அடிப்படையாக அமைகிறது. எனவே, நல்ல பண்புள்ள ஆடவரைப் பொறுத்தே நல்வாழ்வு அமையும். இதனை ஔவையாரும்,

**நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே** (புறம்.187)

என்று, வாழ்வின் உயர்வு தாழ்வு என்பது நிலத்தின் அடிப்படையில் அமையாது, அந்நிலத்தில் வாழும் நல்ல ஆடவரைப் பொறுத்து அமையும் என்கிறார். இங்கு நல்ல ஆடவர் என்பது அவரின் நற்பண்புகளைக் குறிப்பதாக உள்ளது. அனைவரிடமும் நெருங்கிப் பழகும் உறவு, சுற்றம் தழுவல், நட்புறவு, தாழ்ந்தவரிடத்து ஒன்றும் இரவாத நாணம் நன்கு உடைமை, பிறர்க்கு உதவுதல், உலக நடை அறிந்தொழுகும் பண்பு, முதலான பண்புகள் அவர்களிடம் இருந்தன. சான்றாக, தலைவியைக் காண்பதற்கு முன் தலைவனிடம் இருந்த நற்பண்புகளை நற்றிணை,

**நயனும் நண்பும் நாணுநன்கு உடைமையும்**
**பயனும் பண்பும் பாடுஅறிந்து ஒழுகலும்**
**(நற்றிணை, 160:1–2)**

என்று குறிப்பிட்டுள்ளது. அகநானூற்று தலைவி ஒருத்தி,

**குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்**
**கெடுநா மொழியலன் அன்பினன் எனநீ**
**வல்லகூறி வாய்வதின் புணர்த்தோய் (அகம்.352:8–10)**
. . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . .
**புதுவது புனைந்த திறத்தினும்**
**வதுவை நாளினும் இனியனால் எமக்கே (அகம்.352:16–17)**

என்கிறாள். தலைவன் தன்னைத் திருமணம் செய்த நாளினும் இப்பொழுது பெரிதும் இனிய பண்புகளுடன் உள்ளான் என்று, அவன் பண்புநலன்களைத் தோழியிடம் நினைவு கூர்கிறாள். இதில் தலைவனின் நற்பண்புகளை எண்ணி தோழியிடம் பெருமை கொள்ளும் தலைவியின் மன மகிழ்வைக் காண முடிகிறது. இவ்வாறு மனம் மகிழும் மகளிரும் தலைவன் மனம் கொள்ளும் வகையில் நற்பண்புகளைக் கொண்டிருந்தனர். அவர்களின் நற்குணங்களை எண்ணி மகிழ்ச்சியுறும் தலைமகனின் செயலை இலக்கியத்தில் காணமுடிகிறது. சான்றாக, பொருளுக்காக பிரிந்து செல்லத் தூண்டும் நெஞ்சிற்குத் தலைவியின் பண்புகளை எடுத்துரைக்கிறான் தலைவன் ஒருவன். இதனை,

**அன்பும் மடனும் சாயலும் இயல்பும்**
**என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்**
**ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி**
**இன்றே இவணம் ஆகி . . . . . . (அகம்.225:1–4)**

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. பாடல் குறிப்பிடும் நற்பண்புகளைக் கொண்ட தலைவியைப் பிரிவதற்குத் தலைவன் வருந்துகிறான்.

தலைவியின் இல்லறநெறியைக் கண்டு பெருமைப்படுகிறான் மற்றொரு தலைவன். அவனும் பொருள்வயிற் பிரிவில் அவளின் குணங்களை நினைவு கூர்கின்றான். சான்றாக,

**விருந்து ஒழிவு அறியாப் பெருந்தண் பந்தர்**
**வருந்தி வருநர் ஓம்பி (அகம். 353:17-18)**
. . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
**நம்மொடு நன்மொழி நவிலும்**
**பொம்மல் ஓதிப் புனைஇழை குணனே (அகம்.353:22-23)**

என்ற பாடல்கள் மூலம் காணமுடிகிறது. தலைவியின் விருந்து பேணும் சிறப்பும், பணிவான மொழி பேசும் இயல்பும் கண்டு தலைவன் இன்புறுகிறான். இவ்வாறு திருமணத்திற்கு முன்னும் பின்னும் அவர்களிடம் நற்பண்புகள் பல அமைந்திருந்தன.

## 1.3 நெறிப்படுத்தும் பண்புகள்

அக்கால மக்கள் அனைவருக்கும் பொதுவான பண்புகளும் இருந்துள்ளன. அவர்களின் வாழ்க்கையை நெறிப்படுத்தும் வகையில் அவை துணைபுரிந்தன. வாழ்வியலை நெறிப்படுத்தும் பண்புகளைக் கலித்தொகையில் அமைந்த பாடல் பின்வருமாறு காட்சிப்படுத்துகிறது.

**ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பண்பு எனப்படுவது பாடுஅறிந்து ஒழுகுதல்**
**அன்பு எனப்படுவது தன்கிளை செறாஅமை**
**அறிவு எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்**
**செறிவு எனப்படுவது கூறியது மாறாஅமை**
**முறை எனப்படுவது கண்ணோடாது உயிர் வௌவல்**
**பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்**
**(கலி. 133:6-14)**

இப்பாடலின் வழி, 1. ஒருவரின் துன்பத்தைப் போக்குதல் 2. நட்பு கொண்டவரைப் பிரியாமல் இருத்தல் 3. உலகம் அறிந்து நடத்தல் 4. உறவினரிடம் கோபம் கொள்ளாது இருத்தல் 5. அறியார் முன் பொறுமை கொள்ளுதல் 6. வாய்மை தவறாதிருத்தல் 7. மறைவான ஒன்றைப் பாதுகாத்தல் 8. நடுவுநிலையுடன் இருத்தல் 9. போற்றார் முன் பொறுமை கொள்ளுதல்

போன்ற நற்பண்புகளின் மூலம் ஒரு நல்ல சமூகத்தைப் பழந்தமிழர் உருவாக்கினர் என்பது தெரிகிறது. இப்பண்புகள் நிலைபெற்று இருப்பதனாலே இவ்வுலகமும் நிலைபெற்றிருக்கிறது என்கிறது புறநானூறு. இதனை,

**உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத்**
**தமியர் உண்டலும் இலரே ; முனிவு இலர்**
**துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சி**
**புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்**
**அன்ன மாட்சி அனையர் ஆகி**
**தமக்கென முயலா நோன்தாள்**
**பிறர்க்கென முயலுநர் உண்மையானே (புறம்.182)**

என்று சான்றோரின் சான்றாண்மையைப் போற்றுகிறது.

தனக்கென்று எதுவும் கொள்ளாது, பிறர்க்காக வாழும் நற்பண்பு உடையவராலே இவ்வுலகம் இன்றும் நிலைத்திருக்கிறது என்றால், அத்தகைய பொதுநல நோக்குடையவராக பழந்தமிழர் இருந்துள்ளனர். பெறற்கரிய அமிழ்தே கிடைத்தாலும் தனித்து உண்ணாது ஒன்றுகூடி உண்ணும் கூட்டுறவை நோக்கும்போது அவர்களின் நல்லுணர்வு வெளிப்படுகிறது. கோபம், சோம்பல், மனக்கவலை இல்லாது அவர்களின் அன்பும் ஊக்கமும் நிறைந்த உள்ளத்தைக் காணமுடிகிறது. புகழ் தரும் செயலுக்கு உயிர் கொடுக்கும் மாண்பை, பழிதரும் செயலாயின் உலகத்தையே பரிசாகக் கொடுத்தாலும் ஏற்க மறுக்கும் மனஉறுதியை அறிய முடிகிறது. மேலும், அவர்களின் உளவளம், வாழ்க்கை நலம் சிறக்க முக்கிய காரணமாக அப்பண்புகள் அமைகின்றன என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு பழந்தமிழரின் வாழ்க்கையை நெறிப்படுத்தும் இப்பண்பின் முக்கியத்துவத்தை அணிகலன்களோடு ஒப்பிடுகிறது குறிஞ்சிப்பாட்டு. இதனை,

**முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை**
**நேர்வரும் குரைய கலம்கெடின் புணரும்**
**சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்**
**மாசு அறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்**
**ஆசு அறுகாட்சி ஐயர்க்கும் அந்நிலை**
**எளிய என்னார் தொல்மருங்கு அறிஞர்**
(குறிஞ்சிப்பாட்டு.13–18)

என்ற பாடல் மூலம் அறியலாம். எந்தத் தவற்றிற்கும் கழுவாய் உண்டு. ஆனால் நற்பண்புகளை இழந்தவர்க்கு எந்தக் கழுவாயும் இல்லை என்கிறது. முத்து, மணி, பொன் ஆகியவற்றால் செய்த அணிகலன்களில் குறைவு ஏற்பட்டால் அதனைச் சீர்செய்து கொள்ளலாம். ஆனால் தம் குலத்திற்கு ஏற்ற குணங்களின் அமைதியும், மேம்பாடும், ஒழுக்கமும் தம் இயல்பிலிருந்து கெட்டால் அதனை மீண்டும் நிலைநிறுத்தல் என்பது கடினமாகும். ஒருவேளை அணிகலன்களை இழந்தாலும் மீண்டும் அவற்றைப் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் குணங்களை இழந்த வழி மீண்டும் அவற்றைப் பெறுதல் இயலாது. மேலும், நீங்கிய பண்பை மீண்டும் நிலைநிறுத்தி காண்பது என்பது முனிவர்க்கும் இயலாத காரியம் என்கிறது. இதிலிருந்து பண்பிற்கு அக்காலத்தவர் கொடுத்த இன்றியமையாமையை அறிய முடிகிறது. செல்வத்தைவிட பண்பே போற்றி பாதுகாக்கப்பட்டுள்ளது.

## 1.4 நற்பண்பின் தன்மை

ஒருவரின் நற்குணங்களை நற்செயல்களைப் பாராட்டுவது இயல்பு. அவரின் குணங்களை, செயல்களைப் பிற பொருள்களோடு ஒப்பிட்டுப் பெருமைப்படுவதும், பெருமைப்படுத்துவதும் உண்டு. சிறந்த பண்புடையவரை இயற்கைப் பொருளோடு ஒப்பிட்டு அவரின் பண்புநலன்கள் பாராட்டப் பெற்றுள்ளன. சான்றாக, புறநானூற்றில் உதியஞ்சேரலாதனின் பண்பின் சிறப்பை,

**மண்திணிந்த நிலனும்**
**நிலன் ஏந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித் தலைஇய தீயும்**
**தீ முரணி நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கைபோல**
**போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்**
**வலியும் தெறலும் அளியும் உடையோய்** (புறம்.2:1–8)

என்று பஞ்சபூதத்தின் செயலோடு ஒப்பிட்டுப் பாராட்டியுள்ளார் முரஞ்சியூர் முடிநாகராயர். கடலின் ஆழம், காற்று வீசும் திசை, ஆகாயம் என்ற இவற்றை அளந்து அறிந்து கூறலாம். ஆனால் அறிவும் அருளும், கண்ணோட்டமும் கொண்ட யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையை ஆராய்ந்து கூறமுடியாது என்கிறார் குறுங்கோழியூர் கிழார். இதனை,

**இரு முந்நீர்க் குட்டமும்**
**வியல் ஞாலத்து அகலமும்**
**வளி வழங்கு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றாங்கு**
**அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியை**
**அறிவும் ஈரமும் பெருங் கண்ணோட்டமும்       (புறம்.20:1-6)**

என்று குணங்களுக்கு உவமை கூறியதுடன் இயற்கையை அளப்பினும் குணங்களை அளத்தல் அரிது என்பதிலிருந்து அளவிட இயலா இயல்புடைய பண்பின் உயர்வை உணர முடிகிறது.

இவர்களைப் போன்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் (பதிற்.14:1-2) பல்யானைச் செல்கெழு குட்டுவனும் (பதிற். 24:15-16) இயற்கைப் பொருளோடு பெருமைப்படுத்தப்பட்டுள்ளனர். பாரியின் கைவண்மையை மழையின் வண்மையோடு ஒப்பிட்டு, அவன் கொடைப் பண்பைச் சிறப்புப் படுத்தியுள்ளதும் (புறம்.107) நோக்கத்தக்கது. இவ்வாறு நற்குணம் உள்ள அரசரின் செயலை எண்ணி அவர்களுக்கு அளித்த சிறப்பை உணர முடிகிறது. அடுத்து, பண்பு கொண்டவரைச் சிறப்பித்த இலக்கியங்கள் அப்பண்பு இல்லாதவர் அடையும் இழிவையும் விளக்கியுள்ளது.

**அருளும் அன்பும் நீங்கி நீங்கா**
**நிரயம் கொள்பவரொடு ஒன்றாது       (புறம். 5:5-6)**

என்பதில் அருளும் அன்பும் இல்லாதவர் நரகம் அடைவர் என்பதும், அத்தகைய துன்பத்திற்கு ஆளாகாமல் நற்பண்புகளை மேற்கொள்ள வேண்டும் என்ற சான்றோரின் அறிவுரையும் தெரிகிறது.

## 1.5 வாய்மை

பொய் பேசாது உண்மையுடன் நடத்தல் வாய்மை ஆகும். பிறர்க்குத் தீமை ஏற்படாத சொற்களைப் பேசுதல் (குறள்:291). தன் மனம் அறிந்தவற்றைப் பொய்யாது சொல்லுதல் (குறள்:293) வாய்மை ஆகும். இது, தவறு ஏற்படாதவாறு, தவறு நடக்காதவாறு காப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. பழந்தமிழரிடம் இப்பண்பு பெரிதும் போற்றப்பட்டது. நிலமே பெயர்ந்தாலும் பொய் பேசாது வாய்மையுடன் நடக்க வேண்டும் என்ற சிந்தனை, சான்றோரால் வலியுறுத்தப்பட்டுள்ளது. சான்றாக, நற்றிணையில் தலைவன் கூறிய சொல்லிலிருந்து மாறுபடாதவன் குறித்த காலத்தில் வருவான் என்ற நம்பிக்கை கொண்ட தலைவி,

**அம்ம வாழி தோழி காதலர்**
**நிலம் புடை பெயர்வதாயினும் கூறிய**
**சொல் புடை பெயர்தல் இலரே** **(நற்.289:1–3)**

என்று அவன் வாய்மையை உயர்வுபடுத்துகிறாள். புறநானூற்றில், இரும்பிடர்த் தலையார்,

**நிலம் பெயரினும் நின்சொல் பெயரல்** **(புறம்.3:14)**

என்று பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதியின் வாய்மையைச் சிறப்பிக்கின்றார். பதிற்றுப்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனின் வாய்மையைக் கூறுமிடத்து,

**நிலம் திறம் பெயரும் காலையாயினும்**
**கிளந்து சொல்நீ பொய்ப்பு அறியலையே** **(பதிற்.63:6–7)**

என்று அவனது ஆணையாகிய சொல் தவறாது நிலைக்க வேண்டும் என்கிறார் கபிலர். அச்சேரன் விளையாட்டிற்குக் கூட பொய் பேச அறியாதவன் (பதிற்.70:12) என்று அவன் வாய்மையைச் சிறப்பிக்கின்றார். விளையாட்டிற்கு மட்டுமல்ல, கனவிலும் பொய் கூறுதலை அறியாதவன் என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வாய்மையை வியக்கின்றார் குமட்டூர் கண்ணனார்.

**கண்ணின் உவந்து நெஞ்சு அவிழ்பு அறியா**
**நண்ணார் தேஎத்தும் பொய்ப்பு அறியலனே**
**கனவினும் . . . . . . . . .** **(பதிற்.20:8–10)**

இதில், கண்ணிலே மகிழ்ச்சி கொண்டு, உள்ளத்தில் மலர்ச்சியில்லாமல், பகை கொண்டவரிடத்தும், கனவிலும் பொய் பேசுதலை அறியாதவன் என்கிறார். அரசியல் காரணமாகப் பொய் கூற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டாலும், வாய்மைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சேரனின் உண்மையான பண்பைக் காண முடிகிறது. பொய் மொழியைக் கேட்டறியாதவன். உண்மை மொழிகளைப் பேசுபவன் (மதுரை.19-23) தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று, அவன் பண்பைப் பாராட்டுகிறது மதுரைக்காஞ்சி. அவனது உண்மையான நட்பை மாங்குடி மருதனார்,

**உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்**
**பொய் சேண் நீங்கிய வாய் நட்பினையே**

**(மதுரைக்காஞ்சி.197–198)**

என்கிறார். ஒரு பொய் கூறினால் தேவருலக அமிழ்தம் கிடைக்கப்பெறும் என்ற நிலை ஏற்படினும், உண்மையைப் பேசி மெய்யான நட்புக்கொள்பவன் என்று, அவனது உண்மையின் உயர்திறத்தைப் போற்றுகிறார். இவர்களைப் போன்றே பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறனும் (புறம்.59:4), வெளிமானும் (புறம்.237:4), பெருஞ்சேரல் இரும்பொறையும் (பதிற்.79:5) வாய்மையுடைவர்களாக சான்றோர்களால் போற்றப்பட்டுள்ளனர். அரசர்கள் மட்டுமன்றி, புலவர்களும் வாய்மையோடு வாழ்ந்தனர். வறுமையுற்ற போதிலும் உயிர் வாழ்வதற்காக பொய் கூறாதவர்கள். சான்றாக, நாஞ்சில் வள்ளுவனிடம் தம் வறுமையின் துன்பத்தை எடுத்துக்கூறி, பரிசில் பெறுவதற்காக வருகிறார் மருதன் இளநாகனார். அப்பொழுது,

**சுவல் அழுந்தப் பலகாய**
**சில் ஓதிப் பல்இளைஞருமே**
**அடிவருந்த நெடிது ஏறிய**
**கொடி மருங்குல் விறலியருமே**
**வாழ்தல் வேண்டிப்**
**பொய் கூறேன் மெய் கூறுவல்** **(புறம்.139:1–6)**

என்று வறுமையில் துன்புற்ற போதும் சான்றாண்மை தவறாத உண்மை வாழ்க்கையைக் குறிப்பிடுகிறார். பொய்யற்ற அவர்களின் வாழ்க்கைக்குச் சான்றாக, புறநானூற்றில் மற்றொரு பாடலைக் கூறலாம்.

**பீடுஇல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டி**
**செய்யா கூறிக் கிளத்தல்**
**எய்யா தாகின்று, எம்சிறு செந்நாவே (புறம்.148:5-7)**

என்கிறார் வன்பரணர். பிறர்க்கு ஈயும் பெருமை இல்லாத அரசனின் புகழ்ச்சியைப் பெற விரும்பி, அவன் செய்யாதவற்றைச் செய்தான் என்று கூறாத, பண்புடைய நாவின் பண்பை எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறு, அரசர்களின் வாய்மைப் பண்பைப் பாராட்டிய புலவர்கள், தாங்களும் வாய்மையில் சிறந்தவர்கள் என்று, தங்களின் பண்பை வெளிப்படுத்தியிருக்கின்றனர். இவ்விரண்டு வகையில் இல்லாது, புலவர் ஒருவர் மற்றொரு புலவரின் வாய்மையைச் சிறப்பித்துள்ளார். மாறோக்கத்து நப்பசலையார் கபிலரைப் பற்றிக் குறிப்பிடும் போது,

**பொய்யா நாவின் கபிலன் (புறம்.174:10)**

என்று பாராட்டுகிறார். இப்பாராட்டுரை அவர்களின் பரந்த மனப்பான்மையை, ஒற்றுமையைக் காட்டுவதாய் உள்ளது. இவ்வாறு நிலம் பெயர்ந்தாலும், அமிழ்தம் பெற்றாலும், வறுமையுற்றாலும் வாய்மையில் பிறழாதவர்களாகப் பழந்தமிழர் வாழ்ந்துள்ளனர். அவ்வாறு அவர்கள் வாழ்ந்ததை நோக்குமிடத்து,

**உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்**
**உள்ளத்து ளெல்லா முளன் (குறள்.294)**

என்ற குறள் வழி, இன்றும் ஒப்பிட்டு பார்க்கும் நிலையில் பிறர் வியக்கும் வகையில் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

## 1.6 நட்பும் நட்பு கொள்ளும் முறையும்

மனிதன்-சமூகம்-நாடு-உலகம் என இவை அமைதியாக ஒற்றுமையாக இயங்க 'நட்பு' என்ற பண்பு அவசியமாகும். இப்பண்பு இல்லாதவர் குடும்பத்தோடும், சமூகத்தோடும் ஒட்டாது தனித்து இருப்பர். உணர்வுகளை நண்பரிடம் பகிர்ந்து கொள்ள இயலாது தனிமையில் வருந்துவர். நட்பு, துன்பத்தையும் பகையையும் போக்க வல்லது.

மனிதப் பண்புகளில் சிறந்த பண்பு நட்பு. ஒவ்வொருவரும் தமது விருப்பம்,தம் மனத்திற்கேற்ற வகையில் நட்பு பாராட்டுகின்றனர். நட்பு உண்மை உடையதாக, நற்குணமுடையதாக இருக்க வேண்டும். நல்லவர் நட்பை ஆராய்ந்து கொள்ள வேண்டும். நட்பு கொண்ட பின் அவரின் குணங்களை ஆராய்தல் கூடாது. நற்றிணையில்,

**. . . . . . . . . . . . . . . பெரியோர்**

**நாடி நட்பின் அல்லது**

**நட்டு நாடார் தம்ஒட்டியோர் திறத்தே (நற்.32:8–9)**

என்று சான்றோர் நட்பு கொள்ளும் முறையைக் கபிலர் விளக்கியுள்ளார். வள்ளுவரும் இக்கருத்தை,

**நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்**

**வீடில்லை நட்பு ஆள்பவர்க்கு (குறள்:791)**

என்று வலியுறுத்தியுள்ளார். ஆராய்ந்து மேற்கொள்ளும் நட்பு முறையை இவை விளக்குகின்றன. என்றாலும், நட்பை, நட்புடையவரை எத்தன்மையில் ஆராய வேண்டும் என்ற வினா எழுகிறது. அதற்கு விடை அளிக்கும் வகையில் சோழன் நல்லுருத்திரனின் கருத்துகள் அமைந்துள்ளன. நட்பு கொள்ளத்தகாதவர், நட்பு கொள்ளத்தக்கவர் என இருவகையில் ஆராய்கிறார். ஒன்று, நட்பு கொள்ளத் தகாதவரிடம் உள்ள பண்புகளை இனம் காட்டுகிறார். அடுத்தவர் உழைப்பின் செல்வத்தை மறைமுகமாகப் பறித்துக் கொள்ளும் நட்பையும், குறுகிய உள்ளமும், தன்னலமும் சூழ்ச்சியும் உள்ளவரின் நட்பையும் விலக்க வேண்டும் என்கிறார். அதற்கு எலியின் செயலை உவமைப்படுத்துகிறார்.

தனக்கென உழைத்து உணவைத் தேடிக் கொள்ளாமல் அடுத்தவர் உழைத்த வயலில் சென்று நெல்லைக் கொண்டு வந்து சேமித்து வைக்கும் தன்மை உடையது எலி. முயற்சி இல்லாத இதன் செயலை,

**விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்**
**வல்சி கொண்டு அளைமல்க வைக்கும்**
**எலி முயன்றனையர் ஆகி உள்ள தம்**
**வளன் வலியுறுக்கும் உளம் இலாளரொடு**
**இயைந்த கேண்மை இல்லாகியரோ** (புறம்.190:1–5)

என்று குறிப்பிடுகின்றார். உயர்ந்த எண்ணம் இல்லாதவரின் நட்பை மேற்கொள்ளக் கூடாது என்று பாடல் மூலம் வலியுறுத்துகிறார். இரண்டாவது, நட்பு கொள்ளத்தக்கவரின் செயலைப் புலியின் செயலோடு ஒப்பிடுகிறார். புலி வேட்டையாடும் போது, பன்றி இடப்பக்கமாக வீழ்ந்தது. புலி மிகுந்த பசியுடன் இருந்த போதும், பன்றி இடப்பக்கமாக வீழ்ந்ததால் அதனை உண்ணாது சென்றது. ஆனால், சோம்பலில்லாமல் முயற்சியுடன் அடுத்த நாள் யானையை வீழ்த்தி அதனை உண்டது.

இப்புலியின் செயலைப் போன்று முயற்சியும் வலிமை உள்ளமும் கொண்டவரின் நட்பையே கொள்ள வேண்டும் (புறம்.190.6-12) என்கிறார். இவர்கள், நண்பர்கள் சோர்வுற்று துன்புற்று இருந்தால் அதனை மாற்றி அவர்களிடம் ஊக்கத்தை முயற்சியை உருவாக்கி முன்னேற்றுவார்கள். ஆனால் எலி போன்று பிறர் உழைப்பை ஏமாற்றி, தன்னலம் கொள்பவர் தான் மட்டும் முன்னேறினால் போதும் என்ற எண்ணம் உடையவர். இத்தகைய பண்புடையவரால் எந்தப் பயனுமில்லை.

வள்ளுவரும், ஆராயாது நட்பு கொண்டால் அந்நட்பு துன்பம் தரும் என்கிறார். எத்தகைய துன்பம் என்றால், அது சாவதற்குக் காரணமாகிய துன்பத்தைத் தரும் (குறள்.792) என்று, தீயநட்பு அழிவுக்கு கொண்டு செல்லும் அவலத்தைக் குறிப்பிடுகிறார். எனவே, ஆராய்ந்து நற்குணம் உள்ளவரோடு நட்பு பாராட்டல் அவசியமாகும் என்பதை அக்காலத்தவர் வலியுறுத்தியுள்ளனர்.

### 1.6.1 உயிரும் நட்பும்

நண்பனுக்காக தன் உயிரையும் கொடுக்கும் நட்பு சிறந்த நட்பாகும். நட்புடையவர் நஞ்சைக் கொடுத்து இறக்கச் சொன்னாலும், அதனையும் ஏற்றுக் கொள்ளும் நட்பு உண்மை நட்பாகும். உண்மையான நட்பு நிலையை வேண்டுபவரின் செயலாக இதை நற்றிணைக் குறிப்பிடுகிறது.

**முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்** (நற்.355:6-7)

என்பதில் நட்பின் ஆழத்தை அறிய முடிகிறது. நட்புக்குரிய நாகரிகத்தைப் பேணும் இச்சிறப்பைக் (குறள்.580) குறளிலும் காண முடிகிறது. உயிரை விட நட்பு பெரியது என்ற கருத்தை இவை வலியுறுத்துகின்றன. ஆனால், நட்பில் உயிரும் சிறந்தது எனும்படி அதியமான் ஔவையார் நட்பு அமைந்திருந்தது. தன் உயிரை விட ஔவையாரின் உயிரைப் பெரிதாகக் கருதினான் அதியன். அவர் நீண்ட நாள் உயிர் வாழ விரும்பி இறவா கனியான நெல்லிக்கனியை அளித்தான். அப்போது ஔவையார்,

**. . . . . . . . . . . . . . நீயே தொல்நிலைப்**
**பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனிகுறியாது**
**ஆதல்நின் அகத்து அடக்கி**
**சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே** (புறம்.91:7-11)

என்று நட்பின் உயர்வை எண்ணி மகிழ்ந்தார். இவர்களைப் போன்று கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பும் குறிக்கத் தக்கதாகும். இவ்விருவரும் ஒருவரை ஒருவர் பார்க்காமல், பழகாமல் மனத்தால் நட்புக் கொண்டவர்கள். நண்பனை, நண்பனின் குணத்தை, நட்பின் நம்பிக்கையை வெளிப்படையாக பாராட்டும் அளவிற்கு நட்புடையவர்களாக இருந்தனர். நட்பின் நம்பிக்கையைக் கோப்பெருஞ்சோழன்,

**தென்னம் பொருப்பன் நல்நாட்டுள்ளும்**
**பிசிரோன் என்ப என் உயிர் ஓம்புநனே**
**செல்வக் காலை நிற்பினும்**
**அல்லற் காலை நில்லன் மன்னே** (புறம்.215:6-9)

என்று எடுத்துரைக்கிறான். பல ஆண்டுகள் நெருங்கிப் பழகினும், நண்பர்களிடையே நெருக்கம் அமைதல் கடினம் என்ற எண்ணத்தை நீக்கி தன் நண்பனின் நற்குணத்தை வெளிப்படுத்துகிறான். சான்றாக,

**இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்**

**புகழ்கெட வருஉம் பொய் வேண்டலனே**

**தம்பெயர் கிளக்கும் காலை என்பெயர்**

**பேதைச் சோழன் என்றும் சிறந்த**

**காதற் கிழமையும் உடையன் அதன் தலை**

**இன்னது ஓர்காலை நில்லன்**

**இன்னே வருகுவன். . . . . . . .** *(புறம்.216:6-12)*

என்று நண்பனின் நட்புத் திறத்தைப் பெருமைப் படுத்துகிறான் கோப்பெருஞ்சோழன். பிசிராந்தையாரும் கோப்பெருஞ்சோழனைப் பற்றிக் கூறும் போது, அவனையும் அவனுடைய நட்பின் மகிழ்வையும் வெளிப்படுத்துகிறார்.

இதனை,

**கோழியோனே கோப்பெருஞ்சோழன்**

**பொத்துஇல் நண்பின் பொத்தியொடு கெழீஇ**

**வாய்ஆர் பெருநகை வைகலும் நக்கே** *(புறம்.212:8-10)*

என்ற பாடலில் காணமுடிகிறது. கோப்பெருஞ்சோழன் பொத்தியார் என்ற புலவரோடு நட்பு கொண்டு மகிழ்வுடன் இருந்ததைக் குறிப்பிடுகிறார். இருவரும் ஒருவர் மற்றவரின் நற்குணங்களைப் பாராட்டி அமைகின்றனர். இவ்வாறு பாராட்டிக் கொள்ளும் இவர்களின் நட்பின் உண்மையை எண்ணி, சான்றோர் பலர் வியக்கின்றனர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்விடும் நிலையில், தன் நண்பர் தன்னைக் காண வருவார் என்று கூறினான். அவன் கூறியவாறு, வேற்று நாட்டில் வாழும் பிசிராந்தையாரும் வந்தார். வருவான் என்று அரசன் துணிந்து கூறியதும், கூறியபடி வந்த பிசிராந்தையாரின் வருகையும் சான்றோர்க்கு வியப்பை அளித்தது. இதனை,

. . . . . . . . . . . . . . . பிறன் நாட்டுத்

தோற்றம்சான்ற சான்றோன் போற்றி

இசை மரபு ஆக நட்பு கந்து ஆக

இனையது ஓர்காலை ஈங்கு வருதல்

வருவன் என்ற கோனது பெருமையும்

அது பழுது இன்றி வந்தவன் அறிவும்

வியத்தொறும் வியத்தொறும் வியப்பு சிறந்தன்றே

அதனால்தன் கோல் இயங்காத தேயத்து உறையும்

சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றுஇசை

அன்னோன். . . . . . . . . . . . . (புறம்.217:3-12)

என்ற வரிகளின் மூலம் அறியலாம். இருவரின் நட்பின் உண்மையை வியந்து பெருமைப்படுகிறார் பொத்தியார். வேற்று அரசனது நாட்டில் வாழ்ந்த பிசிராந்தையார் சோழனிடம் நட்புக் கொண்டதையும், தன் அரசு செல்லாத நாட்டில் வாழ்ந்த பிசிராந்தையார் மீது சோழன் நட்புக் கொண்டதையும் நோக்கும் போது, நட்புக்குக் காலம், இடம் தேவையில்லை என்பதும், உண்மையான அன்பு மட்டும் போதும் என்பதும் தெளிவாகிறது.

இவர்களின் நட்பின் சிறப்பை உவமையோடு பொருத்திக் காண்கிறார் கண்ணகனார். பொன்னும், பவளமும், முத்தும், இரத்தினமும் வெவ்வேறு இடங்களிலே தோன்றினாலும் அவை அணிகலன் செய்யும் போது, ஓரிடத்திலே அமைவது போல, சான்றோர் சான்றோரையே சேருவர் (புறம்.218) என்று சோழனுடன் வடக்கிருக்கும் பிசிராந்தையாரைப் பாராட்டுகிறார். இவ்வாறு, இவர்களின் நட்பின் பண்பைக் காணுமிடத்து,

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்

நட்பாம் கிழமை தரும் (குறள்.785)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து

அகநக நட்பது நட்பு (குறள்.786)

ஆகிய குறள்களுக்கு உயிர் கொடுக்கும் வகையில் வாழ்ந்தவர்கள் எனில் அது மிகையாகாது.

### 1.6.2 உயிர் வாழ விரும்பாமை

தம் மக்களொடு மாறுபட்டு வடக்கிருந்த சோழனோடு பொத்தியாரும் உடன் இருந்து உயிர் விட விரும்பினார். ஆனால் சோழன் இறக்கும் போது, தானும் இறக்கவில்லையே என வருந்துகிறார்.

**புகழ்சால் புதல்வன் பிறந்து பின்வா என**
**என் இவண் ஒழித்த அன்பிலாளா!**
**எண்ணாது இருக்குவை அல்லை**
**என் இடம் யாது? (புறம்.222:3-6)**

என்று தான்நோன்பு இருந்து இறத்தற்குரிய இடத்தைத் தருமாறு வேண்டுகிறார். பொத்தியாரைப் போன்று கபிலரும் பாரி இறந்த போது, பாரியின் மகளிர்க்குச் செய்ய வேண்டிய கடமையின் பொருட்டு அவனுடன் இறக்க முடியவில்லையே என வருந்துகிறார்.

இது,

**மலைகெழு நாட மாவண் பாரி!**
**கலந்த கேண்மைக்கு, ஒவ்வாய் நீ ஏற்**
**புலந்தனை ஆகுவை-புரந்த ஆண்டே**
**பெருந்தகு சிறப்பின் நட்பிற்கு ஒல்லாது**
**ஒருங்கு வரல்விடாது; ஒழிக எனக் கூறி**
**இனையை ஆதலின் நினக்கு மற்று யான்**
**மேயினேன் அன்மையானே; ஆயினும்**
**இம்மை போலக் காட்டி உம்மை**
**இடை இல் காட்சி நின்னோடு**
**உடன் உறைவு ஆக்குக உயர்ந்த பாலே (புறம்.236:3-12)**

என்ற பாடலில் வெளிப்படுகிறது. இப்பிறப்பில் தொடர முடியாத நட்பு மறுபிறவியிலாவது தொடர வேண்டும் என்று விரும்புகிறார். ஔவையாரும் அதியனின் இறப்பிற்கு வருந்துகிறார்.

**இல்லாகியரோ காலை மாலை**
**அல்லாகியர் யான் வாழும் நாளே (புறம். 232:1-2)**

என்கிறார் ஔவையார். அதியன் இல்லாததால் காலைப் பொழுதும் மாலைப் பொழுதும் இல்லாமல் போகுக என்று கூறுவதுடன், அவனின்றி தன் வாழ்நாளும் பயனற்றதாகும் என்று அவன் பிரிவை எண்ணித் துன்பப்படுகிறார். இவ்வாறு இவர்கள் இறந்து நடுகல்லாகும் அவ்விடத்தில் தம் பழமையான நண்பர்கள் தாமும் உடன்வர இடம்கேட்டால், சிறந்த நட்புரிமை உடையவர்கள் அவ்விடத்திலும் இடமளிப்பர். இத்தகைய நட்புரிமை உடையவனான சோழனும் தான் நடுகல்லாகிய போதும் அவ்விடத்தில் தன் இனிய நண்பர்களுக்கு இடமளித்தான். இவ்வாறு இடமளித்த அவனுக்கும் அவனுடன் உறைபவர்களுக்கும் இருந்த உடலும் உயிரும் ஒன்றிணைந்த நட்பின் பெருமிதத்தைப் பொத்தியார்,

**. . . . . . . . . . . . . . சிறுவழி மடங்கி**
**நிலைபெறு நடுகல் ஆகிய கண்ணும்**
**இடம் கொடுத்து அளிப்ப மன்ற உடம்போடு**
**இன்உயிர் விரும்பும் கிழமைத்**
**தொல் நட்புடையார் தம்முழைச் செலினே (புறம். 223:2-6)**

என்ற பாடல்வழி உணர்த்துகிறார்.

### 1.6.3 உதவும் பண்பு

ஒருவர் துன்புற்று இருக்கும்போது அவர்க்கு உதவுதல் மனிதநேயப் பண்பு. நண்பர்கள் என்னும்போது அது கடமையாகிறது. இக்கடமையோடு நட்புறவு கொள்பவர் இருந்தாலும், துன்ப நேரத்தில் ஒதுங்கிக் கொள்பவரும் உள்ளனர். இன்று சிலருடைய நட்பு அரட்டையடிப்பதாக, பொழுதுபோக்குவதாக அமைகிறது. இதற்கு நட்பாக அமையும் நண்பர்களின் பண்பு, சூழ்நிலை போன்றவற்றைக் காரணமாகக் கூறலாம்.

பழந்தமிழரின் நட்பு அன்புமிக்கதாக, உரிமையுடையதாக, உதவி செய்வதாக, உண்மையுடையதாக, நம்பிக்கைக் கொண்டதாக மகிழ்ச்சிக்

கொள்வதாக அமைந்திருந்தது. சான்றாக, பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும்பொறையின் அன்பினை நீரின் இயல்போடு உவமிக்கிறார்.

**ஈரம் உடைமையின், நீர் ஓரனையை; (பதிற்.90:14)**

என்று அவனின் கருணைமிக்க உள்ளத்தை வெளிக்காட்டுகிறார். ஆத்திரையார் ஆதனுங்கனிடம் கொண்ட அன்பு உயிரோடு உள்ளத்தோடு ஒன்று கலந்து சிறப்புடையதாய் உள்ளது. என் மனத்தைத் திறந்தால் அதில் நீ இருப்பாய். உன்னை மறக்கும் காலம் ஒன்று இருந்தால் அது என் உயிர் என் உடலை விட்டு நீங்கும் காலம்' (புறம்.175:1-5) என்று கூறுவதன் மூலம் அவரின் அன்பின் மிகுதியை, நட்பின் உறுதித் தன்மையை உணர முடிகிறது.

துன்புற்ற தமது நண்பரின் துன்பத்தைத் தீர்ப்பது தம் கடமையெனக் கருதினப் பண்பையும் காணமுடிகிறது. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் தம்மிடம் நட்புடையவரின் துன்பத்தை நீக்கி, உதவும் பண்புடையவன் (புறம்.373:35-36) என்று கோவூர் கிழாரால் போற்றப்படுகிறான். கூத்தரைப் பாதுகாக்கும் தலைவன் அஃதை துன்பமடைந்தபோது, அவனின் துன்பத்தை நீக்க கோசர்கள் முற்பட்டனர். நட்பின் இயல்பில் மாறாத அக்கோசர்களின் செயலைத் தலைவியின் கூற்றில் அமைத்துள்ளார் கல்லாடனார்.

**நன்று அக்காலையும் நட்பின் கோடார்**
**சென்ற வழிப்படூஉம் திரிபுஇல் சூழ்ச்சியின்**
**புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்**
**மாவீசு வண்மகிழ் அஃதை போற்றி**
**காப்புக் கைந்நிறுத்த பல்வேல் கோசர் (அகம்.113:1–5)**

அஃதையைத் துன்பத்திலிருந்து காப்பாற்றி, காவல் மிக்க இடத்தில் அவனைக் காத்தனர். வள்ளுவரும், நண்பரின் துன்பத்தை நீக்கும் இத்தகைய நட்பின் முக்கியத்துவத்தை உணர்ந்து,

**செயற்கரிய யாவுள நட்பினது போல்**
**வினைக்கரிய யாவுள காப்ப (குறள்.781)**

என்று பகைவர் செய்யும் துன்பத்தைத் தடுத்து, பாதுகாவலாக அமைவது நட்பின் சிறப்பாகும் என்கிறார். பாரி இறந்தவுடன் அவனுடைய மகளிரைக் காப்பாற்றிய கபிலரின் (புறம். 280:8-15) நட்புறவும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

போரில் வஞ்சினம் கூறி வருந்தும் நிலையில் நட்புறவு இருந்துள்ளது. போரில் வெற்றி அடையாவிட்டால், தன் நட்பின் மகிழ்ச்சிக்குத் துன்பம் செய்தவன் ஆகுக என்று வஞ்சினம் கூறுகிறான் பூதப்பாண்டியன். மாவன், ஆந்தை, அந்துவன், சாத்தன், அழிசி, இயக்கன் ஆகியோர் பூதப்பாண்டியனின் நண்பர்கள். தான் தோல்வியுற்றால் இவர்களின் நட்பின் இன்பத்தை இழந்தவன் ஆவேன் என்று வஞ்சினம் கூறுமளவிற்கு அவனுடைய நட்பின் ஆழம் அமைந்துள்ளது. இதை,

**. . . . . . . . . . . . . . . . . . . மலிபுகழ்**
**வையை சூழ்ந்த வளம்கெழு வைப்பின்**
**பொய்யா யாணர் மையற் கோமான்**
**மாவனும் மன்எயில் ஆந்தையும் உரைசால்**
**அந்துவஞ் சாத்தனும் ஆதன் அழிசியும்**
**வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்**
**கண்போல் நண்பின் கேளிரோடு கலந்த**
**இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றே (புறம்.71:9-16)**

என்ற பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது. கண் போன்று நட்பு கொண்ட இவர்களின் மகிழ்ச்சி கலந்த நட்பைத் தொடர்ந்து பெறும் விருப்பம் அவனின் வஞ்சினம் வழி அறிய முடிகிறது. நட்புக்குரிய பண்புகளை, பண்புடையவர்களை அறிந்து கொண்டாலும் நட்புக்கு முக்கியத்துவம் கொடுக்கும் அவர்களின் மனநிலையை உணர்ந்து கொள்ள முடிகிறது. புறநிகழ்வில் மட்டுமல்ல; அகநிகழ்விலும் அளவிட இயலா நட்பின் மிகுதியைக் காணமுடிகிறது. நிலத்தைவிட பெரியதாக, வானத்தைவிட உயர்ச்சி உடையதாக, கடலைவிட ஆழமுடையதாக அவர்களின் நட்பு அமைந்திருந்தது என்பதை,

**நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று;**
**நீரினும் ஆர் அளவின்றே; சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே (குறு.3)**

என்று தலைவி ஒருத்தி தலைவனின் இயல்புகளைப் புகழ்ந்துரைக்கிறாள். நிலம் நீரின்றி பயன்படாது. வானம் மேல் நின்ற அளவில் பயன்படாது. கடல் சூழ்ந்து நின்றாலும் பயன்தராது. ஆனால் மேகங்கள் கடல்நீரை உண்டு நிலத்தில் பொழிவதால் உயிர்கள் பயனடைகின்றன. இம்மூன்றன் சேர்க்கைப் போல் "இயைந்த நட்பு' தங்களுடைய நட்பு எனத் தலைவி பெருமைப்படுகிறாள். இவ்வாறு, அகவாழ்விலும் புறவாழ்விலும் பண்புடைய நட்பைப் பேணுபவராகப் பழந்தமிழர் இருந்துள்ளனர்.

## 1.7 செய்ந்நன்றி மறவாமை

ஒருவருக்கொருவர் உதவுதல் உயரிய பண்பாகும். அவ்வுதவியை மறக்காமல் செய்ந்நன்றியுடன் இருப்பதும் அப்பண்புக்குரிய சிறப்பாகும். அத்தகைய பண்புடையவரைப் பீடுடையாளர் (கலி.34:4-5) என்று போற்றுகிறது கலித்தொகை. ஒருவர் செய்த உதவியை மறத்தல் தவறாகும். தவறுகள் பல செய்தாலும் அத்தவற்றின் தீமையைப் போக்கும் வழிகள் பல உள்ளன.

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல் (குறள்.314)**

என்பது, தமக்குத் தீமை செய்தவருக்கும் நன்மை செய்வதாகும். இது தீமை செய்தவர்க்கு நல்லறிவு ஊட்டும் தன்மையைக் கொண்டது என்கிறார் வள்ளுவர். அன்றையச் சூழலில் நிலவிய மக்கட் பண்புகள் நன்மை தீமை என அவர்கள் கொண்டிருந்த உறுதிப்பாடு என்பனவற்றின் வெளிப்பாடாகக் கொள்ளலாம்.

சில செயல்களை மன்னிக்க முடியாத குற்றங்களாக அல்லது விரும்பத்தகாத செயல்களாகக் கருதியிருந்தனர். சான்றாக, பசு காக்கப்பட வேண்டிய ஒன்றாகச் சங்கச் சமூகத்தினர் கருதினர். போர் செய்கின்ற சூழலில் பசு, பார்ப்பனர், பெண்கள், நோயுற்றவர், குழந்தைப் பெறாதவர் என்றிவர்களைப் பாதுகாப்பான இடத்தில் விட்டு, பிறகு போரிட முற்பட்டனர் (புறம்.9). பசு செல்வமென கருதிய உளப்பாங்கு அவர்களிடம் இருந்தது. இதனை,

**ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்**
**மாண்இழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்**
**பார்ப்பார் தப்பிய கொடுமையோர்க்கும்**
**வழுவாய் மருங்கில் கழுவாயும் உளஎன**
**நிலம்புடை பெயர்வது ஆயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்திஇல் என**
**அறம் பாடின்றே (புறம். 34:1-7)**

என்கிறது புறநானூறு. போருக்கு முன் பசுவைப் பாதுகாக்கும் சமுதாயத்தில் அப்பசுவின் முலையை அறுத்து துன்புறுத்துவது பெரிய குற்றமாகவே இருந்தது. வீரம்மிக்க சமுதாயமாக விளங்கிய சங்கச் சமுதாயத்தில் போருக்கு வீரமிக்க ஆண்மகனின் துணை தேவைப்பட்டது. 'களிறெறிந்து பெயர்தல்' (புறம்.312) ஆண்மகனுக்குரிய கடமையாகப் போற்றப்பட்டது. இதில் தாய்க்குரிய கடமையாக பிள்ளைகளைப் பெற்றெடுப்பது (புறம்.312) அமைகிறது. ஆண்மகனுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சமுதாயத்தில் பிள்ளைகளின் பிறப்பை அழிக்கும் கருச்சிதைத்தல் தண்டனைக்குரிய செயலாகும். இச்செயல் அக்காலத்தில் சமுகக் குற்றமாக இருந்திருக்கலாம். ஆனால், இவற்றை விட மன்னிக்க முடியாத குற்றம் ஒன்று உள்ளது. அது தமக்கு ஒருவர் செய்த செய்ந்நன்றியை மறத்தலாகும். மேற்கூறிய குற்றங்களுக்குக் மன்னிப்பு உள்ளது. ஆனால் செய்ந்நன்றி மறத்தலுக்கு மன்னிப்பு இல்லை. நிலம் கீழ் மேலாகப் பெயர்ந்தாலும் ஒருவன் செய்த நன்றியை அழிப்பவர்க்கு அதிலிருந்து தப்ப வழியில்லை. இதனை ஆசிரியர் வலியுறுத்துவதாக கூறாமல், அறநூல் வலியுறுத்துவது இங்குக் குறிப்பிடத்தக்கது. கலித்தொகையும் செய்ந்நன்றி மறந்தவர் அதற்குரிய தண்டனையிலிருந்து தப்ப முடியாது. உடம்பிலிருந்து உயிர் போனாலும் அதற்குரிய தண்டனையிலிருந்து தப்பிக்க முடியாது. கண்டிப்பாக தண்டிக்கப்படுவர் (கலி.149) என்கிறது. வள்ளுவமும்,

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு (குறள்.110)**

என்று கூறுகிறது. இதிலிருந்து செய்நன்றி என்ற பண்பிற்குப் பழந்தமிழர் கொடுத்த முக்கியத்துவத்தை அறிய முடிகிறது.

### 1.8 நடுநிலை

நண்பர், உறவினர், வேண்டியவர், வேண்டாதவர் என்று வேறுபாடு கருதாமல் அனைவரிடமும் பொதுவாக நடக்கும் முறை நடுநிலையாகும். நடுநிலை என்பது ஒன்பது சுவையுள் ஒன்றென நாடக நிலையுள் வேண்டப்படும் சமநிலை. இதனைத் தொல்காப்பியம்,

**செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினும்**
**நெஞ்சோர்ந் தோடாநிலைமை அதுகாம வெகுளி மயக்கம்**
**நீக்கியோர் கண்ணே நிகழ்வது (தொல்.மெய்.12)**

எனக் குறிப்பிடுகிறது. வள்ளுவரும்,

**தகுதி யெனவொன்று நன்றே பகுதியால்**
**பாற்பட் டொழுகப் பெறின் (குறள்.111)**

என்று நடுநிலைக்குரிய இலக்கணத்தைக் குறித்துள்ளார். மனத்தின்கண் நடுநிலை அறிவுடையார்க்கு அழகாகும் (குறள்.115) என்கிறார். இந்நடுநிலையைச் சான்றோர்கள் துலாக்கோலோடு ஒப்பிட்டுள்ளனர். முதலில் சமனாக நின்று, பாரம் வைத்த பிறகு இரண்டு தட்டும் சமன்செய்து வரையறுக்கும் தன்மையுடையது துலாக்கோல். அதனைப் போன்று ஒரு பக்கம் சாராமல் நடுநிலையுடன் நிற்றல் சான்றோர்க்கு அழகாகும் (குறள்.118) என்கிறார் வள்ளுவர். சங்கச் சான்றோர் துலாக்கோலை 'ஞெமன் கோல்' (மதுரை.491) என்றும் ஞெமன்ன் தெரிகோல் (அகம்.349) என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

அக்கால அரசர்கள் துலாக்கோல் போன்று நடுநிலை பண்புடையவராக இருந்தனர் (அகம்.349:3-4). அவ்வாறு இல்லாத அரசர்கள் நடுநிலையோடு இருக்குமாறு அறிவுறுத்தப்பட்டனர் (புறம்.6). அரசன் மட்டுமல்லாது, அவனுடைய அரசவையும் நடுநிலை கொண்டதாக இருந்தது. அறம் கூறும் அவையாக அது விளங்கியது. அவ்அறம் கூறும் அவையத்தில், தன்னிடம் நீதிகேட்டு வருபவரின் அச்சத்தை, துன்பத்தை, பற்றுள்ளத்தை நீக்கி, கோபம் இல்லாமல், உவகை செய்யாமல், மனத்தைப் பாதுகாத்து துலாக்கோல் போன்று நடுநிலையுடன் சான்றோர் நீதி வழங்கினர். இதனை மாங்குடி மருதனார்,

**அச்சமும் அவலமும் ஆர்வமும் நீங்கி**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**
**ஞெமன்கோல் அன்ன செம்மைத்து ஆகி**
**சிறந்த கொள்கை அறம்கூறு அவையமும் (மதுரை.489-492)**

என்று அறங்கூறும் அவையில் உள்ள சான்றோர் நடுநிலையோடு நீதி வழங்கிய இயல்பை எடுத்துக்காட்டுகின்றார். நடுநிலைக்குத் துலாக் கோல் மட்டுமல்லாது, பகலாணியையும் உவமைப் படுத்தியுள்ளனர்.

சான்றோர், அரசர் மட்டுமன்றி வணிகர்களும் நடுநிலையுடன் செயலாற்றியுள்ளனர். வணிகத்தில் தம்முடைய பொருளையும் பிறருடைய பொருளையும் வேறுபடுத்திப் பார்க்காமல், ஒப்பக் கருதும் இயல்புடையவராய் இருந்தனர். தாம் கொள்ளும் பொருள்களைத் தாம் கொடுக்கும் பொருள்களுக்கு மிகுதியாகக் கொள்ளாமலும், தாம் கொடுக்கும் பொருள்களை, வாங்கும் பொருள்களுக்கு குறைவாகக் கொள்ளாமலும் நடுநிலையுடன் வணிகம் செய்தனர். அவர்களின் இத்தகு நடுநிலை பண்பைப் பட்டினப்பாலை,

**கொடுமேழி நசையுழவர்**
**நெடுநுகத்துப் பகல்போல்**
**நடுவுநின்ற நன்னெஞ்சினோர் (பட்டி.205-207)**

என்று புகழ்கிறது. இவ்வணிகர்கள் வளைந்த கலப்பையைக் கொண்டு உழவுத் தொழிலைச் செய்யும் உழவர்களின், நீண்ட நுகத்தடியின் நடுவில் தைக்கப்பட்டுள்ள, பகலாணி போன்று நடுநிலை உள்ளம் கொண்டவர்கள் என்று ஒப்பிடுகின்றது. பகலாணி போன்ற இந்நடுநிலை பண்பைக் கலித்தொகையும் (கலி.86:17-18), புறப்பொருள் வெண்பாமாலையும் (புறம்.வெண்.157) குறிப்பிடுகின்றன. கலப்பையில் எருதுகளைப் பிணைக்கும் நீண்டதடி இதனை நுகத்தடி எனவும் கூறுவர். இத்தடியின் நடுவிடம் தெரிதற் பொருட்டு ஓர் ஆணிவைத்திருப்பர். நன்கு அளந்து செம்பாதியில் இவ்வாணி தைக்கப்படுதலால் நடுவுநிலை என்னும் குணத்திற்கு இவ்வாணியைப் புலவர் பலரும் உவமையாகக் கூறுவர் (பொ.வே.சோமசுந்தரனார்,1971:49). எனவே, மேற்கூறியவையிலிருந்து பழந்தமிழர் நடுநிலைக்குக் கொடுத்த இன்றியமையாமையை அறிய முடிகிறது.

## 1.9 அறநெறி

அறநெறியில் தவறாமல் இருக்க அறக்கடவுளை வணங்கியுள்ளனர். அறத்திற்கென தனியாகக் கடவுள் இருந்துள்ளார் (புறம்.35:12-16). மேலும், அனைவருக்கும் பொதுவான அறநூலும் (புறம்.10:2-4, புறம்.34:6) இருந்துள்ளது. இது அவர்களின் அறத்திற்கும் நடுநிலைமைக்கும் நற்பண்பிற்கும் துணை புரிவதாக அமைந்திருந்தன. எனவே, அறமறிந்து அறநூலை ஆராய்ந்து, அறக்கடவுளின் ஆராய்ச்சி போன்று நடுநிலையோடு நீதி வழங்கப்பட்டது.

நாடு சிறப்புற்று விளங்க, மக்கள் அச்சமின்றி வாழ வழி செய்யும் இந்நெறியை, அரசனுக்குச் சான்றோர்கள் வலியுறுத்தியுள்ளனர். நீதி வேண்டும் காலத்தில் எளிதாக மக்கள் நீதியைப் பெறுதல் வேண்டும். அரசனும் அறக்கடவுளின் ஆராய்ச்சி போன்று செங்கோலால் ஆராய்ந்து நீதி வழங்க வேண்டும் (புறம்.35:12-16) என்றும், அரசன் வெற்றி அறநெறியை முதலாக உடையது. ஒருவர் தீமையைப் பொறுத்து செங்கோலை வளையச் செய்தல் கூடாது. ஒருவர் அயலார் என்று அவருடைய குணங்களைப் போற்றாமல் இருக்கக் கூடாது (புறம்.55:7-12) என்றும், உண்மையைக் கண்டு ஆராய்ந்து தீமையை ஒருவனிடம் கண்ட அளவில், அறநூல்களுக்கு ஒப்ப ஆராய்ந்து தண்டனை வழங்க வேண்டும் (புறம்.10:3-4) என்றும் சான்றோரால் அறிவுறுத்தப்பட்டன.

### 1.9.1 அறத்தின் இயல்பும் சிறப்பும்

அறம் என்பது மனம் மாசு அகற்றிய மக்களது ஒழுகலாறு. அறக்கடவுள், அறநூல், கற்பு (சங்க இலக்கிய பொருட்களஞ்சியம், தொகுதி-1,2001:117) மக்கள் நல்வாழ்வு வாழச் சான்றோரால் வரையறுக்கப்பட்ட நன்னெறி, தருமம் (பெருஞ்சொல்லகராதி, தொகுதி.1, 1988:491) முதலான பொருள்களைக் குறிக்கிறது. அறத்தின் இயல்பினைத் தொல்காப்பியம்,

**அந்நிலை மருங்கின் அறமுத லாகிய**
**மும்முதற் பொருட்கும் உரிய வென்ப**

**(தொல்.பொருள்.செய்.411)**

என்கிறது. புறநானூறும் சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படும் (புறம். 31:1-2) என்றும், செல்வமானது அறம், பொருள், இன்பம் மூன்றையும் செய்து உதவும் (புறம். 28:15-16) என்றும் குறிப்பிடுகிறது. குறளும்,

**சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு (குறள்.31)**

என்று கூறுவதுடன், அறத்தான் வருவதே இன்பம் (குறள்.39) என்று அமைகிறது. இவ்வாறு, அறத்தின் இயல்பை அவை குறிப்பிட்டாலும், அவர்களின் அறச்சிந்தனையையும் இதில் உணர முடிகிறது. இத்தகைய அறத்தன்மையில் ஒழுகி நடக்கும் அரசை, சான்றோர்கள் பெருமையோடு போற்றியுள்ளனர். சான்றாக,

**அம்பு துஞ்சும் கடிஅரணால்**
**அறம் துஞ்சும் செங்கோலையே (புறம்.20:16–17)**

என்று அறம் நிலைத்த செங்கோலை உடையவன் என்று யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாராட்டுகிறார் குறுங்கோழியூர் கிழார். சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவனின் அவையைக் குறிப்பிடும் போது,

**மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் நின்று நிலையிற்று (புறம்.39:8–9)**

என்கிறார் மாறோக்கத்து நப்பசலையார். பொதுமக்களும் அறம் பாராட்டியதை, 'வயலில் கரும்பு எடுப்பவர் வேலிக்கு வெளியேயுள்ளோர் விரும்பினால், அறம் கருதி சில கரும்பினைப் பிடுங்கி பகைவர் பெறுமாறு வீசுவர். இவ்வாறு வேண்டுபவர்க்குக் கரும்பைப் பறித்து எறியும் தன்னலமில்லாத அறமுடைய மக்களுடைய நாடு (புறம்.28:11-12) என்று, சோழன் நலங்கிள்ளியின் அறம் சார்ந்த அரசை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாராட்டுகிறார். இவ்வாறு, அறத்தின் இயல்பை, சிறப்பை, அறம் மேற்கொண்டவரது பெருமையைச் சான்றோர்கள் உணர்த்தினாலும், அறத்தின் முக்கியத்துவத்தை ஒரு அரசனின் சூளுரையில் உணர முடிகிறது. தன்னை எதிர்த்து வந்த பகைவரை வென்று, போரில் அவர்களைப்

புறமுதுகிடச் செய்யவில்லை என்றால், கொடுங்கோல் ஆட்சி உடையவன் ஆவேன் என்று சூளுரைக்கிறான் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன். இதனை,

**அறன் நிலைதிரியா அன்பின் அவையத்து**
**திறன்இல் ஒருவனை நாட்டி முறைதிரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகுக (புறம்.72:9-12)**

என்ற புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. போரில் வெல்லாது போயின் நீதிநெறி தவறியோர் பழிக்கப் பெறுவதைப் போல, தானும் பழிக்கப் பெறுவேன் என்று கூறுவதன் மூலம், அறத்திற்கு அவன் அளிக்கும் மதிப்பை அறிய முடிகிறது. நீதிநெறி தவறக்கூடாது என்பது அவனுடைய முக்கியப் பண்பாக இருந்துள்ளது.

### 1.9.2 தீயபண்பும் அறநெறியில் நிறுத்தும் பண்பும்

அன்பு, வாய்மை, நடுநிலை (கலி.130) போன்றவை அரசின் முக்கியப் பண்புகளாகும். நற்பண்புகள் பல இருந்தாலும், அறநெறியைப் பிறழச்செய்யும் சில தீய பண்புகளும் இருந்துள்ளன. இதனைப் பாலைக்கௌதமனார்,

**சினனே காமம் கழிகண்ணோட்டம்**
**அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை**
**தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து**
**அறம்தெரி திகிரிக்கு வழியடை ஆகும் (பதிற்.22:1-4)**

என்று அறநெறியில் ஆட்சி செலுத்துவோருக்குத் தடையாக இருக்கும் பண்புகளை வெளிக்காட்டுகிறார். அவரே ஓர் அரசின் கீழிருக்கும் மக்கள் பெற்றிருந்த பண்புகளையும் குறிப்பிடுகின்றார். பிறரை வருத்தாமல், பிறர் பொருளை விரும்பாமல், குற்றமற்ற அறிவினராய் நன்னெறியில் நடந்து, தம்மை விரும்புகின்ற தம் மனைவியரைப் பிரியாது, விருந்தினர்க்கு பகுந்தளித்து உண்டு, முதுமையும் நோயும் இல்லாத நல் உடம்போடு நெடுநாள் வாழ்ந்தனர் (பதிற்.22:5-11). சான்றாக, பாலைக் கௌதமனார், நாட்டு மக்கள் சிறப்புற வாழும் வகையில் ஆட்சி செலுத்திய முன்னோர்களின் வழி வந்தவனாக பல்யானைச் செல்கெழு குட்டுவனை முன்னிலைப் படுத்துகிறார். அவனது முன்னோர் ஆட்சியில் மக்கள் பிறரை வருத்தாமல், பிறர் பொருளை

விரும்பாமல், குற்றமற்ற அறிவினராய் நன்னெறியில் நடந்து, தம்மை விரும்புகின்ற தம் மனைவியரைப் பிரியாது, விருந்தினர்க்கு பகுந்தளித்து உண்டு, முதுமையும் நோயும் இல்லாத நல் உடம்போடு நெடுநாள் வாழ்ந்தனர் (பதிற்.22:5-11). நாட்டில் வாழ்பவரும் நன்னெறியில் வாழ வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

பிசிராந்தையாரும் குறைவில்லாத நிறைவு தரும் வாழ்க்கையினால் முதுமைக்கு உண்டான நரை தனக்குத் தோன்றவில்லை என்று தன் நாட்டின் நன்னெறி வாழ்க்கையைச் சான்று காட்டியுள்ளதும் (புறம்.191) இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. எனவே, தீய பண்புகளை விலக்கி, நற்பண்புகளுடன் நல்லறத்துடன் அமையும் நல்லாட்சியை அக்காலத்தவர் கொண்டிருந்தனர். இத்தகைய நல்லாட்சிக்குச் சான்றோர் மட்டுமன்றி அமைச்சர்களும் உறுதுணையாக இருந்தனர். அரசர்களை நல்வழிப்படுத்துவதில் அக்கறை செலுத்தினர். சான்றாக, மதுரைக்காஞ்சியில் மாங்குடி மருதனார்,

**நறுஞ்சாந்த நீவிய கேழ்கிள ரகலத்**
**தாவுதி மண்ணி யவிர்துகிர் முடித்து**
**மாவிசும்பு வழங்கும் பெரியோர்போல**
**நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி**
**யன்புமறனு மொழியாக காத்துப்**
**பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த**
**செம்மை சான்ற காவிதி மாக்கள் (மதுரை.493-499)**

என்று அரசனை நல்வழிப்படுத்தும் அமைச்சரின் செயலை, யாகங்கள் பல செய்து துறக்க உலகம் அனுப்புகின்ற அந்தணர் அரசரை அடக்கும் செயலோடு ஒப்பிடுகிறார். இதன்வழி, நல்வழிப்படுத்துவது சான்றோர் மற்றும் அமைச்சரின் கடமையாக இருந்துள்ளது. என்றாலும், நல்வழிப்படுத்துபவரும் நன்னெறிகளைக் கொண்டிருத்தல் அவசியம் என எதிர்பார்க்கப்பட்டது. அவர்களின் நல் ஒழுக்கமே சான்றோர் எனும் தகுதியை அவர்களுக்குத் தந்தது.

சான்றோர்களின் ஒழுக்கத்தை ஓரம்போகியார் பின்வருமாறு குறிப்பிடுகிறார். ஐம்புலன்களை அடக்கி, அறத்தில் தவறாது, பொருள் பற்றுக் கொள்ளாது, தமக்குரியவற்றை முறையாக செய்து, நன்கு ஆராய்ந்து தம்

தகுதிகேற்ற வினைகளைச் செய்து முடிப்பர் (அகம்.286:8-13) என்று அவர்களின் ஒழுக்கத்திற்குரிய பண்புகளை விளக்குகிறார். இப்பண்புகளைக் கொண்டவரே அரசனுக்கு அறிவுரை வழங்குவதில் தகுதி உடையவராக இருந்திருப்பர்.

## 1.10 அறிவுறுத்தும் இயல்பு

ஒருவர் செய்த தவற்றை நேரடியாக எடுத்துக் கூறி திருத்துவது ஒருவகை. மற்றொன்று, அத்தவறின் மூலம் ஏற்படும் விளைவுகளை மறைமுகமாக, வேறொன்று மூலம் ஒப்புநோக்கி கூறுவதும் உண்டு. அவ்வாறு கூறுவதால் அவர் செய்த தவறு எத்தகையது என்று அறிவதோடு, அதன் பாதிப்புகளையும் அவரால் உணர முடியும். எனவே, தவற்றோடு அதன் தீமையையும் உணர வைக்கும் அணுகுமுறையைச் சங்கச் சான்றோர் பின்பற்றினர். அதன்வழி அரசனுக்கு அறிவுரை வழங்கினர். சான்றாக, பாண்டியன் அறிவுடைநம்பி மக்களை வருத்தி வரி வாங்கினான். இவன்பால் சூழ்ந்த அரசியற் சுற்றத்தார், இவனை இடித்துரைத்து நெறிப்படுத்தும் நேர்மையின்றி நீர்போகும் வழிப் புல் சாய்ந்து கொடுப்பது போல, இவன் விழைந்த வழியெல்லாம் நுழைந்து கொடுத்து அரசியலில் வாழும் மக்கட்கு துன்பம் உண்டாக்கினர் (ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, பகுதி-1,2002:401). அரசனுக்கும் மக்களிடம் அன்பு குறைந்தது. மக்களை வருத்தி வரி வாங்குவதில் விருப்பம் உடையவன் ஆனான். இவன் செயல்கண்டு பிசிராந்தையார் நல்லறிவு உண்டாகுமாறு அறிவுறுத்துகிறார்.

ஒருமா அளவு உள்ள குறைந்த விளைநிலத்திலிருந்து கொண்டுவரப்பட்ட உணவை, கவளமாக யானைக்குக் கொடுத்தால் அது பல நாட்கள் அவ்யானைக்கு உணவாக வரும். ஆனால், நூறுமா அளவு உள்ள விளைநிலத்தில் யானை தனியே சென்று உண்டால், அவ்வுணவு வாயில் புகுவதைக் காட்டிலும், கால்களால் மிதிபட்டு அழிவது மிகுதியாகும். இது போன்று அரசனும் தான் பெறுதற்குரிய வரியை நெறியறிந்து முறையே கொள்ள வேண்டும். இதனால் நாடும் வளம்பெற்று செல்வத்தால் புகழ்பெறும். ஆனால், தரமறியாத திறமில்லாத சுற்றத்தோடு நாள்தோறும் மக்களின் அன்புகெட வரியைக் கொள்வானாகில் அது, யானை புகுந்த நிலம் போல அவனுக்கும் பொருள் சேராது. நாடும் கெட்டழியும் (புறம்.184) என்கிறார்.

எனவே, மக்களின் நிலை அறிந்து ஆட்சி செலுத்தும் பண்புடையவனாக அரசன் இருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார். அரசனிடம் உள்ள குறையை நேரடியாக கூறாமல், ஒரு நிகழ்வின் மூலம் உவமையின் வழி கூறுவது அவரின் உளவியல் சார்ந்த அறிவைக் காட்டுகிறது. அடுத்து, கலித்தொகையும் கொடுங்கோல் ஆட்சியின் குறைகளை உவமைகளின் மூலம் வெளிக்காட்டியுள்ளது. இதனை,

> **வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்**
> **சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழல் இன்றி**
> **பார் கண்ணும் இகந்து செய்த இசை கெட்டான்**
> **இறுதிபோல்**
> **வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்**
> **அலவுற்றுக் குடிகூவ ஆறுஇன்றிப் பொருள் வெஃகி**
> **கொலை அஞ்சா வினைவரால் கோல் கோடியவன் நிழல்**
> **உலகுபோல உலறிய உயர்மர வெஞ்சுரம் (கலி.10:1–7)**

என்று அறமல்லாத பண்புகளால் உண்டாகும் இழிவை உணர்த்துகிறது. இப்பாடல் வழி நான்கு கருத்துகள் வெளிப்படுகின்றன.

1. இளமையில் வறுமையுற்றவன்போல தளிர்கள் வாடிய கொம்புகளுடன் நின்றன.
2. கொடுப்பதற்கு மனம் இல்லாதவனுடைய செல்வம் தன்னைச் சேர்ந்தவர்க்குப் பயன்படாததுபோல, மரங்கள் தன்னைச் சேர்ந்தவர்க்கு நிழலின்றி இருந்தன.
3. தீமை செய்பவனுடைய புகழ் கெட்டு, இறுதிக் காலத்தில் சுற்றத்தார் மட்டுமன்றி, அவனும் அழிவான். அதுபோல, கதிரவனின் சூட்டால் கிளைகள் மட்டுமன்றி, மரங்களும் வேரோடு வெம்பி நின்றன.
4. வருத்தமுற்ற மக்கள் ஓலமிட, கொலைத் தொழிலுக்கும் அஞ்சாத வினைஞர்களால் நெறியின்றி பொருளைப் பெற்று செங்கோல் வளைந்த ஆட்சி நடத்தும் அரசனின் குடை நிழலிலே தங்கிய உலகம் போல உயர்ந்த மரங்களைக் கொண்ட வெய்ய காடுகள்

உலர்ந்து போயின. இதில் வறியவன் நிலை, ஈயாதவனின் நிலை, தீமை புரிபவன் அடையும் நிலை, போன்றவற்றிற்குத் தளிரையும், கிளையையும், நிழலையும் ஒப்பிட்டுக் கூறியுள்ளது மரங்களின் உறுப்புகள் அடையும் அழிவுநிலை என்றாலும், அரச வினைஞரால் நெறியின்றி பொருள் பெற்று நடக்கும் கொடுங்கோல் ஆட்சிக்கு மரமே உலர்ந்து போவது என்பது அவன் ஆட்சியே அழிவதோடு, அவன் கீழ் வாழும் குடிமக்களும் அழிந்து போவர் என்பதைக் குறிக்கின்றது. உலர்ந்துபோன மரம் மீண்டும் தழைக்காது. அதுபோன்று அறப்பண்பில்லாத அவனது அரசும் எழாது. அழிந்துபோகும் என்னும் நிலையை உணர்த்துகின்றது. கதிரவனின் வெம்மைபோன்றது கொடுங்கோல் ஆட்சியின் தன்மை என்பதை அறிய முடிகிறது.

கலித்தொகையின் மற்றொரு பாடல் அரசனின் அறநெறி இன்மைக்கு இருளை உவமையாகக் காட்டியுள்ளது. 'நல்ல நெறியில் உலகை நிலை நிறுத்தி, அவ்வுலகை ஆண்ட அரசன் இறந்தபின்னர், அறநெறியை நிலைநாட்ட முடியாத இளைத்த மன்னன் காலம் போல மயங்கிய இருள் தோன்றியது என்கிறது. இதில் அறநெறியை நிலைநாட்டி ஆட்சி செய்யாத அரசிற்கு, அவன் கீழ் வாழும் மக்களுக்கு அது இருண்டகாலமாக இருந்திருக்கக் கூடும். இதனை,

**. . . .. . . . . . . . . . . . . . . அறநெறி நிறுக்கல்லா**
**மெல்லியான் பருவம்போல் மயங்கு இருள்தலைவர (கலி.129:5–6)**

என்ற உவமையின் மூலம் உணர முடிகிறது.

இத்தகைய நெறியில்லா அரசனின் கீழ்வாழும் மக்களின் துன்பநிலை, தலைவியின் காமநிலையோடு ஒப்பிடப்பட்டுள்ளது. தோழியின் கூற்றாக அமைந்த கலித்தொகை பாடலில், தலைவனைப் பிரிந்த தலைவிக்கு, தலைவன் வந்து அருளாததனால் அவன் முறைதளர்ந்த மன்னவனாக காட்சியளிக்கிறான். தலைவியும் அவன் பிரிவால் முறை தளர்ந்த அம்மன்னனின் கீழ் உள்ள குடிபோல கலங்குகின்றாள்.

முறை தளர்ந்த மன்னவன் கீழ்க்குடி போலக்கலங்குபு

(கலி.34:14)

என்னும் பாடல், தலைவன் அருளாத தன்மையினால் அவளுக்குத் துன்பம் உண்டானது போல, அரசன் அருளாத தன்மையினால் குடிமக்களுக்குத் துன்பம் உண்டானது எனக் கூறுகிறது. இது, அருளற்ற ஆட்சியில் நடக்கும் அவலமாகும்.

அரசன் மக்களிடம் அன்பு, அருள், இரக்கம் உடையவனாக இருக்க வேண்டும். வாய்மையுடன், எளிமையுடன், நீதிநெறியுடன் நடக்க வேண்டும். அரசனின் குடை அறநிழலை உடையதாக, செங்கோல் வாய்மை உடையதாக, முரசம் பாதுகாவலையுடையதாக இருக்க வேண்டும் (கலி.99). இப்பண்புகளைக் கொண்டு ஆட்சி நடத்தும் அரசன் சிறப்பிற்குரியவன்.

### 1.10.1 குடும்ப நலம்

நாட்டின் நலம் பேணும் அரசன் வீட்டின் நலத்தையும் பேண வேண்டும். நாட்டிற்கு மட்டுமன்று வீட்டிற்கும் அறம் சார்ந்த பண்புடையவனாக இருக்க வேண்டும் என்று சான்றோர் விரும்பினர். வையாவிக் கோப்பெரும் பேகன் மனைவியைப் பிரிந்து வேறொரு பெண்ணின் மேல் விருப்பம் கொண்டான். இதனை அறிந்த கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் முதலானவர்கள் அவனை அறிவுறுத்தி இருவரையும் சேர்த்து வைத்தனர். கணவனைப் பிரிந்த மனைவியின் துன்பநிலையை எடுத்துக்கூறி, அவன்செய்த தவறினை அஞ்சாது எடுத்துரைத்தனர்.

### 1.10.2 துன்பநிலை

கபிலர் சிற்றூரின் கண் ஒரு வீட்டுக்குச் சென்று, அங்குள்ளவரை வாழ்த்தி, பேகனையும் அவன் மலையையும் வாழ்த்திப் பாடினார். அப்பொழுது ஒருத்தி கண்களில் கண்ணீர் வடிய அழுது நின்றாள் என்று, கணவனைப் பிரிந்த மனைவியின் துன்ப நிலையை அரசனுக்கு எடுத்துரைத்தார் (புறம்.143). பரணர் அவளிடம் என் நட்பை விரும்பும் பேகனுக்கு நீ என்ன உரிமை உடையவள் என்று கேட்டார். அதற்கு அவள், எம் போன்ற அழகுடைய ஒருத்தியைக் காதலித்து, தேருடன் முல்லை வேலியையுடைய நல்லூரின்கண் இப்பொழுதெல்லாம் சென்று வருகின்றார் என்று பலரும் சொல்ல

கேட்கவில்லையோ? என்றாள். அவ்வாறு அழுது புலம்பும் அவளுக்கு, நீ அருள் செய்யாதது ஏனோ? என்று வையாவிக் கோப்பெரும் பேகனை வினவுகின்றார் (புறம்.144). அவர் பசித்து உன்னிடம் வரவில்லை. உன் மனைவியின் பிரிவு நோயைத் தீர்க்க வேண்டும் என்று வேண்டுகிறார். இதை

**அறம் செய்தீமோ அருள்வெய்யோய் என**
**இஃது யாம் இரந்த பரிசில் அஃது இருளின்**
**இனமணி நெடுந்தேர் ஏறி**
**இன்னாது உறைவிஅரும்படர் களைமே (புறம்.145:7–10)**

என்னும் பாடல்வழி அறியலாம். பரணரைப் போன்று அரிசில்கிழாரும் தான் மகிழ்ந்து பாடியதற்குப்பெறும் பரிசில், கண்ணகியின் கூந்தலில் நறும்புகை ஊட்டி, மலரைச் சூட்டி அவளின் பிரிவு துயரத்தை நீக்குவதாகும் (புறம்.146) என்கிறார். பெருங்குன்றூர் கிழாரோ கண்ணகியின் துன்பத்தை நீக்க இன்றே செல்ல வேண்டும் என்று பணிக்கின்றார். அவளை அழைத்து வருதலே,

**அதுமன் எம்பரிசில் ஆவியர்கோவே (புறம்.147)**

என்று தாம் பெறவிரும்பும் பரிசிலாக உரைக்கிறார். இவ்வாறு, பொது வாழ்வில் மட்டுமன்று, குடும்ப வாழ்விலும் அரசன் நெறிதவறும் போது, அவன் புரியும் தவற்றை எடுத்துக்காட்டி, திருத்தும் பொறுப்புள்ளவராக அக்காலச் சான்றோர் இருந்துள்ளனர். மேலும், தமது துயர் நீக்கி மகிழ்வு தரும் பரிசிலைக் காட்டிலும், கணவன் மனைவி என அரசர்களின் ஒன்றிணைந்த குடும்ப உறவே தமக்குப் பெரும் மகிழ்ச்சி தரும் பரிசில் என்று எண்ணும், உயர் பண்பையும் அச்சான்றோர் கொண்டிருந்தனர்.

மனித வாழ்க்கை குறுகியது. அக்குறுகிய வாழ் காலத்திலும், செயற்கரிய செய்தாரைக் கால எல்லைக் கடந்து போற்றுவது மனித இயல்பு. இங்கு, செயற்கரிய செயல்கள் என்பது பிறருக்கு நிறைய நன்மைகள் செய்வது மட்டுமன்று, இல்லற வாழ்வினுக்கோர் எடுத்துக்காட்டாக வாழ்ந்தவரும் காலங்கடந்து நினைவில் நிற்பர்.

இல்லற வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய முறைமைகளை/ நன்னெறிகளைப் பொது மனித மாதிரிகளைக் கொண்டு சங்க இலக்கியம்

கூறுகின்றது. அவற்றைப் பழந்தமிழர் வாழ்வியல் நன்னெறிகள் என்னும் தலைப்பின் கீழ் ஆராய்ந்ததின் மூலம் கிடைக்கப்பெற்ற முடிவுகள் இங்கு தொகுத்தளிக்கப்படுகின்றன.

பிறர் துன்பத்தைத் தன் துன்பமாக கருதி, அத்துன்பத்தை நீக்கும் மன இயல்பும், அவ்வியல்பில் அன்பும், இரக்கமும், கருணையும் நிறைந்திருப்பதும் அவர்களின் செம்மையான வாழ்க்கை பண்புகளை எடுத்துரைக்கின்றன.

வாழ்க்கையின் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து உறவுகளுடன் ஒன்றிணைந்து வாழும் இல்லற வாழ்வு மனிதர்க்கு மட்டுமே உரியது. தாம் இன்பமாக வாழ்வதோடு மற்றவரும் மகிழ்ச்சியாக வாழ வேண்டும் என்று விரும்பும் எண்ணம், பிறர்க்கு உதவும் குணம், விருந்தினரை உபசரித்து அவர் மன நிறைவைத் தம் நிறைவாகக் கொள்ளும் மனப்பாங்கு முதலான வாழ்வின் பரிணாம சிந்தனைகளைப் பழந்தமிழர் தம் வாழ்வியலில் கொண்டிருந்தமைப் போற்றுதற்குரியது.

ஒரு சமுதாயம் சிறப்புற, அச்சமுதாயத்தில் வாழும் தனிமனிதனின் ஒழுக்கம் முக்கிய காரணமாக அமைகிறது.

**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே**

என்பது நல்லொழுக்கமுள்ள ஆடவரைப் பொறுத்து நற்சமுதாயம் அமைவதை எடுத்துக்காட்டுகிறது. நல்லொழுக்கம் என்பது உடல், மனம், மொழி சார்ந்ததாக அமையும். உடலின் தூய்மை நீரால் அமைவது போன்று உள்ளத்தின் தூய்மை வாய்மையால் அமைகிறது. பழந்தமிழரிடையே, வாய்மையானது நிலம் பெயர்ந்தாலும், தன்னிலை பெயராத தன்மையுடையதாக இருந்தது. அவர்கள் அமிழ்தம் பெற்றாலும், வறுமையுற்றாலும் வாய்மையில் பிறழாதவர்களாக உண்மையுடன் உயர்வாழ்வு பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

நட்பு, நன்றி பாராட்டுதல், நடுநிலை, அறநெறி, அறிவுறுத்தும் பண்பு என இவற்றை நோக்கும் போது, பழந்தமிழரின் உயரிய வாழ்க்கை நெறிகள் வெளிப்படையாக தெரிகின்றன. அந்நெறிகள் பழங்கால சமுதாயத்திற்கு மட்டுமன்றி எக்கால சமுதாயத்திற்கும் பயனுள்ளதாய், வழிகாட்டுதலாய் அமையும் என்பது சிறப்பிற்குரியது.

## 2. முறையற்ற வாழ்க்கை முறை

பேரரசையும் தலைமைப் பண்பையும் விரும்பும் அரசன் தன் மக்கள் விரும்பும் வகையில் ஆட்சி நடத்த வேண்டும். மக்களின் குறைகளைப் போக்க வேண்டும். உணவு, உடை, உறையுள் முதலான அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்ய வேண்டும். நாட்டில் பசி, பஞ்சம், பிணி முதலியன இல்லாமல் மக்களைக் காக்க வேண்டும். கடுமையான வரி விதிக்காது, மக்களின் நிலையறிந்து செயல்பட வேண்டும். நாட்டில் களவு,கொலை முதலியன நடக்காமல் தடுத்து, மக்கள் அச்சமற்று வாழும்படி செய்ய வேண்டும். பகைவரின் அச்சுறுத்தல் இல்லாமல் நாட்டையும், நாட்டு மக்களையும் காப்பாற்ற வேண்டும். அமைதியான வாழ்க்கை வாழ வழி செய்திடல் வேண்டும். நீதிநெறி தவறாது ஆட்சி நடத்தவேண்டும். இவ்வகையில் ஆளும் அரசனை மக்கள் தங்கள் உயிராகப் போற்றி மதிப்பர்.

**நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்** (புறம்.186:1-2)

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்** (குறள்.388)

**குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கும் உலகு** (குறள்.544)

இவ்வரிகள் உணர்த்தும் கருத்துகளாவன; நெல்லும் நீரும் உலகிற்கு உயிராவன. இவ்வுயிரை ஆக்கும் நெல்லும் நீரும் செழிப்படைவது அரசன் முறை செய்து காப்பாற்றும் நிலை பொறுத்து அமையும். இக்கருத்தை அடியொற்றி குறளும் அறவழியில், தம் குடிமக்களைப் பிறர் நலியாமல் காத்தலைச் செய்யும் அரசனைக் கடவுளாகக் கொண்டு, இவ்வுலகம் அவன் அடியை நீங்காது பொருந்தியிருக்கும் நிலையைக் காட்டுகிறது. ஒரு நாடு வளம் மிகுந்து செல்வச் செழிப்புடன் அமைவதற்கு முறை தவறாத அரசாட்சி வேண்டப்படுகிறது.

**முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒவ்வாது வானம் பெயல் (குறள்.559)**

என்ற குறளின் கருத்தும் நோக்கத்தக்கது.

நல்லாட்சி அமையும்போது, அந்நாட்டிலுள்ள குடிமக்கள் நல்வாழ்வைப் பெறுவர். நல்லாட்சி அமையப்பெற்ற குடிமக்கள் நற்பண்புடையவர்களாக விளங்குவர். தீயசெயல்களை விலக்கி, நற்செயல்களைச் செய்வர். சேரனின் ஆட்சியில் இத்தகு பண்புடைய குடிமக்கள் இருந்தனர். பல்யானைச்செல்கெழு குட்டுவன், நற்பண்புகளுடன் நற்செயல்களைக் கொண்டுள்ள குடிமக்களைப் பாதுகாக்கும் முன்னோர் தலைவனாக இருந்துள்ளான். அவனைப் பதிற்றுப்பத்து,

**பிறர் பிறர் நலியாது வேற்றுப் பொருள் வெஃகாது**
**மைஇல் அறிவினர் செவ்விதின் நடந்து, தம்**
**அமர்துணைப் பிரியாது, பாத்து உண்டு, மாக்கள்**
**மூத்த யாக்கையொடு பிணிஇன்று கழிய;**
**ஊழி உய்த்த உரவோர் உம்பல் (பதிற்.22:7-11)**

என்று பாராட்டுகிறது.

பிறரை வருத்தாமல், பிறர் பொருளை விரும்பாமல், அறநெறியில் நடந்து, விருந்தினரைப் பாதுகாத்துச் சிறந்த இல்வாழ்க்கையை நடத்தியுள்ளனர். அவர்கள் முதுமையும் நோயும் இல்லாமல் நல்லுடம்போடு நெடுநாள் வாழும் வகையில், ஆட்சிசெலுத்திய முன்னோர்களின் வழித்தோன்றலாக, பாலைக்கௌதமனார் குட்டுவனைக் குறிப்பிடுகிறார். நாட்டில் முதுமையும் நோய் பலவும் மிகுந்திருந்தால், அது மனித நலத்தைக் குறைப்பதோடு, நாட்டின் நலம் குறையவும் பெரும் காரணமாக அமைகிறது. உடலாலும் வயதாலும் முதிர்ந்த நிலையை அடைவது முதுமை. முதுமையின் அடையாளமாக நரை தோன்றும். ஆனால், பிசிராந்தையார் எனும் புலவரோ, நரை தோன்றுவதற்குக் காரணம் முதுமையன்று. மனக்கவலையே என்கிறார். வீட்டிலோ, ஊரிலோ, நாட்டிலோ கவலை தரும்படியான நிலைகள் தனக்கு இல்லை. அதனால் வயதாகியும் தனக்கு நரை என்பது இல்லை என்று விளக்கம் தருகிறார்.

யாண்டு பல ஆக, நரை இல ஆகுதல்
யாங்கு ஆகியர்?' என வினவுதிர் ஆயின்,
மாண்ட என் மனைவியொடு, மக்களும் நிரம்பினர்;
யான் கண்டனையர் என்இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான், காக்கும்; அதன் தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழும் ஊரே (புறம்.191)

இதில், அறமல்லாதவற்றைச் செய்யாது, முறை செய்து காப்பாற்றும் மன்னனின் நல்லாட்சியை ஒரு காரணமாகக் குறிப்பிடுவது கருதத்தக்கது.

அடுத்து, பட்டினப்பாலை ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார், கரிகால் வளவனின் ஆட்சியில் பூம்புகாரில் வாழ்ந்த குடிமக்களின் பண்புகளை எடுத்துரைக்கின்றார்.

கொலை கடிந்தும், களவு நீக்கியும்,
அமரர்ப் பேணியும், ஆவுதி அருத்தியும்,
நல் ஆனொடு பகடு ஓம்பியும்
நான் மறையோர் புகழ் பரப்பியும்,
பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடி மேழி நசை யுழவர் (பட்டி.199-205)

என்னும் பாடல் மூலம் இல்லறத்தின் இயல்பு குன்றாது, பிறர்க்குக் குளிர்ந்த நிழல்போன்ற வாழ்க்கையினை, உழவுத் தொழில் செய்யும் வேளாண் மாந்தர் மேற்கொண்டிருந்தனர் என்கிறார். மேற்கூறிய கருத்துகளிலிருந்து நல்லாட்சி அமைவதற்கும் மக்கள் கவலையின்றி வாழ்வதற்கும், நற்பண்புடையவராக இருப்பதற்கும் அடிப்படைக் காரணமாக அமைவது அரசனின் முறையான ஆட்சியாகும். முறையான ஆட்சி நடத்தும் அரசன், மக்களை வருத்தாமல் பாதுகாக்கும் பண்புடையவனாகின்றான்.

மக்களைக் காக்கும் வகையில் அறப்பண்பையும் மறப்பண்பையும் உடையவனாக அரசன் இருக்க வேண்டும். இப்பண்புகள் ஒருவன் பிறந்த பின்பே அவனிடம் அமையப் பெறுவதாகும். ஆனால், ஒரு அரசன் தன்

குடிகளைக் காக்கும் பொருட்டு, தன் கருவிலே இப்பண்புகளைப் பெற்றிருந்தான் என்கிறது பதிற்றுப்பத்து. இதனை,

**நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்**
**ஒருங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்**
**எண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து**
**சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவும்**
**காவற் கமைந்த வரசு துறைபோகிய**
**வீறுசால் புதல்வற் பெற்றனை** (பதிற்.74:16–21)

என்னும் பாடல் வழி அறிய முடிகிறது. பத்து மாதமும் நிரம்பி, பேரறிவை விரும்பி அன்பும், நாணும், ஒப்புரவும், கண்ணோட்டமும், வாய்மையும், நடுவுநிலையும் முதலானப் பிற குணங்களையும் உடைய சிறப்பு நிறைந்த நன்மகனாக, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையை அவன் தாயானவள் பெற்றெடுத்தாள் என்கிறார் அரிசில்கிழார். அரசனுடைய நற்பண்புகள் மக்களின் பண்புகளுக்கு வழிகாட்டுதலாக இருக்கின்றன. மேலும், நற்பண்புடையவனாக இருந்து, நன் மக்களை உருவாக்குவது அரசனின் கடமையாக அமைகிறது. சான்றாக, பழந்தமிழரின் சமுதாயக் கடன்களை எடுத்துரைக்கும் பொன்முடியார்,

**நன்னடை நல்கல் வேந்தற்கு கடனே** (புறம்.312:4)

என்று உரைக்கின்றார். மக்கள் நன்னடையுடையவராக இருக்க வேண்டுமென்றால், அவர்களுக்கு நல்லொழுக்கத்தைக் கற்பிக்க வேண்டும். அவ்வாறு கற்பிக்கும் ஆசிரியனாக, மற்றவருக்கு முன்மாதிரியாக அரசன் இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

### 2.1 பண்பற்ற செயல்கள்

நற்பண்புகள் நிறைந்த சங்கச் சமூகத்தில் பண்பற்ற செயல்களும் நிகழ்ந்துள்ளன. இவை சில பாடல்களில் குறிப்பிடப்பட்டிருந்தாலும் நிகழ்வுகள் உண்மை என்பதை மறுக்க இயலாது. நிகழ்வுகள் குறைவாக இருந்ததா? நிறைந்து காணப்பட்டதா? ஆங்காங்கே ஒருசில இடங்களில் நடைபெற்றதா? என்ற ஐயங்களை அறியும் முன்னர், சங்கச் சமூகத்தில் இந்நிகழ்வுகள் நடந்துள்ளன என்பதை முதலில் அறிய வேண்டுவதாகிறது.

அறவழியில் ஆட்சி செய்ய வேண்டிய அரசர்கள் பொருளாசை கொண்டு அறத்திற்கு மாறாக நடந்தனர். குடிகளுக்குள்ளே போரிட்டு அழிவது, தோற்ற பகை மன்னர்களை இழிவு படுத்துவது, அவர்களின் அரசுகளை அழிப்பது, தன் நாட்டு மக்களைக் காக்கும் அரசன், பகைநாட்டு மக்களைத் துன்புறுத்துவது, வென்ற நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட பொருள்களைத் தம்மைப் புகழ்ந்துபாடும் புலவர்களுக்குக் கொடுப்பது முதலான செயல்களில் ஈடுபட்டிருந்தனர்.

மண்ணாசை, பொருளாசை, புகழாசை என பல ஆசைகளைக் கொண்டவராக அரசர்கள் இருந்தனர். அவ்வாசைகள் நிறைவேறும் பொருட்டு அறவழியிலிருந்து விலகி நெறியற்ற வழியில் நடந்தனர். நெறியற்ற அரசனிடம் அதிகாரமும் ஆணவமும் மிக்கிருந்தன. நெறியற்ற தன்மைக்கு சாமி. சிதம்பரனார் தனியதிகார வெறியைக் காரணம் காட்டியுள்ளார். பண்டைத் தமிழகத்து மன்னர்களிடையிலே அறநெறியும் மக்கட்பண்பும் நிறைந்திருந்தன. அவர்கள் சிறந்த செங்கோலர்களாக வாழ்ந்தனர். இது உண்மையாயினும் தனியதிகார வெறி காரணமாக பல அரசர்கள் அறநெறியைச் சிதைக்க அஞ்சவில்லை (சாமி.சிதம்பரனார், 1973:56). அதிகார வெறி பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டியது. ஆளும் மன்னர்களிடையே பகை உணர்வைத் தோற்றுவித்தது. மேலும், தன்னை முதன்மைப்படுத்தவும், தன் நாட்டை விரிவு படுத்தி, மற்ற நாடுகளைத் தன்கீழ் கொண்டு வரவும், தன்னேரில்லாத் தலைவனாக இருக்கவும் துணை நின்றது.

தன்னேரில்லாத் தலைவனாகத் தன்னை முதன்மைப் படுத்திக் கொள்ள அரசனுக்குப் பொருள் வளம் தேவைப்பட்டது. அதற்குரிய செயலாக பிறர் நாடு கொள்ளும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. நாடுபிடிக்கும் ஆசை பொன்னையும் பொருளையும் கைப்பற்றுவதாக அமைந்தது. மண்ணாசை கொண்டு போர் நிகழ்த்திய அரசனை,

**எஞ்சா மண்ணசை வேந்தனை (தொல்.பொருள்.6)**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. அக்கால அரசர்கள் பகைநிலங்களை வென்று அந்நிலங்கள் கொண்டுள்ள வளங்களைத் தாம் பெற்றனர். அவ்வாறு பகை மண்ணிடமிருந்து, பகைவரிடமிருந்து பெறும் நிலையை, உண்ணும் நிலையாகக் காட்டுகிறது புறநானூறு.

பிறர்மண் ணுண்ணுஞ் செம்மல் (புறம்.20:13)

என்று மாற்றாருடைய மண்ணைக் கொண்டு உண்ணும் தலைவனாக யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையைக் குறிப்பிடுகிறது. எனவே, பொருளாசை மண்ணாசைக்கு வித்திடுகிறது. இம்மண்ணாசை பேராசையாக மாறும்போது, பிறர் நலத்தைக் கெடுத்தாவது தன் வளத்தைப் பெருக்கும் மனநிலை உருவாகிறது. இம்மனநிலை இரு அரசர்க்கும் உண்டாகும் போது அங்கு கருத்து வேறுபாடு தோன்றுகிறது. இக்கருத்து வேறுபாடு பகைமையை உண்டாக்குகிறது. இது போர் உண்டாகும் நிலையாக மாறுகிறது. கருத்து வேறுபாடு உள்ள நிலையிலேயே பகைமை தோன்றி விடுகிறது. முதலில் மனநிலையில் நிகழும் போர் கருத்துக்களின் மோதலாக இருக்கிறது. அதாவது உள்ளத்தால் ஒருவரை ஒருவர் வெறுக்கும் நிலையையடுத்து ஒருவரை ஒருவர் பழித்துக்கூறும் வாய்ச் சண்டையாக வளருகிறது. புறத் தூற்றலையும் நேருக்கு நேர் கடுஞ்சொற்கள் பரிமாறிக் கொள்ளுதலையும் இந்நிலைக்கு உரியதாகக் கொள்ளலாம். இறுதியில் கைகலப்பு நிலை ஏற்படுகிறது (கி. பாண்டுரங்கன், 1986:1). இப்பகைமை போருக்கு அடித்தளமிடுகிறது.

ஒருவரை ஒருவர் வெறுப்பதும், இகழ்வதும், பழிப்பதும், இறுதியில் சண்டையிட்டு அழிவதும் ஆகிய நிலையை உருவாக்குகிறது. இறுதியில் நல்லுறவை ஏற்படுத்தாது, பகையை உருவாக்கி மனத்துயரைத் தரும் நிகழ்வாகப் போர் அமைகிறது. அரசனின் தனி அதிகார வெறியும், அதனால் உண்டாகும் ஆளுமை பண்புகளும், ஆசைகளும், பகையுணர்வும் போருக்கு அடித்தளமிடும் பண்புகளாக இருந்தாலும், அவை அரசனின் குறையுள்ள பண்புகளாக உள்ளமைந்துள்ளன என்பதை அறியமுடிகிறது.

## 2.2 அற ஆட்சிக்குரிய தடைகள்

பழந்தமிழர் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்கினர். கல்வி, வணிகம், அரசியல், கலை எனப் பலதுறைகளில் வளர்ச்சி பெற்றிருந்தனர். குடும்ப வாழ்க்கையில் விருந்தோம்பலைச் சிறந்த பண்பாக கொண்டிருந்தனர். அன்பு, இரக்கம், கருணை, பணிவு, பொறுமை முதலான குணங்களைக் கொண்டவராக மக்கள் இருந்தனர். அரசரும் கொடைத் தன்மை மிக்கவராக இருந்தனர். சான்றோரைப் போற்றினர். நாட்டின் அமைதி பேணுபவராக, நாட்டின் நலத்திலும் வளத்திலும் அக்கறை உள்ளவராக,

மக்களின் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாவலராக, நாட்டின் உயர்வுக்குப் பெரும் பங்களிப்பவராக இருந்தனர். ஈரமும் வீரமும் கொண்டு நல்லாட்சி புரிந்தனர். ஆட்சிக்கு உறுதுணையாக அமைச்சர்கள் சான்றோர்கள் இருந்தனர். அரசன் நீதிநெறியிலிருந்து தவறும் போதும், நெறியற்ற வழியில் நடக்கும் போதும், அவனுக்கு அறிவுரை வழங்கி நல்வழிப்படுத்தினர். சான்றாக, பதிற்றுப்பத்தில், பாலைக் கௌதமனார் அரசியலில் ஒவ்வாத சில பண்புகளைச் சேரனுக்கு எடுத்துரைத்து வழிப்படுத்துவதைக் கூறலாம்.

நாட்டை ஆளும் அரசனுக்குச் சில தடைகள் உள்ளன. அத்தடைகள் அவனை அறவழியில் ஆட்சி செலுத்தவிடாது. அத்தடைக்கு ஆட்படுகின்ற அரசன் தன் பண்புகளை இழந்து தன் ஆட்சிக்குத் தானே தடையாக இருப்பான். எனவே, அத்தடைகளை நீக்க, நல்லாட்சி புரிய வேண்டும் என்ற கருத்தமைய, பல்யானைச் செல்கெழு குட்டுவனுக்கு அறிவுரை வழங்குகின்றார் பாலைக் கௌதமனார்.

மிகுந்த கோபமும், மிகுந்த காமமும், அளவிறந்து ஒருவரை உவத்தலும், பகைவர்க்கு அஞ்சுதலும், பொய்க் கூறலும், பொருளிடத்து அளவுக்கு மிஞ்சி பற்று வைத்தலும், அளவுக்கு மிஞ்சிய தண்டனை அளித்தலும் அறவழில் ஆட்சி செலுத்தும் அரசனுக்குத் தடைகளாக இருப்பனவாகும். இதனை,

**சினனே, காமம், கழி கண்ணோட்டம்,**
**அச்சம், பொய்ச்சொல், அன்புமிக உடைமை,**
**தெறல் கடுமையொடு, பிறவும், இவ் உலகத்து**
**அறம் தெரி திகிரிக்கு வழியடை ஆகும்** (பதிற்.22:1–4)

என்று எடுத்துரைக்கின்றார். மற்றொரு புலவர், நல்ல பண்புகளுடன் இவ்வுலகத்தை ஆண்டார் மிகச் சிலரே என்கிறார். பாண்டி வேந்தர் ஆணை வழி நின்ற தலைவர்களுள் ஒருவன் தந்துமாறன். அவனுக்குச் சங்க வருணன் என்னும் நாகரியர் அறிவுரைக் கூறுமிடத்து, சில அறவுரைகளை முன் வைக்கின்றார். இதனை,

**பெரிது ஆராச் சிறுசினத்தர்,**
**சில சொல்லான் பல கேள்வியர்,**
**நுண் உணர்வினால் பெரும் கொடையர்,**
**கலுழ்நனையான் தண்தேறலர்,**
**கனிகுய்யான் கொழுந்துவையர்,**
**தாழ் உவந்து தழூஉமொழியர்,**
**பயன் உறுப்பப் பலர்க்கு ஆற்றி,**
**ஏமம் ஆக இந்நிலம் ஆண்டோர்,**
**சிலரே; பெரும! கேள், இனி; நாளும்,**
**பலரே தகையஃது அறியா தோரே;**
**அன்னோர் செல்வமும் மன்னி நில்லாது;**
**இன்னும் அற்று, அதன் பண்பே; அதனால்**
**நிச்சமும் ஒழுக்கம் முட்டிலை; (புறம்.360:1–13)**

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. சிறு கோபமும், பல கேள்வியும், நுண்ணுணர்வும், கொடையும், இனிய சொல்லும் கொண்டு, நற்பண்பு நற்செய்கைகளால் பலர்க்கும் பயன்பட வாழ்ந்து பாதுகாவலுடன் அரசியல் நடத்திய அரசர் மிகச் சிலரேயாவர். அவ்வாறு வாழ்வதை அறியாதவர் பலர். எனவே, இறப்பதற்கு முன் ஒழுக்கத்துடன் புகழ்பட வாழ வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். வள்ளுவரும், பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகியவை அறத்திற்கு எதிரான குற்றங்கள் என்கிறார் (குறள். 35). இந்நான்கு குற்றங்களையும் விட்டு நடப்பது அறமாகும் என்று எடுத்துரைக்கின்றார். இச்சான்றுகளின் வழி, அரசர் தீய பண்புகளிலிருந்து விலகி, நல்லாட்சி புரிய வேண்டும் என்பது புலவர்களின் குறிக்கோளாக இருந்துள்ளதை அறிய முடிகிறது. ஆனால், அதற்கு மாறான அறமற்ற நிகழ்வுகள் அக்காலத்தில் நடந்துள்ளதால், இத்தகைய அறவுரைகள், அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன.

அற ஆட்சிக்கு தடையாக இத்தீய பண்புகள் குறிப்பிடப்பட்டிருந்தாலும், இதில் முதன்மையான முக்கியமான தீய பண்பாக சினம் அமைந்துள்ளது. பகை, பகைவர் என்றவுடன் முதலில் வெளிப்படும் எண்ணம் கோபம். சினம் கொண்டு அச்சுறுத்துவது, எதிர்ப்பது, அழிப்பது அதன் தொடர் நிகழ்வுகளாக அமைகின்றன. பகைவர் என்ற நிலையில்

மட்டுமல்லாது நண்பர்கள், உறவினர்கள் இடத்தும் சினம் கொள்ளுவதைக் காணலாம். அன்றாட வாழ்வில் பலதரப்பட்ட நிலையில் கோபம் வெளிப்படுகிறது. குடும்பம், சமூகம், நாடு என அதன் பரப்பு விரிந்துள்ளது.

போர் முற்றுப்பெற்றாலும் அரசனின் சினம் முற்றுப்பெறாது தொடர்கிறது. அந்தத் தொடர்ச்சியில் பல நிகழ்வுகள் நடைபெறுகின்றன. அனைத்து நிகழ்வுகளும் பகைவரின் அழிவு நிகழ்வுகளாக அமைகின்றன. நாட்டை அழிக்கப் பகைவரது ஊரை எரியூட்டுதல், இல்லங்களை, மன்றங்களை, நீர் நிலைகளை, வயல்களைப் பாழ்படுத்தல், கழுதை பூட்டி உழுது நிலங்களின் வளமழித்தல், கொள்ளையிடல் முதலான செயல்கள் நடைபெற்றன.

அரசர்கள் சினம் கொண்டு சீறினால் ஒன்றும் செய்ய முடியாது. மன்னவனே சீறினால் அவனுக்கு மருந்து வேறு உண்டோ? இல்லை. நீதியற்று சினக்கும் மன்னவனின் செயல்களுக்கு பரிகாரமில்லை. இதனைக் கலித்தொகை,

**மருந்து இன்று மன்னவன் சீறின் (கலி.89:10)**

என்றுரைக்கிறது. தவறு செய்யும் பொழுது, அத்தவறினால் ஏற்படும் தீங்கைத் தடுக்கப் பரிகாரம் செய்வதுண்டு. இங்கு அரசன் செய்யும் தவறு நீதியற்று சினம் கொள்வது. அச்சினத்திற்குப் பரிகாரம் ஒன்றுமில்லை என்பதிலிருந்து நீதிக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளதை அறிய முடிகிறது. என்றாலும், சினம் கொண்டு நீதியற்று நடந்த அரசனின் பண்பற்ற நடத்தையையும் அறிந்து கொள்ள முடிகிறது.

சினம் என்பதே தீய பண்பு. அப்பண்பை நெறியற்ற வழியில் செலுத்தினால் எத்துணை தீமை விளையும். பிறர்க்குத் தீமை தரும் சினம் குற்றமாக அமையும். வீரத்தின் கடமை ஈரத்தைக் காப்பதே. ஈரத்தைக் காக்கும் அந்த வீரத்தின் தாயாம் சினத்தைப் பெரியோர்கள் பாராட்டுகின்றார்கள். ஆனால், அந்தச் சினம் வீரத்துக்குத் தாயாகாமலும் தன்னளவில் நில்லாமலும், வெறும் மறத்தைப் படைத்து, வெறியைப் படைத்து நல்லது கெட்டது ஒன்றும் அறியாமல் கண் மூடித்தனமாக விளையாடத் தொடங்குமேல், அப்போது அது பெருங்குற்றமாகி விடுகின்றது (க.பெருமாள்,1955:177) என்பது குறிப்பிடத்தக்கது.

மனித நாகரிகத்தை உலகத்திற்குப் பறைசாற்றிய சங்க காலத்திலும் சினம் உருவாகி, அதன் மூலம் பெரும் கேடுகள் நிகழ்ந்துள்ளன. சினத்தின் மூலம் உண்டாகிய துன்பங்களைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டியுள்ளன.

### 2.2.1 சினம்–சொல் விளக்கம்

வெகுளி, கோபம், சீற்றம், ஆத்திரம் போன்றவை சினத்தைக் குறிக்கும் சொற்களாகும். தொல்காப்பியம் வெகுளி என்று குறிப்பிடுகிறது. எண்வகை மெய்ப்பாட்டினுள் ஒன்றாக வெகுளி உள்ளது. இதனை,

**நகையே யழுகை இளிவரன் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்று**
**அப்பால் எட்டே மெய்ப் பாடென்ப**
**(தொல்.பொருள்.மெய்.251)**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் வெகுளி என்பது உருத்திரம் (தொல்.பேராசிரியம், 1975:5) என்றும், வெகுளியாவது சினத்தல், சீற்றம் எனினும் ஒக்கும் (ச. பாலசுந்தரம்,1989:269) என்றும் பொருள் காணமுடிகிறது. மேலும், இவ்வெகுளி எனும் சொல் வேகும்-உள்-இ என்னும் உரியடிகளாற் பிறந்த பெயராகும் (ச.பாலசுந்தரம்,1989:269). தொல்காப்பியத்தைத் தொடர்ந்து இலக்கியங்கள், அகராதிகள் சினத்திற்குப் பல பெயர்களைத் தந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் உடன்று, உருத்து, கதம், கதன், கதவ, கறுத்த, சினம், சினைஇ, சிரறுதல், சீற்றம், சீறி, செயிர், செயிர்த்தல், வெகுள், வெகுளி, வெகுண்டு முதலான சொற்கள் சினம் பற்றியதாக உள்ளது.

**உடன்று**

**நீ, உடன்று நோக்கும்வாய் எரி தவழ (புறம்.38:5)**

**உருத்து**

**கதுமென வுருத்த நோக்கமோ டதுநீ**
**பாஅல் வல்லா யாயினை (பதிற்.52:25–26)**

கதம்

**ஒல்லாது உடன்று எமர்செய்தார் அவன்கொண்ட**
**கொள்ஏறு போலும் கதம் (கலி.105:55–56)**

கதன்

. . . . . . . . . . . . . . வை மருப்பின்

காரி கதன் அஞ்சான் கொள்பவன் (கலி.20:21)

கதவ

. . . . . . . . . . . கடைமணி சிவந்தநின்

கண்ணே கதவ (நற்.39:6-7)

கறுத்த

கறுத்த தெவ்வர் கடிமுனை அலற (பதிற்.39:4)

சினம்

. . . . . . . . . சினம் கெழு குரிசில் (பதிற்.53:14)

சினைஇ

. . . . . . . . . . . . மடங்கலிற் சினைஇ (புறம்.71:1)

சிரறியவன்

சிரறியவன் போல செயிர்த்த நோக்கமொடு (பொரு.124)

சீற்றம்

முருகற் சீற்றத்து உருகெழு குரிசில் (புறம்.16:12)

சீறி

குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி (பதிற்.63:10)

செயிர்

. . . . . . . செயிர் நோக்கு ஆடவர் (அகம்.371:2)

செயிர்த்தல்

செற்றன்று ஆயினும் செயிர்த்தன்று ஆயினும்

உற்றன்று ஆயினும் உய்வு இன்று மாதோ (அகம்.226:1-2)

வெகுள்

சிறுவரை தங்கின் வெகுள்வர் (கலி.93:32)

வெகுளி

செலியர் அத்தை நின் வெகுளி-வால்இழை

மங்கையர் துணித்தவாள் முகத்து எதிரே! (புறம்.6:23-24)

வெகுண்டு

கூற்று வெகுண்டு வரினும், மாற்றும் ஆற்றலையே

(பதிற்.14:10)

சங்க இலக்கியத்தை அடுத்து, அகராதிகள் சினப்பெயர் வகைகளைக் குறிப்பிட்டுள்ளன. பிங்கல நிகண்டு பண்பைக் குறிக்கும் பகுதியில் வெகுளியைக் குறிப்பிட்டு, அவ்வெகுளிக்குரிய பெயர்களைத் தந்துள்ளது. இதனை,

**கறுவம், கோபம், கலாம், மறம், குரோதம்**
**வெகுளி (என்பர்) வேரமும் (ஆகும்) (பிங்.நூற். 71:114)**

எனக் குறிப்பிட்டுள்ளது. வெகுளியைக் குறிப்பதாக ஆறு பெயர்கள் உள்ளன. மதுரைத் தமிழ்ப் பேரகராதியும், நர்மதாவின் தமிழ் அகராதியும் சினத்தைக் குறிக்கும் பெயர்களாக வெகுளி, வெகுட்சி, வெகுளல், வெகுளிப்பு, வெகுளுதல், வெகுள்வு, வெப்பு முதலானவற்றைக் குறிப்பிட்டுள்ளது. வெகுளி அதிகமானால் கோபமாகிறது. பொதிகை நிகண்டு,

**வெகுளி மிஞ்சிடலுங் கோபமு மாகும் (பொதிகைநிக.12:2187)**

என்று கோபத்தின் நிலையைக் காட்டுகிறது. ஆனால், சங்க இலக்கியம் கோபம் என்பதற்கு இந்திரகோபப் பூச்சியைப் (திரு.முரு:15) பொருளாகக் கொண்டுள்ளது.

நாமதீப நிகண்டு, சூடாமணி நிகண்டு, பிங்கல நிகண்டு, திவாகரம், சேந்தன் திவாகரம் முதலானவை கோபத்திற்குரிய பெயர்களை வகைப்படுத்தியுள்ளன. இதில் நாமதீப நிகண்டும் திவாகரமும் கோபத்தின் பெயர்களாக இருபதைக் குறிப்பிட்டுள்ளன.

காய்தல், உருத்தல், சலம், சீற்றம்
கதம், கறுப்பு, பவம், தொந்தம், செயிர்
வெகுளி, முணவல், செற்றம், குரோதம்
சிவப்பு, உருத்திரம், வயிரம், அரில்
கலாம், சினம், கோபம் (நாமதீபநிக. 4:637)

**கறுப்பு, குரோதம், கலாமே, உடன்றல்,**
**சிவத்தல், வெயர்த்தல், விளிவே, செற்றம்**
**முனைவே, காய்தல், பைத்தல், விடைத்தல்**
**சினமே, வேகம், கதமே, வெகுளி**
**முனிவே, சீறல், உருத்தல், கோபம் (திவாகரம். நூற். 9:1581)**

கோபத்தை, சேந்தன் திவாகரம் பத்தாகவும், சூடாமணி நிகண்டு ஒன்பதாகவும், பிங்கல நிகண்டு நான்காகவும் வகைப்படுத்தியுள்ளன.

**சினம், மறம், முனிவு, செயிர், கறுவு, சீற்றம்**
**வெகுளி, கதம், வைரம்'வேரம், செற்றம்**
**(சேந். திவா. நூற்.8:103)**

**வெறுத்தல், சினம், குரோதம், வெகுளி, அரிப்பு**
**சீற்றம், கலாம், கதம், செயிர் (சூடா. நிக. நூற். 8:62)**

**முனிவும், செயிரும், சீற்றமும், வியர்ப்பும்**
**சினம் (என்கிளவி தெரிக் குங்காலே) (பிங். நிக. நூற். 7:115)**

கோபத்தின்-சினத்தின் பெயர்களாக இவை அமைந்துள்ளன என்றாலும், தமிழ் இலக்கியங்களில் ஆளப்பட்டுள்ள சொல்லாட்சிகளாக இவை இருந்துள்ளன என்பது தெளிவாகிறது. தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம் உணர்ச்சிகளைக் குறிப்பிடுகையில் கோபித்தலைக் குறிக்கும் 26 பெயர்களையும், கோபத்தைக் குறிக்கும் 29 பெயர்களையும் பட்டியலிட்டுக் காட்டுகிறது (ச.இராசேந்திரன், 2001:245).

கோபத்தின் பெயர்களாக பொதுவாக இவை குறிப்பிடப்பட்டாலும், கோபம் வெளிப்படும் தன்மை பொறுத்து, அது உண்டாக்கும் துன்பம் பொறுத்து, கோபம் தணியாது தொடரும் நிலை பொறுத்து முன்கோபமாக, பெருங்கோபமாக, தணியாத கோபமாக அமைகிறது. அவ்வாறு அமைகின்ற கோபத்தின் நிலை பொறுத்து அதன் பெயர்கள் அமைந்துள்ளன.

### 2.2.1.1 முன்கோபத்தின் பெயர்

**குருத்தமுன் கோபம் வெம்பல் கொந்தலே**
**களிதல் கோம்பல் (சூடா.நிக.நூற்.8:63)**

**கோம்பல், வெம்பல், கொந்தல் முன்கோபம்**
**களிதலும் (அதற்கே கழறல் ஆகும்)**
**(சேந்த.திவா.நூற்.8:105)**

### 2.2.1.2 பெருங்கோபத்தின் பெயர்

*பெருத்தகோ பம்வி டைத்தல் பெருகிய முனைதல் சீறல்*
*உருத்தலே யுலறல் காய்தல் உடற்றல்தீ விரமும் ஆகும்*
*(சூடா.நிக.நூற். 8:63)*

*உருத்தல், சீறல், உலறல், முனைதல்*
*உடற்றல், காய்தல், விடைத்தல், தீவிரத்தொடு*
*(தொடுத்த எட்டும்) பெருத்த கோபம் (சேந்.திவ.நூற். 8:106)*

*உடற்றல், சீறல், உருத்தல், காய்தல்*
*முனைதல், விடைத்தல், பைத்தல், பெருஞ்சினம்*
*(பிங்.நிக.நூற். 7:118)*

### 2.2.1.3 தணியாக் கோபம்

*கோம்பலும், கொந்தலும், கனிதலும், வெம்பலும்*
*வெதும்பலும் தணியாக் கோபம் (என்ப)*
*(பிங்.நிக.நூற். 7:117)*

*சலமும், வயிரமும், செற்றமும் (மற்றுஇவை)*
*கறுவு கொள் நெஞ்சமும் கடைமுடிவு அளவும்*
*தணியா முனிவு தான் ஆகும்மே (பிங்.நிக.நூற். 7:119)*

*பதிற்றுப்பத்து, மிகுந்த சினத்தை,*
*கடுஞ் சினங் கடாஅய் . . . . (பதிற். 30:33)*

*பெருஞ் சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே (பதிற். 49:17)*

*என்று கடுஞ்சினமாக பெருஞ்சினமாக குறிப்பிடுகிறது. மேலும், சினத்தின் அச்சமாக,*

*முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு (பதிற்.15:2)*

*என்றும், மாற்ற முடியாத தன்மையாக,*

*மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம் (பதிற். 51:35)*

*என்றும் சினத்தின் மிகுதியை எடுத்துக்காட்டுகிறது. சினத்தின் கடுமையை,*

**கூற்று வெகுண்டன்ன முன்பொடு**
**மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே (புறம்.42:23-24)**

என்ற புறநானூற்று வரிகள் உணர்த்துகின்றன.

### 2.2.2 சினக்குறிப்பு

சினக்கும்போது முகத்தின் இயல்பு மாறுகிறது. முகம் கடுமையாகிறது. கண்கள் சிவந்து பிறர் அஞ்சுகின்ற தோற்றமாக அமைகின்றது. சினம் கொண்டு பகைவரை நோக்கும் பொழுது அப்பகைவர் அழிகின்றார். பகைவரின் நாடுகள் அழிகின்றன. சினத்தின் குறிப்பாய் சிவந்து நோக்குதல் வெளிப்படுகிறது. இது,

**செருமிகு சினவேந்தன் சிவந்து இறுத்த புலம்போல**
**எரிமேய்ந்த கரி வறல்வாய் (கலி.13:1-2)**

**சிதைந்தது மன்ற நீ சிவந்தனை நோக்கலின் (பதிற்.27:1)**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சினந்து நோக்கினால் அழிவு உண்டாகிறது. சிவந்து நோக்கலோடு பிற குறிப்புகளும் சினக் குறிப்புகளாக உள்ளன. இதனை,

**கறுப்பும், செவப்பும், கஞறலும், கன்றலும்**
**வியர்ப்பும், வெதிர்ப்பும், புழுங்கலும், கொதித்தலும்**
**வெய்துறலும், புகைதலும், வயிரமும் (இனைத்தும்)**
**சினத்தின் குறிப்பினைத் (தெரிக்கும்) (கிளவி)**
**(பிங்.நிக.நூற்.7:116)**

**கறுப்பு, சிவப்பு, கஞறல், கன்றல்,**
**வியர்ப்பு, புழுங்கல், புகைதல், வெய்துறல்**
**சினத்தின் குறிப்பில் (தெரிக்கும்) கிளவி**
**(சேந்.திவா.நூற்.8:104)**

என்று பிங்கல நிகண்டும், சேந்தன் திவாகரமும் வகைப்படுத்தியுள்ளன.

மனித மனத்திடையே உருவாகி, வெளிப்படும் சினத்தைப்பற்றி தமிழிலக்கியம் முழுவதும் பரவலாகக் காண முடிகிறது. சினம் அல்லது வெகுளி

என்பதனைக் குறிக்கும் சொற்கள் ஏராளம். அதனோடு நிகண்டுகள், அகராதிகள் போன்றவற்றுள் வேறுபிற சொற்களும் காணப்படுகின்றன. இதன் எண்ணிக்கை ஏறக்குறைய 80 சொற்களுக்கு மேலாக உள்ளன. எனினும், நடைமுறையில் வெகுசில சொற்களே நிலைத்து நின்று பயன்பாட்டில் உள்ளன.

சான்றாக, கோபம், சினம், வெகுளி என்பன. இதில், தொல்காப்பியர் குறித்த வெகுளி தற்காலத்தில் அப்பாவி என்ற பொருள் மாற்றத்தைப் பெற்றுள்ளது. ஒன்றும் தெரியாத நிலையில் உள்ளவரைக் குறிப்பிடுவதாக உள்ளது. சான்றாக,

**வெகுளிப்பெண் பதிக்கு யமன் (திருப்பொருள்.606)**

என்பதில், இன்ன இடத்தில் இன்னது சொல்ல வேண்டும், இன்னது செய்ய வேண்டும் என்பது தெரியாத அப்பாவிப் பெண்ணைக் குறிக்கிறது. அடுத்து, சினம் என்பது அருகியே வழங்கப்படுகிறது. சங்க இலக்கியத்தில் இந்திரப் பூச்சியைக் குறித்த கோபம் இக்காலத்தில் சினப் பொருளில் கோபமாக பெரும் பான்மையாக வழங்கப்படுகிறது. சினம் குறித்த இச்சொற்களைக் காணும்போது, பழந்தமிழ் இலக்கியத்தில் இச்சொற்கள் வழக்கத்தில் உள்ளவையாக இருந்திருப்பதை அறிய முடிகிறது. என்றாலும், தீயபண்புள்ளதாக கருதப்படும் சினத்திற்கு, கோபத்திற்கு இத்துணை பெயர்களா? என வியப்படைய வேண்டியுள்ளது.

இந்தச் சொல்லாட்சிகளைக் காணும்போது, அச்சமுதாய மக்களிடம் இச்சொற்களின் ஆளுமை பதிந்திருத்தலை உணரமுடிகிறது. முன்கோபம், பெருங்கோபம், தணியாத கோபம் முதலானவற்றின் பெயர்கள் கோபம் கொண்டவரின் மனநிலையின் செயலாக்கத்தை வெளிப்படுத்துவனவாக உள்ளன. சிறந்த நாகரிகம் பண்பாடு உடைய பழந்தமிழ்ச் சமூகத்தில், பண்பாட்டுக்கு ஒவ்வாத சினத்தைப் பழந்தமிழர் கொண்டிருந்தது தவறான இயல்பாக உள்ளது. இதனை,

**நாகரிகமும் அல சினம் கொளல் (திருப்பொருள்.1145)**

என்ற பாடல்வரி மூலம் அறியமுடிகிறது. நயத்தக்க நாகரிக சமுதாயக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது, கோபம் கொள்வது அநாகரிகமாகவும்

அமைகிறது என்ற கருத்து (ச.விவேகானந்தசாமி,1986:282) இங்கு சிந்தனைக்குரியதாக உள்ளது.

### 2.2.3 சினம்-பிறப்பு

அதிகாரம், அறியாமை, ஆணவம், இயலாமை, பகையுணர்வு, பேராசை, வெறுப்பு போன்ற பல காரணங்களால் சினம் பிறக்கின்றது. பொறுமை என்ற பண்பை இழக்கும் போதும், நல் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த இயலாத போதும் இது தோன்றுகிறது.

சினத்தின் பிறப்பை நான்கு வகைகளில் தொல்காப்பியம் உள்ளடக்கியுள்ளது. ஒரு அரசனுக்கு நான்கு காரணங்களால் சினம் பிறக்கும். இதனை,

**உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற**
**வெறுப்பின் வந்த வெகுளி நான்கே**
**(தொல்.பொருள். மெய்.254)**

என்கிறது தொல்காப்பியம். கைகால் முதலான உறுப்புகளை ஊறுபடுத்தும் போதும், தன் குடிகளுக்குத் தன்னால் புரக்கப்படும் குடிகளுக்குத் தீங்கு வரும் போதும், தன் நாட்டைக் கோல் கொண்டு ஒறுக்கும் போதும், தன் வீரத்தின் புகழை, ஆற்றலை மாற்றரசன் இகழும் போதும் சினந்தெழும் நிலை உருவாகிறது.

சான்றாக, புறநானூற்றில் இந்நிலையைக் காணலாம். மாந்தரஞ் சேரலிரும் பொறையின் ஆட்சிக்குட்பட்ட விளங்கில் என்னும் ஊரைப் பகைவர் முற்றுகையிட்டு வருத்தினர். அவன் தன் படைகளைக் கொண்டு, பகைவரை விரட்டி விளங்கிலரைப் பாதுகாத்தான் (புறம். 53:4-5). சோழன் பெருநற்கிள்ளி தம் ஊரைக் கைப்பற்ற வந்த வீரனாகிய மல்லனுடன் போரிட்டதை,

**ஊர்கொள வந்த பொருநனொடு**
**ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே (புறம். 82:5-6)**

என்பதிலிருந்து அறிய முடிகிறது.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, பகைவர்கள் இளையவன் என்றும், இவனுடைய நாட்டை உயர்வாகப் புகழும் புலவர்கள் நகைப்பிற்கு இடமாவார்கள் என்றும் இகழ்ந்தனர். இகழ்ச்சியைப் பொறுக்காது, அவ்வரசன் பகைவரிடம் சீறுகின்றான் (புறம்.72). சோழன் நலங்கிள்ளியோ,

**. . . . . . . . . . . . . . . . . . . . என்**
**உள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்**
**றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல**
**உய்ந்தனன் பெயர்தலோ வரிதே (புறம்.73:5-8)**

என்று சூளுரைக்கின்றான்.

இவற்றில் உடல் உறுப்புகளைச் சிதைத்தல் மட்டுமல்ல, அரசியல் உறுப்புகளைச் சிதைத்தாலும் வெகுளி தோன்றும் என்கிறார் உரையாசிரியர். தூது ஒற்று, அமைச்சு முதலிய அரச உறுப்புகளைச் சிதைத்தாலும் சினம் உருவாகும் (ச. பாலசுந்தரம்,1989:269). ஆட்சியைத் திறம்பட நடத்த, கவனமுடன் செயல்பட இவர்களின் துணை தேவைப்படுகிறது. எனவே, இவர்களுக்குத் துன்பத்தை உண்டாக்குபவர் மீது கோபம் எழுகிறது.

குடிகோளுக்குப் பொருள் உரைக்கும் பேராசிரியர், குடிமக்கள் மட்டும் அல்லாது மனைவி சுற்றம் என தன் குடும்பத்திற்குத் தீங்கு வரும் போதும் சினமானது தோன்றும் என்கிறார். தாரமுஞ் சுற்றமுங் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்குக் கேடு சூழ்ந்த நிலையில் சினம் பிறக்கும் (பேராசிரியர், 1975:16) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நான்கு பொருளினால் சினம் உருவாகிறது என்றாலும் இந்நான்கின் நிலை இரு அரசர்களுக்கும் பொருந்துவதாக உள்ளது. தான் பிறர்க்குச் செய்யும் போதும் தனக்குப் பிறர் செய்யும் போதும் இருநிலையிலும் சினம் தோன்றுகிறது. இந்நிலை மாறாது தொடர்ந்து நடைபெறுவதாக உள்ளது. அரசன் மட்டுமல்லாது, குடிகளுக்கும் இத்தன்மை பொருந்தும். ஒருவன், தனக்கு, தன் குடும்பத்திற்குத் தீங்கு உண்டாகும் போது, அத்தீங்கைச் செய்தவரின் மீது கோபம் கொள்ளுதல் இயல்பாகிறது.

### 2.2.4 குற்றங்கள் தோன்றுதல்

தொல்காப்பியம் சினம் தோன்றும் நிலைக்கு நான்கு காரணங்களை எடுத்துரைத்ததைப் போன்று தொல்காப்பிய ஐந்திணை அச்சினமானது நான்கு குற்றங்களைத் தோற்றுவிக்கிறது என்று எடுத்துரைக்கின்றது. மனிதனை மனிதன் பகையால் உறுப்புகளைப் பிளந்தறுத்தல், எளியவரைத் துயரப் படுத்தி குற்றம் சுமத்திக் கடிந்துரைத்தல், இரக்கமில்லாமல் வெறி பெறத் துடித்துப் பிறர்தலை வெட்டுதல், சவால் விடுதல் ஆகிய நான்கு குற்ற உணர்வுகள் சினத்தால் உண்டாகின்றன. இதனைப் புரட்சிதாசன்,

**அங்கம் பிளத்தல் அடுத்தார் நலிவுறப்**
**பங்கம் புடைத்தல் பரிவின்றிப் பொங்கித்**
**துடித்துத் தலைவெட்டிச் சூளுரைத்தல் நான்கும்**
**முடித்தல் வெகுளி முரண் (தொல்காப்பிய ஐந்திணை.86)**

என்று உரைப்பதுடன், தவறு என்று அறிந்தும் அதைச் செய்யத் தலைப்படல், சினத்தால் உண்டான வெறியாகும். ஆராயாது முற்படல், கட்டுப்பாட்டை மீறியதாகும். விளைவைப் பொருட்படுத்தார் வெகுளியால் அழிவர் (புரட்சிதாசன், 1988:402).

திருவள்ளுவரும் அரசனது செல்வ மேம்பாட்டிற்குக் காரணம் வெகுளியாகிய குற்றங்கள் இல்லாததே ஆகும் என்கிறார். சான்றாக,

**செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து (குறள்.431)**

**இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்**
**சீறின் சிறுகும் திரு (குறள்.568)**

என்னும் பாடல் வரிகளைக் குறிப்பிடலாம். இதில் குற்றம் கடிதலுக்கு விளக்கம் காணும் பரிமேலழகர், "காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனையும் அரசன் தன் கண் நிகழாமல் கடிதல் (பரிமேலழகர்,1957:148) என்கிறார். இச்சினத்தினால் ஐம்பெருங்குழுவும் உறுதிச்சுற்றமும் போன்றவற்றின் அன்பை இழத்தலும் ஏற்படும்

(ஞா. தேவநேயன்,1969:255) என்று பொருள் கூறப்பட்டுள்ளது. அரசனது மேம்பாட்டிற்குச் சினம் கொள்ளாமை துணை செய்யும் என்றும், சினம் கொண்டால் அரசனுக்குத் துணை நிற்கும் ஐம்பெருங் குழுவின் சுற்றத்தின் அன்பின்மைக்கும் வெறுப்பிற்கும் ஆளாகக் கூடும் என்றும் அறிய முடிகிறது.

### 2.2.5 சினம்–வெளிப்பாடு

மக்கள் அனைவரிடத்தும் சினம் கொள்ளும் பண்பு காணப்படுகின்றது. இது அனைவருக்கும் இருக்க வேண்டிய பண்பாகவும் எதிர்பார்க்கப்படுகிறது. அளவுக்கு மீறி பிறர் தீங்கு செய்யும் போது, அதனை எதிர்க்காது பொறுத்துப் போகும்போது கோழைகள் என்றும் ஏமாளிகள் என்றும் இகழப்படும் நிலை உள்ளது. இந்நிலையில் சினம் தேவைப்படுகிறது. பிறரிடமிருந்துத் தற்காத்துக் கொள்ளவும் எதிர்க்கவும் சினம் வேண்டப்படுகிறது. விலங்கினங்களும், பிற உயிரினங்களால் தமக்கு தீங்கு ஏற்படும் போது, தன்னைத் தற்காத்து கொள்ள அச்சுறுத்தலை வெளிப்படுத்துகின்றன. விலங்கின் இயல்பைப் பொறுத்து அவற்றைக் கண்டு அஞ்சுகிறோம்.

அஞ்சுகின்ற தன்மை, அது தரும் தீங்கு பொறுத்தும் அதன் அச்சுறுத்தல் பொறுத்தும் உண்டாகிறது. இந்த அச்சுறுத்தலைக் கோபத்தின் வெளிப்பாடாகக் கொள்ளலாம். தனக்கு, தீங்கு வராத போது இயல்பாக இருப்பதும், மற்றவையால் தீங்கு வரும்போது எதிர்க்கும் விதமாக அச்சுறுத்தல் அமைவதும் அவற்றின் இயல்பாக அமைகிறது. இந்நிலையை மனிதர்க்கும் பொருத்திக் காணலாம். பிறரால் தனக்குத் தீங்கு உண்டாகும் போது, அத்தீங்கை உண்டாக்கியவர் மீது முதலில் வெறுப்பு ஏற்படுகிறது. அவ்வெறுப்பு கோபமாக வெளிப்படுகிறது. பலமற்றவனிடம் அச்சுறுத்தலாகவும் பலமுள்ளவனிடம் அடங்கிப் போவதாகவும் அக்கோபத்தின் வெளிப்பாடு அமைகிறது. பல மற்றவனிடமும் கோபம் கொள்ளுதல் கூடாது என்கிறது வள்ளுவம் (குறள்.301). இக் கோபம் ஒரு காலகட்டத்தோடு நின்று விடாது. மனித சமுதாயம் உள்ளவரை நிகழ்ந்து கொண்டு இருக்கும்.

தற்கால ஆய்வாளர் சிலர் சினம் பற்றியும் அச்சினம் உண்டாகும் காரணம் பற்றியும் ஆராய்ந்துள்ளனர். உள்ளத்தை இடறுகின்ற இடர்களைப் பொறுக்க முடியாமல் எழுச்சியடைவதே உணர்ச்சிவயப்படுவதே சினம் ஆகும். இதனை,

இடர் பொறுத்திடா எழுச்சியே-'சினம்' (திருப்பொருள்.1139)

என்று வரையறைச் செய்யப்பட்டுள்ளது (ச.விவேகானந்த சாமி,1986:281). கோபம் அல்லது வெகுளி என்று சொல்லப்படும் நமக்கு விருப்பமில்லாத அல்லது அருவருப்பாக இருக்கின்ற ஓர் ஆள் அல்லது ஒரு பொருளுக்கு விரோதமாக தம் உள்ளத்தில் உண்டாகும் ஒருவித காட்டமான உணர்ச்சியே கோபம் என்று சொல்லப்படும் (செந்துறை முத்து,1993:119). ஆணவத்திற்குப் பெரிதும் ஆட்பட்டாரே அடிக்கடி சினம் கொண்டு சீறி விழுவர் (சி. இலட்சுமணன், 1995:69) என்ற கருத்தும் உள்ளது. சில வேளைகளில் கோபம் நன்மை செய்ய விரும்பும் நிலையை உணர்த்துகிறது அல்லது முறைப்படுத்துகின்றது. இயலாமையை நிலை நாட்டுகிறது. வன்முறையைக் கண்டிக்கிறது. அதே சமயத்தில் கோபம் என்பது மற்றவர்களுக்கு வெறுப்பையும் சலிப்பையும் கொடுக்கின்றது. மகிழ்ச்சியைக் குறைக்கின்றது. சில சமயங்களில் விபரீதங்களை விளைவிக்கின்றது. ஆகவே, கோபத்தை மட்டும் பலரும் பல விதமாகப் பார்க்கலாம் (செ. தோமைராஜன்,2001:60). தன்னையும் கெடுத்து, பிறரையும் கெடுத்து, தற்காலத்திலும் துன்பம் உண்டாக்கிப் பின்னரும் துன்பத்தை நீடிக்கச் செய்யும் ஓர் உணர்ச்சிவயப்பட்ட பகை உணர்வு சினமாகும் (வாழ்வியல் விழுமியங்கள்,2002:101). வாழ்வியற் களஞ்சியம், சினம் மனிதர்களிடம் தோன்றும் முக்கிய மனவெழுச்சிகளுள் ஒன்று என்று குறிப்பிட்டு கீழ்க் கண்டவர்களின் கூற்றுகளை முன்வைக்கின்றது.

பிரிட்ச்சு (Bridges) என்பவர் பிறக்கும் போது மனிதனிடம் சினமில்லை என்று கூறுகிறார். மேலும்,அவர் சினம் ஒருநிலைப்பட்டதன்று. பரந்த அளவுக்கு மாறுபடுந்தன்மையுடையது. மனமுறிவு அல்லது எண்ணக்குலைவு, செயற் குலைவு ஆகியன காரணமென்றாலும் பல உளவியற் காரணங்களுமுண்டு என்கிறார். தொடர்ந்து, அவர் ஒருவருடைய விவாதத்தை மற்றவர் புரிந்துகொள்ளாத போதும் சுயமரியாதைக்கு இழுக்கு ஏற்படுகின்றபோதும் எந்த மனிதனும் சினம் கொள்கிறான் என்று விளக்கமளிக்கிறார்.

வில்லியம் மெக்டூகல் சண்டையிடுதலுக்கான இயல்பூக்கத்தின் (combatinstinct) விளைவாகவே சினம் அமைகின்றது என்கிறார். சினம் இறப்பு

இயல்பூக்கத்தின் (Death Instinct) ஒரு படிவம் என்று சிக்மன்ட் பிராய்டு எடுத்துரைக்கிறார். இச்சினம் மரபுநிலையாகவும் அமைகிறது. பகைவர்களுடன் சண்டையிட்டு அவர்களை அழிக்கும் மரபுவழியில் அமையும் ஒரு துடிப்பாகவும் அமைகிறது. மனமுறிவு, ஆக்கிரமிப்பு, புனைக் கொள்கையின்படி (Frustration-Aggression Hypothesis) சினம் என்னும் மனவெழுச்சி மனிதன் ஏதேனும் ஒரு குறிக்கோளை நாடும் நடவடிக்கையில் சந்திக்கின்ற மனமுறிவினால் ஏற்படுகிறது (வாழ்வியற்களஞ்சியம், தொகுதி-ஒன்பது, 2004:155).

அறிவியல் ரீதியில் பார்த்தால், தலையில் மூளைக்கு உள்ளே ஹைபோதலாமஸ் (Hypothalamus) என்ற நாளமில்லாச் சுரப்பியின் வாயிலாகத்தான் என்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது (சி. இலட்சுமணன், 2006:89). இவ்வாறு துன்பத்தைப் பொறுக்க முடியாதபோது, விருப்பம் இல்லாத ஒன்றின்மீது, இயலாமையின் போது, தன்மானம் பாதிக்கப்படும்போது, நற்செய்கை, நல்லெண்ணம் அகலும்போது, ஏதேனும் ஒன்றுகிடைக்க பெறாதபோது இச்சினம் வெளிப்படுகிறது எனலாம். இவ்வாறு உருவாகும் சினம் எப்பொழுது நிறைவுறுகிறது என்ற கேள்வி எழுகிறது. பழிக்குப்பழி வாங்குதல் அல்லது வஞ்சகச் செயல்கள் செய்தல் போன்றவற்றால் நிறைவுபெறுகிறது. சிலவேளைகளில் காலமும் மாற்றத்தைத் தருகிறது.

### 2.2.6 சினம் தவிர்த்தல்

சினம் கொள்வதால் மனத்தில் மகிழ்ச்சி மறைகிறது. இதனால் மனக்கலக்கம், தடுமாற்றம், நிலை கொள்ளாமை போன்றவை ஏற்படுகின்றன. இயல்பு நிலையில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. தீய எண்ணத்தை உருவாக்குகிறது. இத்தீய எண்ணம் தீய செயல்களைத் தூண்டுகிறது. பகை, சண்டை, கொலை போன்ற தீய நடவடிக்கையில் ஈடுபடச் செய்கிறது. “கோபம் உண்டாகுமானால், மனக்கலக்கம் உண்டாகும். மனக்கலக்கம் உண்டாகவே அறிவு கெடும். அறிவு கெடவே உயிர்கள் மீது அருள் இல்லாமற் போகும். அருள் இல்லையானால் அவ்வுயிர்களுக்குத் துன்பம் செய்ய நேரிடும் (செந்துறை முத்து,1993:119) என்ற கருத்தும், கோபத்தினால் ஒருவரது கெட்ட குணங்களும் குறைபாடுகளும் மேலோங்கி ஆட்சி செய்கிறது. இதனால் மிக மோசமான விளைவுகளைக் கொடுக்கக் கூடிய மூர்க்கநிலை

வெளிக்காட்டப்படுகிறது. முடிவில் அழிவே ஏற்படுகிறது (ஷிவா,2003:16) என்ற கருத்தும் இங்குக் கருதத்தக்கதாக உள்ளது. பிறரின் துன்பத்திற்குச் சினம் காரணமாக அமைகிறது.

### 2.2.6.1 அறநூல்கள் கடிந்துரைத்தல்

சினம் கொள்வதற்குரிய காரணம் ஒருவனிடத்தில் இருந்தாலும் சினம் கொள்ளாதிருத்தல் சிறந்தது. இதனை,

**உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினங் காத்துக்**
**கொள்ளும் குணமே குணமென்க (நன்னெறி.8)**

என்னும் பாடல் வரிகளால் அறியலாம். கோபத்தைக் காத்துக் கொள்கின்ற குணமே அருமையான குணம் எனப்படுகிறது. பொறுத்துக் கொள்ள முடியாத அளவு பிறர் தீமை செய்யும் பொழுதும் தம்மிடம் உண்டாகும் சினத்தைக் கைவிட வேண்டும். இதனை,

**. . . . . . . . . . . . . . . . என்றும்**
**விடல் வேண்டும் தங்கண் வெகுளி (நான்மணிக் கடிகை.11)**

என்கிறது நான்மணிக்கடிகை. பெரு நெருப்பில் தோய்வது போன்று துன்பத்தை ஒருவன் செய்த போதிலும் அவன் மீது கோபப்படாமல் இருப்பது நல்லது (குறள்:308). திரிகடுகமும், தன்னுள் எழும் சினத்தை அடக்குதல் நல்ல அறிவுடைய பண்பாளர் செயல்களில் ஒன்றாகக் காண்கிறது (திரிகடுகம்:40).

ஒருவன் இழிவாகப் பேசினால், அவ்இழிவு தமக்குரியது அல்ல என்றும், இல்லை பொய் சொன்னான் என்றும் பொறுத்து கொள்ள வேண்டும். அவ்வாறு பொறுக்கும் தன்மையானது, முள் தைத்த பொழுதும் மரம் விழுந்த பொழுதும் பொறுத்தல் போலும் (எஸ்.முத்துரத்னம், முதல்பாகம், 1953:170) இருக்க வேண்டும். அவ்வாறு பொறுத்து நின்றால், எல்லா தீமைகளும் தாமே அழியும். இதனை,

**உற்றதற் கெல்லாம் உரஞ்செய்ய வேண்டுமோ**
**கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக் காப்பமையும்**
**நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும் பகை**
**தற்செய்யத் தானே கெடும் (பழமொழிநானூறு.83)**

என்ற உவமை விளக்குகின்றது. நெற்பயிரிட்டு அதனைப் பாதுகாத்தால் வயலிலுள்ள புல் தானே அழிவது போன்று தன் மனத்தைக் கோபம் வராமல் காத்தால் அனைத்துத் தீமைகளும் தாமே அழிந்து போகும் என்கிறது பழமொழிநானூறு. இச்சான்றுகள் அனைத்தும் கோபம் கொள்ளாமல் கோபத்தைத் தவிர்த்து வாழ வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன.

கோபமுள்ள நிலையில் எதனையும் தெளிவாக ஆராய இயலாது. கோபம் கொண்ட மனம் தன்வயப்பட்டுச் செயல்படும். அவ்வாறு செயல்படும் பொழுது உணர்ச்சியே மேலோங்கி இருக்கும். அவ்வுணர்ச்சி நல்லது தீயது எனப் பார்க்காது. உடனடியாக அது நினைத்ததை வெளிப்படுத்தும்.

அவ்வெளிப்பாடு கடுமையான சொல்லாக அல்லது தாக்கும் செயலாக இருக்கலாம். சொல்லாக இருந்தாலும் செயலாக இருந்தாலும் அது சினக்கப்பட்டவர்க்குத் துன்பத்தைத்தரும். இதில் சினம் கொள்பவர் மனம் அமைதியற்றதாகவும் சினக்கப்பட்டவர் மனம் வருந்தும் தன்மையாகவும் உள்ளது. ஆனால், இருவரின் மனமும் மகிழ்ச்சியற்று விடுகிறது.

சினம் தணிந்த பின் மனத்தில் கவலை தோன்றலாம். ஒருவித பய உணர்வு தோன்றலாம். சினத்தின் விளைவை எண்ணி வருந்தலாம். ஆனால், சினம் கொண்டது கொண்டதாகவே அமைகிறது.

### 2.2.7 சினம் தணியப் பெறாமை

பகைவரது தோல்வியைக் கண்டு சினம் தணியலாம். பகைநாடும் அந்நாட்டு மக்களும் துன்புறும் நிலை கண்டு சினம் தணியலாம். அழிவின் மிகுதி கண்டும் சினம் தணியலாம். ஆனால், பழந்தமிழரசர்கள் இந்நிலை கடந்து, சினம் தணியப் பெறாதவர்களாக, தவிர்க்க இயலாதவர்களாக இருந்தனர். பகைவரை அழித்தும், அந்நாட்டைப் பாழ் செய்தும், அவர்களிடம் கொண்ட கோபம் தணியப் பெறாது மீண்டும் சினந்தெழும் குணம் கொண்டமைந்தனர். சான்றாக, பட்டினப் பாலையின் தலைவன் திருமாவளவன் இத்தகு குணம் கொண்டவனாக இருந்தான். இதனை,

**அருங்கடி வரைப்பின் ஊர்கவின் அழிய**
**பெரும்பாழ் செய்தும் அமையான்** (பட்டி.69-70)

என்று, சினம் தணியப் பெறாத தகைமை மிக்க தலைவனாகக் காண்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். ஆனால், சினங்கெழு குரிசிலான (பதிற்.53:14) ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் சினம் தணிகின்றான். பகைவர் நாடுகளைக் கைப்பற்றியவுடன் அவனுடைய சினம் தணிகின்றது. இதனை,

**. . . . . . . . . . . . . . . . . . . அல்கலும்,**
**நனந்தலை வேந்தர் தார்அழிந்து அலற,**
**நீடுவரை அடுக்கத்து நாடுகைக் கொண்டு**
**பொருது சினம் தணிந்த செருப்புகல் ஆண்மை**
**(பதிற்.55:16-19)**

என்று சினம் தணியப் பெற்ற தன்மையினைக் காக்கை பாடினியார் பாராட்டுகின்றார். இச்சினம் குறைவது நாடழிவதோடு மட்டும் அமைவதில்லை. அந்நாட்டில் திறை பெறும் நிலையிலும் அமைந்துள்ளது.

தோற்றவர் திறை செலுத்தினால் அவர் மீதுள்ள கோபம் ஓரளவு தணியப்பெறும். ஆனால், திறை செலுத்தினாலும் தன் அரசனின் கோபம் தணியப் பெறுமோ என ஐயுறுகிறார் காக்கை பாடினியார். இதனை,

**அறியாது எதிர்ந்து துப்பில் குறையுற்று**
**பணிந்து திறை தருப நின்பகைவர் ஆயின்**
**சினம் செலத் தணியுமோ? (பதிற்.59:11-13)**

என்று சேரனிடம் கேட்கின்றார். பகைவர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வலிமையை அறியாது போரிட்டனர். தோற்ற அப்பகைவர் அவனுக்கு அடங்கித் திறை செலுத்த விரும்பினர். அவ்வாறு அவர்கள் தந்தால் அவன் சினம் முற்றுப் பெறுமோ என புலவர் ஐயுற்றாலும், சினம் முற்றுப் பெற திறை கொடுக்க வேண்டும் என்ற அவரின் கருத்தை அறிய முடிகிறது.

திறை செலுத்திப் பணிந்தாலும், அதனைப் பொருட்படுத்தாமல் மீண்டும் சினம் கொண்டு போர்மேற் செல்லும் அரசனின் ஆக்கத்தை அகநானூற்றுப் பாடலொன்று குறிப்பிடுகிறது.

**தண்ணடை தழீஇய கொடிநுடங்கு ஆர்எயில்**
**அருந்திறை கொடுப்பவும் கொள்ளான், சினம் சிறந்து**
**வினை வயின் பெயர்க்கும் தானை**
**புனைதார் வேந்தன் (அகம்.84:14–17)**

*என்ற பாடலில் மருத நிலம் சூழப்பெற்ற எயிலை அரிய திறையாகக் கொடுக்கவும், அதனை ஏற்றுக்கொள்ளாதவனாய், சினம் மிகுந்து பின்னரும் போர்த் தொழிலில் ஈடுபடுகின்ற அரசனின் செயலை அறிய முடிகிறது.*

*இவ்வரசர்களின் சினம் வலிமை கொண்டதாக, அழிவிலிருந்து தப்ப இயலாததாக இருந்தது. அதனால் அவர்களின் சினத்தின் மிகுதி கண்ட புலவர்கள் இடியையும் எமனையும் உவமையாக்கினர். சான்றாக, செல்வக் கடுங்கோ வாழியாதனின் சினத்தைக் கண்ட கபிலர், அவனின் சினத்திற்கு இடியை உவமிக்கின்றார்.*

**குன்றுநிலை தளர்க்கும் உருமின்சீறி,**
**ஒருமுற்று இருவர் ஓட்டிய ஒள்வாட்**
**செருமிகு தானை வெல் போரோயே (பதிற்.63:10–12)**

*என்ற பாடலின் மூலம் குன்றுகளையும் நிலை குலையச் செய்யும் இடியினைப் போன்று சீற்றம் கொண்டு, இருபெரு அரசர்களையும் தோற்றோடச் செய்தவன் என்று சினத்தின் சீற்றத்தைக் குறிப்பிடுகின்றார்.*

*இடைக்காடனாரோ, கூற்றுவன் சினப்பது போல சினக்கும் தன்மையுடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்கிறார் (புறம்.42:23-24). சினத்தினால் பகையரசை நடுங்கச் செய்யும் ஆற்றலையும் அவர்தம் நாடுகளைக் கைப்பற்றச் செய்யும் துணிவையும் உடையவனாகக் காட்டுகிறார். சினத்தின் சீற்றம் இடியைப் போன்று காலனைப் போன்று அமையும் என அறியமுடிகிறது. ஆனால், சினத்தைத் தணித்து, சீர்படுத்தும் தன்மையை அறிய முடியவில்லை.*

### 2.2.8 சினம் கொண்டார் தம் கேடு

*ஒருவர் செய்யும் தவற்றைக் கண்டிக்க, திருத்த சினம் தேவையாகிறது. ஆனால், அதனையே ஒரு கருவியாகக் கொண்டு, தனக்குத்*

*தேவையானவற்றை நிறைவு செய்து கொள்வதும் மற்றவரை அச்சுறுத்துவதும் அழிக்க எண்ணுவதும் தவறாகும். சினத்தைத் துணையாகக் கொண்டு வாழ்வது அறமற்றதாகும். சினத்தைக் துணையாகக் கொண்டால் அது துன்பத்தை விளைவிக்கும். அத்துன்பத்திலிருந்து ஒரு போதும் தப்புதல் இயலாது. இதனை,*

***சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு***
***நிலத்தறைந்தான் கைபிழையா தற்று (குறள்.307)***

*என்ற குறள்வழி உணரலாம். நிலத்தைக் கையால் அறைந்தால் துன்புறுவது கையன்றி நிலமல்ல. இதை,*

***சினத்தினை ஒரு பொருளெனக் கொளேல்***
***(திருப்பொருள்.1146)***

*என்ற பாடல் வழி அறியமுடிகிறது. சினத்தைப் பொருளென்று கொண்டவன் தானே கேடுறுகின்றான். சினத்தின் கேட்டைப் பாரதியார்,*

***சினங் கொள்வார் தமைத்தாமே தீயாற் சுட்டுச்***
***செத்திடுவா ரொப்பாவார்; சினங்கொள்வார்தாம்***
***மனங் கொண்டு தங்கழுத்தைத் தாமே வெய்ய***
***வாள்கொண்டு கிழித்திடுவார் (பாரதி.கவி.8)***

*என்று எடுத்துரைக்கின்றார்.*

*சினம் பகையாகச் செயல்படுகிறது. இது மனிதனின் முகமலர்ச்சியை, அகமலர்ச்சியை அழிக்கும் பகையாக உள்ளது (குறள்.304). இது, பலரது பகைக்குக் காரணமாகவும் அமைகிறது. ஆராயாதவனது சினம் பகைக்கு வித்திடுகிறது (குறள்.866).*

*சினத்தின் கொடுமையை, சினத்தின் தீமையை, சினம் தீது-இல் அதனின் தீய பிற (குறள்.302), தீய பிறத்தல் அதனான் வரும் (குறள்.303), பகையும் உளவோ பிற (குறள்.304), தன்னையே கொல்லும் (குறள்.305), சேர்ந்தாரைக் கொல்லி (குறள்.306), கொண்டவன்கேடு (குறள்.307), இறந்தார் இறந்தார் (குறள்.310) முதலான குறட்பாக்களின் வாயிலாக அறிய முடிகிறது. தீமையைக் கூறுவதுடன், முடிவையும் பத்தாவது குறள் குறிப்பாக*

உணர்த்துகின்றது (குறள்:310). கோபத்திற்கு இலக்கானவர்கள் உயிர் வாழ்ந்தாலும் இறந்தவரேயாவர் என்று இறந்தவரோடு ஒப்பிட்டு, அவரின் உயிர் முடிவினைத் தெளிவுபடுத்துகிறது.

### 2.2.8.1 உளவியல் மற்றும் உடல்நலக் கோளாறு

உளவியல் அடிப்படையில் பார்த்தால், சினம் வரும் போது உடல் நடுங்குகிறது. நாக் குழறுகிறது. கண்கள் சிவக்கின்றன. இன்னது செய்ய வேண்டும் என்ற தெளிவு இல்லாமல் போகிறது. மனம் அமைதியை இழந்து எழுச்சி மிக்கதாக வேகமாகச் செயல்படுகிறது. இயல்புநிலை மாறி, உடலும் உள்ளமும் தீவிரமானச் செயல்படுதலுக்கு உள்ளாகின்றது. அச்செயல்பாடு உடலுக்குத் துன்பத்தைத் தருகிறது.

சிலவேளைகளில் நோய்க்கு வித்திடுகிறது. சினம் கொள்ளும் பொழுது உடலில் ஏற்படும் மாற்றங்களை வாழ்வியற் களஞ்சியம் பின்வருமாறு எடுத்துரைக்கின்றது. "சினம் மிகவும் செறிவாக இருக்குமானால் உடலுக்கு ஊறு செய்கிறது. சமநிலையைச் சிதைக்கிறது. தானியங்கி நரம்பு மண்டலத்தின் (Autonomous Nervous System) ஒரு பகுதியான ஒத்துணர்வு நரம்பு மண்டலம் (Sympathetic Nervour System) செயலில் ஈடுபடுகின்றது. நாடித்துடிப்பு மிகுதியாகிறது. சுவாசங்கள் வேகமாக செயற்படுகின்றன. குருதியோட்டம் தசைநார்களில் பெருகுகிறது. செரிமானம் தடைபடுகிறது. கண்கள் சிவக்கின்றன. இயல்பான நிலையைவிட உடலில் செயலாற்றல் மிகுகிறது (வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-ஒன்பது, 2004:156). கோபத்தால் இரத்த அழுத்தம் உண்டாகிறது. பொதுவாகவே, கோபப்படுவதால் இதயத்தசைகளுக்கு இரத்தம் கொண்டு செல்லும் நாளம் கடினமாகி, உயிருக்கு அச்சம் தரக் கூடிய ஒரு தாக்குதல், ரணம், மிகுந்த இரத்த அழுத்தம் போன்ற நோய்கள் நம்மைத் தாக்கும் (ஷிவா, 2003:25) என்றும், ஆத்திரம், கோபம், பயம், கவலை முதலிய மன எழுச்சிகளால் இருதயம் அதிகவேலை செய்யும் படியும் இரத்தக் குழாய்கள் குறுகும்படியும் ஏற்பட்டு, அதனால் ஏற்படும் அதிக இரத்த அழுத்தம் பெரும்பாலும் சிறிது நேரத்தில் மாறிவிடுகிறது. அப்படி மாறாமல் வெகுநேரம் இருந்தால் அது ஏதாவது நோய்க்குக் காரணம் ஆகலாம் (ஜே.எஸ்.ஏப்ரஹாம், 2005:50) என்றும் கருத்துரைக்கின்றனர்.

சினம் மிகுதியால் என்னென்ன நோய்கள் உருவாகின்றன என்று வாழ்வியல் விழுமியங்கள் வகைப்படுத்துகின்றன. உடலில் பல தொடர் நோய்கள் உண்டாகின்றன. கண்நோய், நாக்குப் புண், வயிற்றுப்புண், மூலம், மலச்சிக்கல் போன்ற பலவாறான நோய்கள் உருவாகச் சினம் ஏதுவாகின்றது (எஸ்.கே.எம். மயிலானந்தன், 2002:107). மேற்கூறிய இத்தகைய சான்றுகளின் வழி உடலும் உள்ளமும் சினத்தினால் துன்ப நிலை கொள்வதைக் காணமுடிகிறது. உயிருக்கு ஆபத்து ஏற்படுத்திக் கொள்வதை உணரமுடிகிறது.

### 2.2.8.2 சினமற்று வாழ்

சினம் கொள்பவன் தனக்குத்தானே துன்பத்தைத் தேடிக் கொள்கிறான். தன் நோய்க்குத் தானே காரணமாகின்றான். வள்ளுவர் இக்கருத்தமைந்து,

**தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லுஞ் சினம் (குறள்.305)**

என்கிறார். சினம் கொள்ளல் தற்கொலைக்கு ஒப்பாகும் என்றால் மிகையன்று (எஸ்.கே.எம். மயிலானந்தன், 2002:104) என்ற கருத்தும் கவனத்திற்குரியது. எனவே, சினத்தைத் தவிர்த்து அமைதி கொள்ள வேண்டும். இதற்குப் பொறுமையும் நல்லெண்ணமும் உதவி செய்யும். சினம் கொள்ளாமல் இருந்தால் வாழ்க்கையில் அனைத்தையும் பெறலாம். இதனை வள்ளுவர்,

**உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தான்**
**உள்ளான் வெகுளி எனில் (குறள்.309)**

என்கிறார். பாரதியாரும் கோபம் நீங்கி வாழ வேண்டும் என்றுரைக்கிறார். இதை,

**கோபத்தால் நாடியிலே அதிர்ச்சி யுண்டாம்**
**கொடுங்கோபம் பேரதிர்ச்சி சிறியகோபம்**
**ஆபத்தாம் அதிர்ச்சியிலே சிறிய தாகும்**
**கோபத்தை வென்றிடலே பிறவற்றைத்தாள்**
**கொள்வதற்கென வழியென நான் குறித்திட்டேனே**
**(பாரதி.கவி.8)**

என்ற பாடலில் வெளிப்படுத்துகிறார். கோபத்தால் வரும் தீங்கினை எடுத்துக் கூறி, கோபத்தைக் கைவிட்டாலே பிறவற்றை எளிதாக பெற முடியும் என்று மனித வாழ்க்கையின் வெற்றிக்கு வழி கூறுகிறார். பல நலன்களும் பெற வேண்டுமென்றால் கோபத்தைத் தவிர்த்து வாழ வேண்டும். வள்ளுவரும் சினமில்லாதவன் உலகில் அனைவர்க்கும் துணையாவான் (குறள்.526) என்கிறார். எனவே, சினமற்று இருத்தல், சினம் தணிதல் ஆகியவை தன்னையும் பிறரையும் நலமுடன் வாழச் செய்வதாகும். அறத்திற்கு மாறான சினத்தை அறநூல்கள் கடிந்துரைக்கின்றன. சினத்தினால் உண்டாகும் துன்பங்களை எடுத்துரைப்பதோடு, சினம் தவிர்த்தலையும் வேண்டுகின்றன. சினம் ஏற்படாமல் தவிர்க்க வேண்டும். ஆனால், அதனை அடக்குதல் கூடாது. சினம் எழும்போது வெளிப்படுத்தாமல் அடக்கினால் அது உடல்நிலையைப் பாதிக்கும்.

சினம் வெளிப்படும்போது, சினம் கொண்டவர்க்கும் சினக்கப்பட்டவர்க்கும் தீமை செய்யும். ஆனால் அடக்கப்பட்ட சினமோ அது எழுந்த இடத்திலேயே, அடக்குபவருக்கு தீமை செய்துவிடும். சினத்தை அடக்குவதனால் மனம் அமைதி காணாது. மேலும், அடிக்கடி சினம் கொள்கின்ற நிலையை ஏற்படுத்தி விடும்.

சினத்தை வெளிப்படுத்துபவரைப் போன்று சினத்தை அடக்குபவருக்கும் நரம்பு தளர்ச்சி, இதயபலவீனம், இரத்த அழுத்தம் தொடர்புடைய நோய்கள் உண்டாகக்கூடும். எனவே, கோபம் உண்டாகும் பொழுது வெளிப்படுத்தாமல், அக்கோபத்தை வேறுவழியில் மாற்றம் செய்து தவிர்க்க வேண்டும். திருப்பொருளில்,

**வெகுளிக்குப் போக்கு விடு (திருப்பொருள்.1149)**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கோபத்திற்குப் போக்குக் காட்டவேண்டும், மடைமாற்றம் செய்யவேண்டும், சினம் கொண்டாலும் சினத்தை அடக்கினாலும் உடல் நலம் பாதிக்கும் என்பது தெளிவாகிறது.

உணர்ச்சியின் வெளிப்பாடு சினம் என்றால், அச்சினத்தின் வெளிப்பாடு உடம்பின் மூலமாக வெளிப்படுத்தப்படுகிறது. உடல் மாற்றம், உள்ளமாற்றம் என இரண்டின் மாற்றத்திற்கும் சினம் காரணமாக அமைகிறது.

இவ்வகையில், நலமான வாழ்க்கை வாழ வேண்டுமென்றால் சினத்தைத் தவிர்க்க வேண்டுமென்று பலவகைகளில் வற்புறுத்தப்பட்டுள்ளன. இதனால் சினம் என்பது வாழ்வியல் நெறிமுறைக்கு எதிரான ஒன்று என கருத முடிகிறது.

### 2.2.8.3 நீதியுரைகள்

சினம் அல்லது கோபம் தொடர்பான அறிவுரைகள் தமிழ் இலக்கியங்களில் விரிந்துள்ளன. சினம் கொள்ளக் கூடாது. சினம் தணிவது தகும். சினம் உண்டாவதைத் தவிர்க்க வேண்டும். கோபத்தை வளர்த்து கொண்டு துன்பத்தைத் தேடிக் கொள்ள வேண்டாம். கோபம் உள்ளவரின் வீட்டு வழியே செல்ல வேண்டாம். தணியாத கோபம் கலகத்தை, சண்டையை உண்டாக்கும். மிகுந்த சினத்தால் பொறுமையை வெல்ல முடியாது. செல்வம் உள்ளவனிடத்தில் சினமில்லை என்று கூறுவது பொய்யாகும். மதிப்பு இல்லாத இடத்தில் சினம் கொள்வது பயனற்றதாகும். ஒருவன் கடவுளின் சினத்துக்கு ஆளானால் அவனுக்குக் கைக்கூடிய தவம் அழிந்துவிடும். அரசனின் சினத்துக்கு ஆளானால் அவனுக்கு வேறு துணை புரிவார் யாருமில்லை. இக்கருத்துகளெல்லாம் நீதியுரைகளாக அமைந்துள்ளன.

**ஆறுவது சினம் (ஆத்தி சூடி.எண்.2)**

**சினந்தேடி அல்லவையுந் தேட வேண்டாம்**
**சினந்திருந்தார் வாசல்வழிச் சேர வேண்டாம்**
**(உலகநீதி,எண்.3)**

**தீராக் கோபம் போராய் முடியும் (கொன்.வே.எண்.40)**

**. . . . . . . . . . . . . . நீள் பொறையை**
**மெத்திய கோபமது வெல்லாது (நீதி வெண்பா,எண்.53)**

**பெருஞ்சீ ரோன்றன் வெகுளியின்மை பொய்**
**(முது.மொ.கா.எண்.2)**

**உட்கில்வழிச் சின நல்கூர்ந்தன்று (முது.மொ.கா.எண்.9)**

**தெய்வம் சீறின்கைதவ ஆகும் (கொ.வே.எண். 43)**

**வேந்தன் சீறின் ஆம்துணையில்லை (கொ.வே.எண்.88)**

இச்சான்றுகள் அனைத்தும் கோபம் நீங்கி வாழ வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.

திருப்பொருள் என்னும் நூல்,

**உட்சினத்தினைச் சொல் ஆக்கிடேல் (திருப்பொருள்.1143)**

**அடத்திற்கிடம் கொடுப்பது மடம் (மேலது.1147)**

**சினம் பொங்கிடச் செய்வதும் பிழை (மேலது.1148)**

**நியாயமெனினும் சினம் கொளல் தவிர் (மேலது.1153)**

என்று சினம் பற்றிய கருத்துகளை எடுத்துரைக்கின்றன. சினத்தினைச் சொல் உருவில் கக்கிவிடக்கூடாது. சினத்தைப் பொருளாகக் கொண்டு பழிவாங்குதல் கூடாது. பிறர்க்குச் சினம் உண்டாகும்படி செய்வது தவறு. நியாயம் இருந்தாலும் சினம் கொள்வது கூடாது என்று அறிவுறுத்துகின்றது.

இச்சினம் கோபம், ஆத்திரம் என மக்கள் வழங்கும் மரபுத் தொடர்களாக நிலை பெற்றிருக்கின்றன. இம்மரபுத்தொடர்களை, தற்காலத் தமிழ் மரபுத் தொடர் அகராதியும், மரபுத் தொடர் அகராதியும் எடுத்துரைக்கின்றன.

**கோபமில்லாத துரையும், சம்பளமில்லாத சேவகனும்**
**கோபமுள்ள விடத்திற்றான், சந்தோஷ மிருக்கும்**
**கோபம் வந்து கிணற்றில் விழுந்தால், சந்தோஷம்**
**வந்தா வெழுந்திருக்கலாமா?**
**மூக்குக்கு மேல் கோபம்**
**மூக்குநுனியில் கோபம்**
**ஆத்திரக் காரனுக்கு புத்துமட்டு**
**ஆத்திர முடையோன் கோத்திர மறியான்**
**ஆத்திரம் பெரிதானாலும் புத்திமிகப்பெரிது**

இவற்றை அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தி வருதலைக் காணலாம். அளவுக்கு அதிகமாக கோபப்படும் பொழுதும், உடனடியாக கோபப்படும் பொழுதும், கோபத்தின் நிலையை விளக்கும் பொழுதும் கோபம் கொண்டவரை அறிவுறுத்தும் பொழுதும் இவை எடுத்துரைக்கப்படுகின்றன.

## 2.2.9 எரியூட்டல்

தனியொருவனின் வீடு அல்லது மக்கள் வாழ்கின்ற ஒரு சிறு பகுதி கவனக்குறைவால் அல்லது ஏதோ ஒரு காரணத்தால் திடீரென்று தீப்பற்றி எரிகிறது. தீவிபத்தினால் உயிரிழந்த உடல்களைக் காணும் பொழுது, அழிவுற்ற பகுதிகளைப் பார்க்கும் பொழுது மனம் வருந்தி உள்ளம் பதைக்கின்ற உணர்வு ஏற்படுகிறது. சிறு பாதிப்பாக அல்லது சிறு நிகழ்வாக இருந்தாலும் உயிரழிவு மற்றும் உடைமை அழிவு உள்ளத்தைக் கலக்கமுறச் செய்கின்றன.

உயிரிழப்பு, பொருளிழப்பு அங்குள்ளவரின் எண்ணிக்கையைப் பொறுத்து, வசதிகளைப் பொறுத்து மதிப்பு நிர்ணயிக்கப்படுகின்றது. இவ்விபத்தில் பாதிக்கப்படுவோர் உடைமைகளை இழந்து, இருக்க இடமில்லாமல், வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற வகை தெரியாது, தடுமாறும் நிலை ஏற்படுகிறது. இழப்பிற்கு ஈடாக உதவிகள் பல செய்தாலும், தங்கள் இயல்பான வாழ்க்கையைப் பெற அவர்களுக்குச் சில மாதங்கள் ஆகின்றன. இன்றைக்கு கண்முன் காணும் உண்மை நிலை இது. அறியாமை, கவனக்குறைவு, வஞ்சகம், பகை போன்றவற்றால் இந்நிகழ்வு ஏற்படும்போது, அதனால் உண்டாகும் அவலத்தை உணர முடிகிறது.

இந்நிகழ்வு நாட்டில் எங்கேயாவது, எப்பொழுதாவது நடைபெறுகின்ற விபத்தாக அல்லது நிகழ்வாக அமைகிறது. அவ்வாறு இருந்தாலும் அதன் பாதிப்புகள் துன்பம் தரக்கூடியதாக உள்ளது. ஆனால், விபத்தாக இன்றி, தொடர்ந்து நடைபெறும் ஒரு நிகழ்வாக "தீப்பற்றல்" இருந்துள்ளது. போர் மயமான சங்கச் சமூகத்தில் அரசரிடையே வெற்றி-தோல்வி தொடர் போராட்டமாக இருந்தது. இதில் வெற்றியடைந்தவன் தோல்வியுற்றவனை மட்டும் அல்லாமல் அவன் நாட்டையே முழுவதுமாக அழிக்கின்றான். அவ் அழிவில் நாட்டை எரியூட்டுவது முக்கியமாக அமைகிறது.

தன் மக்களுக்கு ஈரநெஞ்சுடைய அரசன், பகை மக்களுக்கு இரக்கமற்றவனாக இருந்துள்ளான். பகைவரது ஊரையும், நகரையும், நாட்டையும் எரித்து, அவர்களை நிர்மூலமாக்குவதில் ஈடுபாடு காட்டியுள்ளான். தீயினால் ஏற்படும் சிறு இழப்புகளைத் தாங்கிக் கொள்ள

முடியவில்லையென்றால், ஒரு நாடே தீப்பற்றி எரியும்போது அதன் பாதிப்புகள் எவ்வாறு இருந்திருக்கும் என்பது சிந்தனைக்குரியது.

### 2.2.9.1 போருக்குரிய செயல்

பகை நாட்டைக் கொளுத்துவது போருக்குரிய செயலாகக் கருதப்பட்டது. தொல்காப்பியம் இதனை எரிபரந்தெடுத்தல் (தொல்.புறத்.63) என்கிறது. இருவகைப்பட்ட படையாளரும் இருவகைப் பகைப் புலத்து பரந்து சென்று எரியை எடுத்துச் சுடுதல் என்பது பொருள் (நச்சினார்க்கினியர், 1934:217). புறப்பொருள் வெண்பாமாலை இதனை, உழபுல வஞ்சியாகக் குறிப்பிடுகிறது. சான்றாக,

> **நேராதார் வளநாட்டைக்**
> **கூரெரி கொளீ இயன்று** (புறப்.வெண்.49)

என்னும் பாடலைக் குறிப்பிடலாம். மிகுந்த நெருப்பைக் கொண்டு பொருந்தாதாருடைய நல்ல நாட்டைக் கொளுத்துவது ஆகும். தானே முன் வந்து பணியாத நல்ல நாட்டைப் பின்னும் கோபித்து, நெருப்பைக் கொளுத்துவது பெருவஞ்சியாகும் என்று குறிக்கிறது. இதனை,

> **முன்னடையார் வளநாட்டைப்**
> **பின்னருடன் நெரிகொளீ இயன்று** (புற.வெண்.57)

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. கோபம் தணியாது பகைநாட்டைக் கொளுத்துவதும், மேலும், கோபம் தணியாது தொடர்ந்து நெருப்பிடுவதும் போருக்குரிய செயலாகும் என்று இவை இயம்புகின்றன.

### 2.2.9.2 எரி நிகழ்த்தியவர்கள்

வாழ வழியற்று, தம் உறவுகளை, உடைமைகளை, உரிமைகளை இழந்து உயிர் அச்சம் கொண்டு உயிர் பிழைத்தால் போதும் என்று வேற்று நாடுகளில் அடைக்கலம் தேடும் அகதிகளாக பழந்தமிழர் வாழ்ந்துள்ளனர். மக்கள் வாழும் இடங்கள், ஊர்கள், தானியங்கள் விளையும் விளை நிலங்கள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. இல்லங்கள் இடம் தெரியாமல் அழிக்கப்பட்டன. மக்கள் தங்கள் நாட்டில் வாழ்வதற்கு வகையற்று பிறநாடுகளில் தஞ்சம் புகுந்தனர். நாட்டைத் தீயிட்டு கொளுத்தி மக்களை அல்லல் படுத்தும்

அரசுகளாக பழந்தமிழ் அரசுகள் இருந்தன. சேர, சோழ, பாண்டியர் என முப்பெரும் அரசர்களும் ஒருங்கு சேர்ந்து பண்டைத் தமிழ் நிலத்தை, அந்நிலத்தில் வாழும் மக்களைப் பாழ்படுத்தி வேதனையுறச் செய்தனர். இவ்வாறு துன்பமடையச் செய்தவர்களைக் கடிந்து கொள்ளாது, அவர்களைப் புகழ்ந்து பாடும் பாவலர்களாகப் புலவர்கள் விளங்கினர். எரிநிகழ்த்திய பேரரசர்களை உயர்த்திப் பாடிய புலவர்களை வரிசைப் படுத்தலாம்.

சோழன் கரிகாற்பெருவளத்தான்-கருங்குழலாதனார் (புறம்.7), சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி-பாண்டரங் கண்ணனார் (புறம்.16), சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்- ஆவூர் மூலங்கிழார் (புறம்.38), இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்- குமட்டூர் கண்ணனார் (பதிற்.2), கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்-பரணர் (பதிற்.5), ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்-காக்கை பாடினியார் நச்செள்ளையார் (பதிற்.6), தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை-அரிசில் கிழார் (பதிற்.8), இளஞ்சேரலிரும் பொறை-பெருங்குன்றூர் கிழார் (பதிற்.9), பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி-காரிக்கிழார் (புறம்.6), பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்-கல்லாடனார் (புறம்.23), மாங்குடி மருதனார் (மதுரைக்காஞ்சி), பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்-காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் (புறம்.57). இவ்வரசர்கள் பகைமக்களின் வாழ்க்கை ஆதாரங்களை எரிநிகழ்த்தி அழித்தவர்களாவர். பிறமக்களின் துன்ப நிலையை ஆராயாது, அரசனின் எரிசெயலை நோக்காது, தன் துன்பநிலையை அரசன் நோக்க வேண்டும் என்று அரசனை எதிர் நோக்கி வாழும் புலவர்கள் இவர்கள் எனலாம்.

### 2.2.9.3 வாடும் மாலையும் மறையும் திசையும்

பகைநாடுகளில் கொளுத்திய நெருப்பு அந்நாடுகளை எரிக்கின்றது. அங்குள்ளவற்றைக் கரியாக்கி ஒன்றில்லாமல் செய்கிறது. நெருப்பின் அழிவு இவ்வாறிருக்க, காரிக்கிழார் அதனுடைய அழிவை வேறுவகையில் காண்கின்றார்.

**வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்**
**நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே (புறம்.6:21-22)**

என்று இப்புலவர், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் மாலை பகைநிலத்தின் நெருப்பின் புகையால் வாடுகின்றது

என்றுரைக்கின்றார். இதில், புகையினால் அரசனின் மாலை வாடுவதைக் குறிக்கும் புலவர், நெருப்பினால் அம்மக்கள் துன்புறுவதையும் குறிப்பிட்டிருக்கலாமோ என எண்ணத் தோன்றுகிறது.

அடுத்து, பகைநாட்டின் அனைத்துத் திசைகளையும் மறைக்கும்படி நெருப்பின் புகைபரவியிருந்ததாக அரிசில்கிழார் குறிப்பிடுகின்றார். இதனை,

**ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்**
**போர் சுடு கமழ்புகை மாதிர மறைப்ப** (பதிற்.71:9–10)

என்ற பாடல் மூலம் பெருஞ்சேரலிரும் பொறையின் வன்மையை எடுத்துக்காட்டுகின்றார். என்றாலும், அவ்வரசனால் பகைவர் நிலம் முழுவதும் தீயினால் ஆட்பட்டிருப்பதை அறிய முடிகிறது. பகைநிலத்தில் எரிகின்ற நெருப்பில் தன் அரசனின் மாலை வாடும் என்பது அவ்வரசர் இட்ட தீயின் வெம்மையைக் காட்டுகிறது. திசைகள் மறையும்படி நெருப்பின் புகை பரந்திருந்தது என்பது பகைவரின் அனைத்து இடங்களையும் நெருப்பிட்டு அழித்ததைக் காட்டுகிறது.

### 2.2.9.4 வெம்மை மாற்றம்

பகைநாட்டைச் சுடுகின்ற நெருப்பின் ஒளி சூரியனின் செந்நிறம் போன்று உள்ளது. பாண்டரங்கண்ணனார் இதனை,

**மனைமரம் விறகு ஆக**
. . . . . . . . . . . . . . . . .
**எல்லுப்பட இட்டசுடுதீ விளக்கம்**
**செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரின் தோன்ற** (புறம்.16:5–8)

என்ற உவமையின் மூலம் குறிப்பிடுகின்றார். இதில் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியின் படைகள் பகைவர் தம் வீடுகளை அழித்தன. அழித்த வீடுகளின் மரங்களை விறகாக வைத்து நெருப்பிட்டன. இவ்வாறு பகைநாட்டில் இப்படைகள் இட்ட நெருப்பின் ஒளி சூரியனின் சுடர்போல காட்சி தருகிறது என்று, நெருப்பின் ஒளியைச் சூரியனின் செந்நிற ஒளியோடு ஒப்பீடு செய்கிறார். இவ்வொப்புமை அழகாக இருந்தாலும், இந்த உவமைக்குள்,

சூரியன் தன் மிகுந்த கதிர்களால் நிலத்தை வெம்மையாக்குதல் போன்று இவ்வரசன் தன் எரி செயலால் பகை நிலத்தை வெம்மையுறச் செய்தான் என்ற கருத்தும் பொதிந்துள்ளது. மேலும், இப்புலவர்,

**கரும்பல்லது காடறியாப்**
**பெருந்தண்பணை பாழாக**
**ஏமநன்னா டொள்ளெரி யூட்டினை**
**நாம நல்லமர் செய்ய** (புறம்.16:15-19)

என்று, மருதநிலம் பாழாகும்படி, பகைவரின் நல்ல நாட்டில் எரியூட்டிய செயலைக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு எரியூட்டி, பகைவர் அஞ்சத்தக்க நல்ல போரைச் செய்தாய் என்றும் வாழ்த்துகின்றார். இவற்றோடு அமையாது, சினம் கொண்டு இச்செயலைச் செய்யும் அரசனை முருகக் கடவுளது சீற்றத்தையொத்த சினத்தையுடையவன் (புறம். 16:12) என்று வருணிக்கின்றார்.

இப்புலவர், பகைநாட்டை எரியூட்டி அழிக்கும் வகையில் அமைந்த நெருப்பின் சுடரை ஞாயிற்றின் சுடரோடு ஒப்பிடுவது, அரசனின் சினத்தைக் கடவுள் தன்மையோடு ஒப்பிடுவது, அவ்வரசன் உண்டாக்கிய தீயின் வெம்மையை, அவன் செய்த கொடுஞ்செயலை மறைப்பதாக உள்ளது. இக்கருத்தமைந்து, க.கைலாசபதி, இவ்வாறு மன்னனைத் தெய்வத்தோடு ஒப்பிட்டும், நல்லநாடு கவாவித்து எரிவதைச் செக்கர்வானக் காட்சியுடன் ஒப்பிட்டும் புலவர்பாடும் பொழுது போரின் வெம்மையும் மாறிவிடுகின்றது (க.கைலாசபதி, 1991:28) என்று குறிப்பிடுவது இங்கு ஏற்புடையதாக உள்ளது.

மேலும், அவர், பலபாடல்களில் காணப்படும் அழிவுச் செய்திகளைக் கண்ணுற்ற தற்கால ஆராய்ச்சியாளர்களின் கூற்றை நிராகரித்து, தம்கூற்றை முன்வைக்கின்றார். போர் நிகழுமிடத்துப் பகைவர் நாட்டு விளைவயல்களைக் கெடுப்பதும், நீர் நிலைகளைச் சிதைத்தழிப்பதும், நெல் கரும்பு முதலியன விளையும் மருத நிலங்களைப் பாழ் செய்வதும் மக்கள் குடியிருக்கும் ஊர்களைத் தீயிட்டு அழிப்பதும், அவர் தம் பொருளைச் சூறையாடுவதும் நிகழ்வது குறித்தே, இப்போர் நிகழ்ச்சி சான்றோரால் வெறுக்கப்படுகின்றது. இதனை இச்சான்றோர் விரித்தோதுவது வேந்தர்கள் உள்ளத்தில் அருள் பிறப்பித்து போரைக் கைவிடுதல் கருதியே யென்றறிதல்

வேண்டும் என்பர் (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பகுதி-I, 2002:46) என்ற இக்கருத்தை மறுத்துரைக்கிறார் கைலாசபதி. இத்தகைய வாதம் சங்கச் சான்றோர் சார்பில் எம்மிடம் மன்னிப்புக் கோரும் வகையில் அமைந்துள்ளது. திருவாளர் துரைசாமிப் பிள்ளை போன்றவர்கள் கூச்சப்படுவதற்கோ, தலை குனிவதற்கோ பாடல்களில் பாரதூரமாக யாதொன்றுமில்லை. அருள் பிறப்பிப்பது அக்காலப்புலவர்கள் நோக்கமாகவும் இருக்கவில்லை. அதற்கு நேர்மாறாகப் போர்க்களத்திற்கே சென்று வீரரையும் மன்னரையும் உற்சாகப்படுத்தினர். போர் விஷயத்திலே அக்காலப் புலவர்கள் எளிதில் வெறுப்படைபவராயிருந்தாரல்லர். அவர்கள் வாழ்ந்த காலம் அத்தகையது. பிற்காலத்திலே தமிழர் சமுதாயத்தில் வேரூன்றிய கொல்லாமைக் கோட்பாட்டை அடிநிலையாகக் கொண்டு வீரயுகப்பாவலர்களையும் மக்களையும் எடை போடுதல் வரலாற்றுணர்வுக்கு முரணான செய்கையாகும் (க.கைலாசபதி, 1991:29). வீரயுக பாவலர்கள் வாழ்ந்த காலம் என்றாலும் அக்காலத்தில் பகைமக்கள் வாழ்ந்த நிலையையும் எண்ணிப் பார்த்தல் அவசியமாகிறது.

### 2.2.9.5 அழிவைத் தொடரச் செய்தல்

பகைவர் நாட்டின் வளத்தைக் கவர்தலும் ஊரைத் தீயிட்டு கொளுத்துதலும் போருக்குரிய செயல்களாக இருந்தன. இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் காரிக் கண்ணனார்,

**நீயே பிறர்நாடு கொள்ளுங்காலை யவர்நாட்**
**டிறங்கு கதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க**
**நனந்தலை பேரூ ரெரியு நக்க (புறம்.57:5–7)**

என்று, பிறர்நாட்டைக் கைப்பற்றும் பொழுது, உன்னுடைய வீரர்கள் அந்நாட்டின் வயல்களைக் கொள்ளை கொள்ளட்டும், ஊர்களைத் தீக்கிரையாக்கட்டும் என்றுரைக்கிறார். ஆனால், பகைவருடைய காவல் மரத்தை மட்டும் வெட்டாமல் பாதுகாக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார் (புறம்.57:10).

இதில், புலவரின் கூற்று சந்து செய்விக்கும் கூற்றாக அமைந்துள்ளது என்பது உரையின் முடிவாக உள்ளது. காவல் மரத்தைக் காக்கவேண்டும் என்ற கூற்றினால், அப்பகையரசனைக் காத்து போரைத்

தவிர்க்க எண்ணுகிறார். ஔவை சு.துரைசாமிப் பிள்ளை தன்னுடைய உரையில் கழனியைக் கவர்தல் முதலிய செயல் தண்ட மாத்திரையே பகைவர் பணிந்து திறை பகரலுவர். அதனை யேற்றுப் போரைத் தவிர்த்து அவரை யருளுதல் வேண்டும் என்பது பட நிற்றலின் சந்து செய்விக்கும் நினைவாற் கூறியலாறாயிற்று (ஔவை,சு.துரைசாமிப்பிள்ளை,பகுதி-I,2002:151) என்று குறிப்பிட்டுள்ளார்.

வயல்களைக் கொள்ளை கொண்டவுடன் ஊரைத் தீக்கிரையாக்கியவுடன் பகைவர் பணிந்து திறை செலுத்தி விடுவர். அதனால் போரை மேற்கொள்ளாது கைவிடுக என்று அரசனுக்கு அறிவுறுத்துவதாக இருந்தாலும், கொள்ளை கொள்ளுதலும் தீக்கிரையாக்குதலும் மாறாத செயல்களாக இருந்துள்ளன. போரினால் அழிவுகள் ஏற்படாவண்ணம் போரைத் தவிர்க்க விரும்பும் இப்புலவரின் கருத்தோட்டத்தை அறிய முடிகிறது. என்றாலும், பொருளைக் கொள்ளையடிக்க தூண்டுவதாக, மாற்றார் நாட்டைத் தீயிட்டு அழிப்பதைத் தொடரச் செய்வதாக உள்ளது.

### 2.2.9.6 சினத்தின் ஆற்றல்

சினத்தின் ஆற்றல் பகை நிலத்தை ஆற்றலிழக்க செய்கிறது. பகை கொண்டவரின் நாடு தீயினால் பாழாகிறது. மக்களுக்குத் தேவையான தானியங்கள், உணவுப் பொருள்கள் கிடைக்காதவாறு அழிக்கப்படுகின்றன. வளம் குன்றுதலை அறியாத பகைவரின் விளை நிலங்கள் தீயினால் எரிந்து சாம்பலாகின்றன. சான்றாக, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வளம் குன்றுதல் இல்லாத மருத நிலங்களைத் தீப்பற்றி எரிய செய்கிறான். இதனை மாங்குடி மருதனார்,

**இழிபறியாப் பெருந்தண் பணை**
**குரூஉக் கொடிய எரிமேய (மதுரை.154–155)**

என்று தீயின் கொழுந்துகள் பரவும்படி அவன் எரியூட்டியதைக் குறிப்பிடுகின்றார். மேலும், அவனின் இச்செயல் வேகத்தைக் காற்றுடன் ஒப்பிடுகின்றார். இதனை,

**கால்என்னக் கடிது உராஅய்**
**நாடுகெட எரிபரப்பி (மதுரை.125–126)**

என்ற வரிகள் மூலம் அறியமுடிகிறது. இதைப் போன்று, கோவூர் கிழாரும், கிள்ளிவளவனின் செலவினைக்,

**. . . . . . . . . . . . . . காற்றோ**
**டெரிநிகழ்ந் தன்ன செலவிற்** (புறம்.41:16–17)

என்று காற்றுடன் ஒப்பிடுகின்றார்.

காற்றின் வேகம் செயல் வேகத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது. இருந்தாலும், இவ்வரசரின் சினத்தின் வேகமும் அதன் ஆற்றலும் வெளிப்படையாகத் தெரிகிறது. எரியும் நெருப்பு காற்றுடன் இணைந்து மிகுந்த தீயைப் பரப்பும். அது காற்றினால் மற்ற இடங்களுக்கு பரவும் தன்மையும் அதிகரிக்கும். அதுபோன்று அரசனின் சினம் காற்றின் செயல் போன்று மிகுந்த அழிவை ஏற்படுத்துகிறது.

### 2.2.9.7 சினத்தீயின் ஆற்றல்

வெற்றி பெற்ற அரசன் தோல்வியுற்ற நாடுகளைச் சினந்து நோக்கினால் அந்நாடுகள் மிகுந்த அவலத்திற்கு உள்ளாகின்றன. சினந்து பார்க்கும் இடமெல்லாம் தீப்பரக்கும் (புறம்.38:5) என்கிறது புறநானூறு. பகைவர் நிலத்தைச் சினந்து நோக்கினால் அந்நிலம் தீயில் எரிந்து கருகும் என்கிறது கலித்தொகை.

**செருமிகு சினவேந்தன் சிவந்து இறுத்த புலம்போல**
**எரிமேய்ந்த கரிவறல் வாய்** (கலி.13:1–2)

என்ற வரிகள், பகைவர் நிலம் தீயின்வாய் அகப்பட்டு கரியினை உடையதாய் வறண்டு விடுவதைக் காட்டுகிறது.

சினத்தின் வேகம் எரியூட்டிக் கொளுத்துகிறது. காற்றின் வேகம் நெருப்பின் புகையைப் பிசிராக உடைக்கிறது. அத்தீ அனைத்து இடங்களையும் வெந்தழிக்கிறது. இச்செயலைச் செய்பவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இதனை,

**கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர**
**அழல்கவர் மருங்கின் உருஅறக் கெடுத்துத்**
**தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்** (பதிற்.15:6–8)

என்று அவனால் ஊரின் அழகு தீயினால் கரிந்து, உருவழிந்து சிதைவதைக் குமட்டூர் கண்ணனார் எடுத்துக்காட்டுகிறார். அவன் இச்செயலை, பகைநிலத்தில் பல நாட்கள் தங்கிச் செய்கின்றான். இதனை,

**யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து**
**முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு (பதிற்.15:1–2)**

என, அழிக்கக் கருதிய நாட்டில், ஓராண்டு தங்கி, தீயிட்டு எரி பரப்பி அழிக்கும் செயலில் ஈடுபட்டதைக் குறிப்பிடுகின்றார். பகைவர் நிலம் அகன்ற நிலப் பரப்புடையதால் அந்நிலம் முழுவதையும் அழிக்க நெடுநாட்கள் ஆகியிருக்கின்றன. எனவே, ஓர் ஆண்டு தங்கி சிறிது சிறிதாக அந்நிலங்களைத் தீக்கிரையாக்கியிருக்கின்றான். பகைநாடு அவனுடைய சினத்திற்கு அகப்பட்டு, நெடுநாட்கள் இன்னலுக்கு ஆட்பட்டிருந்ததை அவனின் செயல் மூலம் உணர முடிகிறது.

வீட்டில் சமையல் செய்வதற்காக மூட்டிய தீ அவியுமாறு ஊருக்கே எரியூட்டுகின்றான் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். எரிபரந்தெடுத்த இடங்களைக் கண்டு அமைதியுறாது, இன்னும் பல கொடுமைகளைச் செய்யும் துணிவுடையவனாக இருக்கின்றான். அவனுடைய இத்தகு செயலைக் கல்லாடனார்,

**வினைபுனை நல்லில் வெவ்வெரி யினைப்பக்**
**கனையெரி யுரறிய மருங்கு நோக்கி**
**நண்ணார் நாண நாள்தொறும் தலைச்சென்**
**றின்னு மின்னபல செய்குபவன் யாவரும்**
**துன்னல் போகிய துணிவி னோன் (புறம்.23:10–14)**

என்று எடுத்துரைக்கிறார். ஆனால், யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையனின் மக்களோ, உணவு சமைக்கும் தீயின் வெம்மை, செஞ்ஞாயிற்றின் வெம்மை இவற்றைத் தவிர பிற வெம்மையை அறியாதவர்களாக (புறம்.20:7-9) இருந்தனர். அடுதீ அல்லது சுடுதீ (புறம்.70:8) தெரியாதவர்களாகச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் மக்கள் வாழ்ந்தனர். ஆனால், பாண்டியன் நெடுஞ்செழியனின் பகைமக்கள் வெம்மையால் வருந்தினர். அவ்வரசனின் சினத்தால் சிதைவுற்றனர்.

வீட்டில் உணவு சமைக்க அடுப்பில் தீ எரிகிறது. போர்க்களத்திலோ ஊனாகிய சோற்றைச் சமைக்க சினத்தீ எரிகிறது. அவ்வாறு சமைக்கும்போது, ஆண்மக்களின் தலை அடுப்பாகிறது. அரசர்களின் குருதி உலையாகிறது. சினமாகிய தீ எரியாகிறது. அவ்வாறு எரியும் பொழுது உலை எழுந்து பொங்குகிறது. இதனை மதுரைக்காஞ்சி,

**அஞ்சு வந்த போர்க்களத்தான்**
**ஆண்தலை அணங்கு அடுப்பின்**
**வய வேந்தர் ஒண் குருதி**
**சினத் தீயின் பெயர்பு பொங்க** **(மதுரை.28–31)**

என்று, சினத்தீயினால் அடுப்பில் குருதியாகிய உலை பொங்குவதைக் குறிப்பிடுகிறது. இங்கு சினத்தின் ஆற்றல் தீயின் ஆற்றலாக உள்ளது. சினம் தீ யொத்தலால் தீப்பற்றிய சொற்களெல்லாம் சினத்தையுங் குறிக்கும் (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, மூன்றாம்பாகம், 2005:214) என்ற கருத்து இங்கு கருதத்தக்கது. மதுரைக்காஞ்சி, சினத்துடன் பகைவரிடையே செல்லும் படையின் நிலையைத் தீயின் நிலையோடு ஒப்பிடுகின்றது. இதை,

**எரி நிமிர்ந் தன்ன தானை** **(மதுரை.735)**

என்று நெருப்பு நடந்தாற் போன்று, பாண்டியன் நெடுஞ்செழியனின் படை பகைவர் படைக்கு நடுவில் சென்றதைக் குறிப்பிடுகின்றது. தீயின் இயல்பு தீப்பற்றிய இடத்தை அழிப்பது. அவன் படையின் இயல்பு பகைநிலத்தை அழிப்பது. எனவே, படையின் செலவு தீயின் செலவோடு ஒப்பிடப்பட்டுள்ளது. போரில் பகைவர் நாட்டைத் தீக்கிரையாக்குதல் போர் வீரர்களின் உரிமையாகக் கருதப்பட்டது. அவ்வுரிமைக்குத் தடையிருந்ததாகத் தெரியவில்லை. புலவர்கள் பெரிதும் இச்செயலைக் கடிந்து பாடியதாகச் சங்க இலக்கியத்தில் குறிப்புகள் இல்லையெனலாம். அரசனுக்கு வீரவுணர்ச்சியை ஊட்டித் தமிழ் வேந்தர்களுக்கிடையே போரினை வளர்த்த புலவர்களே மிகுதி. போரினைத் தவிர்த்த சங்ககாலப் புலவர்கள் சிலரே எனலாம் (நாஞ்சில் ஆனந்தன், 1999:11) என்ற கருத்து இங்கு பொருத்தி காண்பதாக அமைகிறது. அரசனின் ஆற்றல் நெருப்பின் ஆற்றலாக வெளிப்படுகிறது. இவ்வாற்றல் பகைமக்களுக்கு ஏராளமான பாதிப்புகளை உண்டாக்கியிருக்கும் என்பதை அறிய முடிகிறது.

### 2.2.9.8 பெண்ணிற்காக தீ மூட்டல்

அரசன் விரும்பும் பெண்ணை மணமுடிக்க அவள் பெற்றோர் உடன்படவில்லையென்றால், அந்நாட்டைச் சினப்பதும் போருக்குரிய செயலாக இருந்தது. அங்கும் விளை நிலங்கள் பாழாக்கப்பட்டன. ஊர்கள் தீக்கிரையாக்கப் பட்டன.

பெண்ணை இரண்டு வகையில் பெற்றனர். வளமிக்க ஊர்களை, மதிப்பில்லா பரிசுப்பொருள்களைக் கொடுத்துப் பெண்ணைப் பெற்றனர். அல்லது பெண்ணின் தந்தையைப் பகைத்துக் கொண்டு ஊர் முழுவதும் நெருப்புப் பற்றி எரியச் செய்து போரிட்டுப் பெற்றனர். இந்த இரண்டில் ஒன்றைத் தவிர இவளைப் இப்பெண்ணைப் பெற வேறு வழியில்லை என்று ஓர் அரசன் நினைக்கின்றான். இதனை,

**செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை**
**செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து**
**துறைநணி மருதத் திறுக்கு மூரோடு**
**நிறைசால் விழுப்பொரு ட்ருத லொன்றோ**
**புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து**
**பண்பி லாண்மை தருத லொன்றோ**
**இரண்டினு ளொன்றா காமையோ வரிதே (புறம்.344:1–7)**

என்று அரசனின் எண்ணத்தை அண்டர் நடுங்கல்லினார் எடுத்துரைக்கின்றார். இதில் பண்பில் ஆண்மை என்ற வரிக்கு ஔவை துரைசாமிப் பிள்ளை, பண்பில் ஆண்மையாவது, மக்கட் பண்பாகிய அருளும் அறமும் இன்றிக் கொலை விலங்குபோல உயிர்கட்குத் தீமை தருவது. இஃது இழித்தக்கதாயினும் மேற்கொண்டு செய்யப்படுமென்பார், "பண்பிலாண்மை தருதல் ஒன்றோ என்றார்; ஒருமகளைக் கொள்வோன், அவளுடைய தந்தை தன்னையரைக் கொன்று, அவள் பிறந்த ஊரையும் மனையையும் தீக்கிரையாக்கிக் கோடல் பெரியதொரு பண்பில் செயலாதலின், அதனைத் தனக்கு ஆண்மையாக மேற்கொண்டு செய்தல் பண்பிலாண்மையாதல் காண்க (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பகுதி-II, 2002:289) என்று விளக்கம் தருகின்றார். பெண்ணிற்காக பெற்றோரை அழிப்பது, அவள் பிறந்த ஊரை, வீட்டை

அழிப்பது தவறு. இது பண்பில்லாத செயல். ஆனாலும் இச்செயல் தொடர்ந்து மேற்கொள்ளப்படும். இதனை, அரசன் தனக்கு வீரமாக கொண்டு நடத்தல் பண்பில்லாததாகும்.

பெண்ணாசையால் உயிரழிவு, ஊரழிவு, பொருளழிவு கூடாது என்று எண்ணுபவர்கள், மண்ணாசையால் பொருளாசையால் பகை கொண்டு பகை நிலம் தீயில் வெந்து அழிப்பதை எந்தப் பண்பில் வைத்து எண்ணுவார்கள் என்ற ஐயம் தோன்றுகிறது. பெண்ணாக இருந்தாலும் மண்ணாக இருந்தாலும் ஊரழிவு என்பது மக்கள் அழிவு. எந்த ஒன்றும் கிடைக்கப் பெறாத போது சினம் வருகிறது. அச்சினம் அப்பொருள் மீது அப்பொருள் உடையார் மீது கோபமாகப் பாய்கிறது. அப்பொருள் இருந்த இடத்தை, பொருளுக்குரியவரை அழிக்கின்றது. அவ்வழிவு உயிரழிவாக பொருளழிவாக அமைகிறது.

## 2.3 நாடழிவு

நாடழிவு என்பது போரின் முக்கிய அழிவாகும். தோல்வியுற்ற அரசனின் இறுதி அழிவாக உள்ளது. தோல்வியுற்ற அரசன் மீண்டும் போருக்கு எழாத வகையில் அமைவது. தொடர்ந்து ஆட்சி நடத்த முடியாத வகையில் மக்கள் வாழ இயலாத வகையில் ஆளும் அரசை வெறுத்து அல்லது புறக்கணிக்கும் வகையில் இருந்தது.

நாடழிவில் பகைவரின் பாதுகாவலான அரண்கள், உயிருக்கு பாதுகாவலான உணவு, நீர், மக்கள் வாழ்விடமான இல்லங்கள் பாழாக்கப்பட்டன. மக்களிடையே உணவு பற்றாக்குறை ஏற்படுத்தப்பட்டது. மக்கள் பசியால் நலிவுற்றனர். உயிர் அச்சம், பசிவருத்தம், பாதுகாப்பு இன்மை என வாழ்க்கைப் போராட்டத்திற்கு அவர்கள் ஆளாக்கப்பட்டனர். வாழ்க்கை ஆதாரங்களை இழந்து தங்கள் நாட்டிலிருந்து வேறு நாட்டிற்குப் புலம்பெயரும்படி அழிவுகள் நடந்தன.

நாடழிவின் முக்கிய நோக்கம் பகைவருடைய வளங்களை அழித்தலாகும். இயற்கை வளங்களான நிலவளமும் நீர்வளமும் அழிக்கப்பட்டன. உணவிற்கு நிலம் ஆதாரம். நிலத்திற்கு நீர் ஆதாரம். மக்களின் வாழ்க்கை ஆதாரமான இவை அடியோடு சிதைக்கப்பட்டன. உணவு

தானியங்கள் விளையும் மருதநிலங்கள் காடாக மாற்றம் பெற்றன.அரண்கள் அம்பலங்கள் அழிந்து வெற்றிடங்களாகக் காட்சியளித்தன. நீர்நிலைகள் பயன்படுத்த முடியாத வகையில் பாழாயின. இவ்வாறு பகைநிலங்கள் ஒன்றுக்கும் பயன்படாத வகையில் முற்றிலும் சீரழிக்கப்பட்டன.

### 2.3.1 வளங்கள் பாழாதல்

நாட்டின் வளம் நிலவளத்தைப் பொறுத்து அமையும். நிலத்தின் வளத்தைக் குறைத்தால் நாட்டின் வளமும் குறையும். நாடு வளமற்றதாக இருக்க, நிலங்களின் வளங்கள் அழிக்கப்பட்டன. வளம் நிறைந்த பகைவர் நாடுகள் படையெடுப்பிற்கு பின் வளமற்றதாக ஆக்கப்பட்டன. இங்கு பகைவர் நாடு என்பது சேரன், பாண்டியன், சோழன் என இவர்களை உள்ளடக்கியதாகும். இவ்வரசர்களின் அழிவுச் செயலால் நாடாக இருந்த நிலம் காடாக மாறுவதைப் பதிற்றுப்பத்தும், மதுரைக் காஞ்சியும், பட்டினப்பாலையும் விளக்கிக் காட்டியுள்ளன.

பதிற்றுப்பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், தகடூர் எறிந்தபெருஞ்சேரலிரும்பொறை முதலான சேர அரசர்கள் இவ்வழிவுச் செயலை நடத்தியுள்ளனர்.

### 2.3.2 இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படையெடுப்பிற்கு முன் பகைநாட்டு வயல்கள் செழித்திருந்தன. வயல்களில் ஆட்டுக்கிடைகள் கட்டப்பட்டிருந்தன. நீர் நிலைகளில் ஆரல் மீன்கள் துள்ளித்திரிந்தன. ஏறுகள் தம்முள் பொருதமையால் உழாமலேயே வயல்கள் சேறாயின. கரும்புப் பாத்திகளில் நெய்தற் பூக்கள் ஓங்கி வளர்ந்தன. வளம் கண்டு மகிழ்ந்து மகளிர் துணங்கை ஆடினர். தென்னை மரங்களும் மருத மரங்களும் நிறைந்து பொய்கைகள் சூழ்ந்திருந்தன. இத்தகைய பயன்மிக்க ஊர்கள் பலவற்றைக் கொண்டதாக பகைவர் நாடுகள் இருந்தன. ஆனால், படையெடுப்பிற்குப் பின் இந்நாடுகள் காண்பவர் அஞ்சத்தக்க நிலையை எய்தின. இதனை,

**நாடுகவி னழிய நாமந் தோற்றிக்**
**கூற்றடூஉ நின்ற யாக்கை போல**
**நீ சிவந் திறுத்த நீரழி பாக்கம்**
**விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்**
**திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்**
**கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க**
**ஊரிய நெருஞ்சி நீறாடு பறந்தலை (பதிற்.13:10–16)**

*என்னும் பாடலின் வழி அறிய முடிகிறது. கூற்றுவனால் கொல்லப்பட்டு உயிர்நீங்கிக் கிடக்கும் உடல்களைப் போன்று பகைவர் நிலங்கள் பொலிவிழந்து காணப்பட்டன. வயல்கள் பாழ்பட்டன. அவ்வயல்களில் விடத்தேரை, கரிய உடை முதலான முள் மரங்களும் நெருஞ்சி முட்செடிகளும் வளர்ந்தன. இவ்வாறு வளமிழந்த பகுதிகள் பேய்மகள் கழுது என்னும் பேயின் மீது ஏறித் திரியும் இடங்களாக மாறின.*

### 2.3.2.1 நேரில் காணலும் கைகொட்டி பிசைதலும்

*பகைவரின் பாழான இல்லங்களில் வேளைச்செடியோடு சுரைக்கொடியும் பீர்க்கங்கொடியும் வளர்ந்தன. செங்காந்தட்செடிகள் நீரற்று அடிச்சிதைந்திருந்தன. மேலும், வில்லாகிய ஏரால் வழியில் செல்வோரைத் தாக்கும் இழிந்தோர் திரியப் பெற்ற புல்லிய இலைகளால் வேயப்பட்ட குடிசைகளையுடைய ஊர்கள் நெடுஞ்சேரலாதனால் அழிவுற்றன. நாட்டின் பல இடங்களைச் சிதைத்தமையால் 'புலஞ்சிதை' நாடாக ஆயின. இவ்வாறு அழிவுற்ற பகைவர்நாட்டை,*

**வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்து,**
**பீர்இவர்பு பரந்த நீர்அறு நிறைமுதல்,**
**சிவந்த காந்தள் முதல்சிதை, மூதில்,**
**புலவுவில் உழவின் புல்லாள் வழங்கும்**
**புல்இலை வைப்பின் புலம்சிதை அரம்பின்,**
**அறியாமையான் மறந்து துப்பு எதிர்ந்த நின்**
**பகைவர் நாடும் கண்டு வந்திசினே (பதிற்.15:9–15)**

*என்று தானே நேரில் கண்டு வந்ததாக குமட்டூர் கண்ணனார் எடுத்துரைத்துள்ளார். அவர் பகைநாட்டின் அழிவை,*

***இனந்தோ டகல ஊருடன் எழுந்து***
***நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ***
***வாழ்த லீயா வளனறு பைதிரம்***
***அன்ன வாயின*** (பதிற்.19:16–19)

என்று எடுத்துக்காட்டியுள்ளார். சேரலாதனின் போர் வினைக்கு அஞ்சிப் பகைவரது குடிமக்கள் தம் இனத்தை மற்றும் பசு முதலிய தொகுதிகளைக் கைவிட்டு ஒருங்கு எழுந்து தம் நாட்டை விட்டு அகன்றனர். நாட்டில் மக்கள் இல்லாததால் உழுவாரின்றி கலப்பைகள் கடியப்பட்டிருந்தன. இனத்தோடு பெயரும் மக்களைக் குடியேறுக என்று வாழ்வு தராததினால் பகைவர் நாடுகள் வளப்பமின்றி அவனால் அழிந்தன.

ஊரும் வயலுமாய் இருந்த பகைவர் நிலங்கள் நெடுஞ்சேரலாதன் உண்டாக்கிய அழிவிற்கு பின் காண்பவர் கைகொட்டிப் பிசைந்து வருந்தும்படி கெட்டழிந்தன. இதனை,

. . . . . . . . . . . . . . . ***பழனந்தோறும்***
***அழன்மலி தாமரை யாம்பலொடு மலர்ந்து***
***நெல்லின் செருவில் நெய்தல் பூப்ப,***
***அரிநர் கொய்வாள் மடங்க, அறைஞர்***
***தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த***
***இன்றோ வன்றோ தொன்றோர் காலை***
***நல்லம னளிய தாமெனச் சொல்லிக்***
***காணுநர் கைபுடைத் திரங்க***
***மாணமாட்சிய மாண்டன பலவே*** (பதிற்.19: 19–27)

என்கிறார். முன்பொரு காலத்தில் உன் பகைவர் நாடுகள் நல்ல நிலையில் இருந்தன. ஆனால் இன்று அனைத்தும் அழிந்து விட்டனவே. இந்நிலை இரங்கத்தக்கது எனச் சொல்லி, காண்பவர்கள் தம் கையோடு கையறைந்து வருந்தும் அளவிற்குப் பாழாகி உள்ளனவே என்று, நெடுஞ்சேரலாதன் ஏற்படுத்திய பேரழிவைக் குமட்டூர் கண்ணனார் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

### 2.3.3 பல்யானைச் செல்கெழு குட்டுவன்

நாளும் புதுவருவாயை உடைய பகைவர் நாடுகள் பல்யானைச் செல்கெழு குட்டுவனது படையெடுப்பிற்குப் பின் மக்கள் வாழ முடியாத

இடங்களாக மாறின. படையெடுப்பிற்கு முன் வளம் நிறைந்த பகை நாடுகள் அவனது சீற்றத்திற்கு உள்ளாகி தம் வளத்தை இழந்தன. நீர்வளம் மிக்க அந்நாடுகளில் பெருகி வரும் புதுப்புனலைத் தடுத்து நிறுத்துவோர் செய்யும் ஆரவாரமும், நீர் விளையாடுவோர் செய்யும் ஆரவாரமும், பல்வேறு விழாக்களிலே திரண்ட மக்கள் செய்யும் ஆரவாரமும் மிகுந்திருந்தன. வற்றாத வளங்கொழிக்கும் அத்தகைய நாடுகள் குட்டுவனின் சினத்திற்கு உள்ளாகி பேரழிவைக் கண்டன. இதனைப் பாலைக் கௌதமனார்,

**நாடுகெழு தண்பணை சீறினை ஆதலின்**
**குடதிசை மாய்ந்து குணமுதல் தோன்றி**
**பாய்இருள் அகற்றும் பயம்கெழு பண்பின்**
**ஞாயிறு கோடா நன்பகல் அமயத்து**
**கவலை வெண்நரி கூஉம் முறை பயிற்றி**
**கழல் கண் கூகைக் குழற குரற் பாணிக்**
**கருங்கட் பேய்மகள் வழங்கும்**
**பெரும்பாழ் ஆகும்மன் அளியதாமே (பதிற். 22:31–38)**

என்கிறார். நீர் வளமும் செல்வமிகுதியும் உள்ள அந்நாட்டில் குறுநரிகள் ஊளையிட்டன.கோட்டான்கள் கூவின. அவற்றின் குரலொலிக்கு ஏற்ப பேய்கள் ஆடின. இரவில் நிகழும் இந்நிகழ்ச்சிகள் பகலில் நிகழும்படி பகைவர் நிலங்கள் மக்கள் இல்லாததாகப் பெரும் பாழாக்கப்பட்டன. மக்கள் இல்லாது இவ்வாறு பாழாகின்ற நிலை இரங்கத்தக்கது என உள்ளம் வருந்துகின்றார். நிலம் போவோர் வருவோர் அற்றதால் புல் மிகுந்து மக்கள் போக்குவரவற்ற நிலைக்குள்ளாயின. நெடுநிலை மாடங்கள் நிறைந்த ஊர்கள் காட்டுப்பசுக்கள் தம் ஏறுகளுடன் தங்கும் காடுகளாகின. அரண்கள் மக்கள் இல்லாது காவல் இன்றி அழிந்தன. ஆண்டலைப் பறவைகள் இருக்கும் பாலைநிலங்களாக பகைவர் நிலங்கள் உருவழிந்தன.

### 2.3.3.1 விளைநிலங்கள் வீணாதல்

குட்டுவனின் படைகளின் செலவால் பகைவரின் விளைநிலங்கள் வீணாகின. குதிரைகள், யானைகள் பகைவர் நிலங்களில் பரந்து சென்று வயல்களின் வளங்களை அழித்தன. பகைவர் நாட்டின் செழுமை குட்டுவனின் சினத்தால் சிதைவுறுவது கண்டு மிகவும் வேதனைப்படுகின்றார். முன்பு இந்நாட்டின் வளத்தைக் கண்டறிந்தவர்கள், இப்போது காணின் பழைய நிலையை நினைத்து வருந்துவர். நானும் அவ்வாறு வருந்துகிறேன் என்பதை,

**தேஎர் பரந்த புலமேஎர் பரவா**
**களிறாடியபுல நாஞ்சி லாடா**
**மத்து ரறிய மனை இன்னிய மிமிழா**
**ஆங்குப் பண்டுநற் கறியநர் செழுவள நினைப்பின்**
**நோகோ யானே – நோ தக வருமே (பதிற்:26:1–5)**

என்ற பாடல் மூலம் வெளிப்படுத்துகிறார். இதில் முன்பு பகைவர் நாட்டில் இருந்த செழுமையை நினைத்துப் பார்க்கின்றார். இத்தகு செழிப்புடைய பகைவர் நிலம் அழிவிற்குப் பிறகு, மக்கள் வாழ இயலாத காடாக மாறுகின்றது.

### 2.3.3.2 ஊர் காடாதல்

ஊரழிவிற்குப் பின் மனைகளில் மக்கள் வாழ முடியாமல் போயினர். மனைகளில் மக்கள் இல்லாததால் பீர்க்கங் கொடிகள் படரும் பாழ் மனைகளாகின. பெரும்பாலான வழிகள் நெருஞ்சிமுள் கொண்டுள்ள அடர்ந்த காட்டு வழிகளாகின. குட்டுவனின் சினத்தோடு, வீரர்களின் சினமும் இணைந்து, எவரும் செல்ல இயலாத வகையில் பகைவர் நிலங்களைப் பாழ்படுத்தின (பதி.26:10-14). இவ்வாறு பகைவரையும் பகைவர் நிலங்களையும் அழிக்கும் வண்ணம் மிகுந்த சினம் கொண்ட இவ்வரசனின் சினத்தின் வலிமையை,

**சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின் (பதிற்.27:1)**

என்ற ஒரேவரியில் தெரிந்து கொள்ள முடிகிறது. அவனால் சினந்த நாடுகள் காடுகளாக மாறி அழியும். மக்கள் வாழத் தகுதியற்ற இடமாக சிதைக்கப்படும் என்று அவனின் ஆற்றலைப் பாலைக் கௌதமனார் காட்சிப்படுத்துகின்றார். பாலைக் கௌதமனார் காட்டும் அழிவின் காட்சி பின்வருமாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. மூன்றாம் பத்திலுள்ள பெரும்பாலான பாடல்கள் அவன் போர் வெற்றியையும் ஆற்றொணாச் சினத்தால் பகைவர் நாட்டிற்கு அவன் விளைத்த இழிவினையுமே படம்பிடித்துக் காட்டுகின்றன . . . சேரவேந்தனின் சினம் கெழுமிய சிவந்த கண்களில் படாதவரையில் அந்நாடுகள் சோலைவனமாயிருந்த காட்சியும் அவன் கோபப்பார்வை பட்டதும் அவை பாலைவனங்களாய் மாறிய பரிதாபக் காட்சியும் கௌதமனார் பாடல்களில் படம் படமாய் விளங்குகின்றன (ந. சஞ்சீவி, 1955:64). இவ்வாறு

குட்டுவனின் சீற்றத்தால் விளையும் சிறுமையும் அழிவால் உண்டாகும் அவலமும் இம்மூன்றாம் பத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து, இவர்களைப் போன்று கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனும் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையும் பகைவர்களின் வளங்களை அழித்தனர். அவற்றின் பழமையான அழகினைச் சிதைத்தனர்.சேரர்களின் இவ்விழிசெயல் பதிற்றுப்பத்தின் மூன்றாம் பதிப்பின் முகவுரையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பகைவர் நாடுகளின் பழைய நிலையையும் பாழ்பட்ட பின்னர் அவை இருந்த நிலையையும் விரிவாக எடுத்துரைக்கும் செய்யுட்கள் பல இந்நூலில் உள்ளன.(அன்பும், அருளும், கல்வியும், மெய்ஞ்ஞானமும், நல்லொழுக்கமும் ஒருங்கே அமைந்து குடிமக்களால் தெய்வமாக எண்ணப்படும் ஓரரசன் பகைவரைப் பொரும் விஷயத்தில் காலனையே போன்று கடுஞ்சினத்தோடு சென்று போரிட்டு அவர் வாழ்வையும் நாட்டையும் நாட்டு மக்களையும் சிதைத்துக் குலைத்து வெற்றி பெற்று அந்த வெற்றிக் களிப்பினால் தான் பெற்ற பொருளையெல்லாம் யாவருக்கும் வாரி வீசி மகிழ்கிறான். அரசியலில் குடிமக்களைப் பாதுகாக்கும் திறத்தில் அவன் செய்யும் செயல்கள் சிந்தைக்கு இனிக்கின்றன. பகைவரைத் துன்புறுத்தும் திறத்தில் அவன் செய்யும் செயல்கள் உள்ளத்தை நடுங்கச் செய்கின்றன. போரினால் உண்டாகும் அழிவை அவ்வரசன் எண்ணி இரங்குவதில்லை. புலவர்கள் மாத்திரம் அதனைக் கூறி இரங்குகின்றனர். அவர்களுடைய இரக்கம் பின்னும் அரசனது பெருமிதத்தை வளர்க்க உதவுகின்றதேயன்றிக் குறைக்கப் பயன்படுவதில்லை (உ.வே. சாமிநாதையர், 1957:IX).

சேரர்கள் பகைவர் நிலையில் இரக்கமற்று செயல்படும் தன்மையை, அவர்கள் பகைவரை அழிக்கும் அவலத்தை விளக்கியுள்ளார். இந்நான்கு அரசர்களும் பகைவரை அழித்தலில் பெரும் முனைப்பு காட்டியுள்ளதை உணரமுடிகிறது. ஒன்றுக்கும் உதவாது, எந்தப் பயனும் அடையமுடியாது என்ற நிலைக்குப் பகைவர் நிலங்களை அழித்து அதன் மூலம் பகை மக்களை வருத்துவது இவ்வரசர்களின் நோக்கமாக இருந்துள்ளது.

### 2.3.4 பாண்டியன் நெடுஞ்செழியனின் பகைப்புல அழிவுகள்

சேரனைப் போன்று பாண்டியனும் பகைவர் நாடுகளை மிகுந்த துன்பத்திற்கு உள்ளாக்கியுள்ளான். காவலையுடைய பொழில்களை அழித்து

மருத நிலங்களை நெருப்புண்ணச் செய்தான். அவனது அழிவுச் செயல் நாடெனும் பெயரைக் காடாகச் செய்தது. இதனை,

**உறுசெறுநர் புலம் புக்கவர்**
**கடிகாவி னிலை தொலைச்சி**
**இழிபறியாப் பெருந்தண் பணை**
**குரூஉக் கொடிய எரிமேய**
**நாடெனும் பேர் காடாக**
**ஆசேந்த வழி மாசேப்ப**
**ஊர் இருந்தவழி பாழ்ஆக**
**இலங்குவளை மடமங்கையர்**
**துணங்கையஞ் சீர்த் தழூஉமறப்ப**
**அவையிருந்த பெரும் பொதியிற்**
**கவையடிக் கடுநோக்கத்துப்**
**பேய்மகளிர் பெயர்பாட**
**அணங்கு வழங்கு மகலாங்கண்**
**நிலத்தாற்றுங் குழூஉப்புதவின்**
**அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவக்**
**கொழும்பதிய குடிதேம்பிச்**
**செழுங்கேளிர் நிழல்சேர**
**நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்**
**குடுமிக் கூகை குரலொடு முரலக்**
**கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்**
**களிறுமாய் செருந்தியொடு கண்பமன்றூர்தர**
**நல்லேர் நடந்த நகைசால் விளைவயல்**
**பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள**
**வாழாமையின் வழிதவக் கெட்டுப்**
**பாழா யினநின் பகைவர் தேஎம்** **(மதுரைக்காஞ்சி:152-176)**

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிட்டுள்ளது.

பசுக்கூட்டங்கள் தங்கின இடங்களில் புலி முதலியன தங்கின. ஊராய் இருந்த இடங்கள் எல்லாம் பாழாய்க் கிடந்தன. மகளிர் துணங்கைக் கூத்தினையும் குரவைக் கூத்தினையும் மறந்தனர். சான்றோர் இருந்த பெரிய அம்பலங்களில் பேய் மகளிர் உலாவி நின்றனர். தெய்வங்கள் உலாவும் ஊரிடத்தே, அரந்தைப் பெண்டிர் பாழ்மனையின் கதவருகே இருந்து அழுதனர். அரந்தை-மனக்கவலை. இது கணவன் முதலியோரை இழந்தமையானும்

பொருளிழந்தமையானும் உண்டாயது (பொ.வே. சோமசுந்தரனார்,1971:64). ஆடவர் இறத்தலோடு, அவர்களின் இல்லங்கள் பாழ்படுதலும் அங்குள்ள பொருள்கள் கொள்ளை போதலும் நடந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. குடிமக்கள், உணவுப் பொருளின்றி பசியால் வருந்திப் புறநாட்டிலுள்ள தம் உறவினர் பால் சென்று சேர்ந்தனர்.

நாடு முற்றிலும் பாழ்பட்டமையால் பெரிய மாளிகைகளிலே நெருப்பால் வெந்த குதிரிடத்தே கூகை குழறின. பொய்கையிலே கோரை முதலியன வளர்ந்தன. விளைவயல்களிலே பன்றிகள் ஓடித் திரிந்தன. இவ்வாறு பகைவரின் இருப்பிடங்களை, உணவுத் தானியங்களை அழித்து, மக்களைப் பசியால் வருத்தி, வேற்றுநாடு நோக்கி ஓடச் செய்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்.

### 2.3.5 திருமாவளவன்

சங்க இலக்கியத்தில் பகைப் புலத்தைப் பாழாக்கிய செய்தி மிக நீண்ட அடிகளில் பட்டினப் பாலையில் கூறப்பட்டுள்ளது. 301 அடிகளைக் கொண்ட இந்நூலில், 32 அடிகள் திருமாவளவன் பகைவர் நாடுகளைப் பாழ் செய்துள்ளதை விரிவாக எடுத்துக் காட்டுகின்றன. மதுரைக்காஞ்சி 25 அடிகளில் பாண்டியன் நெடுஞ்செழியன் பகைப்புலத்தைப் பாழாக்கியதை எடுத்துரைத்துள்ளது. பகைவரின் அழிவு மிகுதியைப் பட்டினப்பாலை பட்டியலிட்டு காட்டியுள்ளது.

திருமாவளவனின் படையெடுப்பிற்கு முன் பகையரசனின் வயல்களில் கரும்பும் செந்நெல்லும் வளர்ந்திருந்தன. குவளையோடு நெய்தல் மயங்கிக் கிடந்தன. ஆனால் அவன் படையெடுப்பிற்குப் பின், அவ்வயல்களில் அறுகம்புல்லும் கோரைப் புற்களும் வளர்ந்தன.

**. . . . . . . . . . தண்பணை எடுப்பி**
**வெண்பூங் கரும்பொடு செந்நெல் நீடி**
**மாஇதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கி**
**கராஅம் கலித்த கண்அகன் பொய்கை**
**கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடி**
**செறுவும் வாவியும் மயங்கி நீர் அற்று**
**அறுகோட்டு இரலையொடு மாண்பிணை உகளவும்**

**(பட்டி. 239-245)**

என்ற வரிகளில் காணமுடிகிறது. வளவன் படைகள் நீர் அருந்தியதாலும், படைகளின் செலவினாலும் நிலவளம் நீர்வளம் கொண்ட மருதநிலங்கள் நீர் வறந்து முல்லைக் கருப்பொருளாகிய மான்கள் திரியும் காடாயின. இவனுடைய அழிவுச் செயலால் மருதநில மக்கள் அவ்விடத்தை விட்டு வேற்றிடங்களை நோக்கி சென்றனர். இவனைப் போன்று அதியமான் பொருட்டெழினியின் படைகளும் பகைவர் நிலங்களைப் பாழ் செய்தன. ஆறு, குளம் முதலியவற்றின் துறைநீரை அவன் யானைகள் முகந்துண்ணும் என அஞ்சி பகை மக்கள் அவ்விடத்துத் தங்குதலை வெறுத்து வேறுபகுதிகளுக்குச் சென்றனர் (புறம்.96:7-9). இவ்வாறு மக்களை, தாங்கள் வாழும் இருப்பிடங்களிலிருந்து இடம் பெயரச் செய்துள்ளனர்.

### 2.3.6 அம்பலங்கள் மன்றங்கள் பாழாதல்

உள்ளூரார் பலர் தொழுது செல்வதாக, புதியவர்கள் பலரும் தங்குவதற்கு உரியதாக, சான்றோர்களைக் கொண்டதாக அம்பலங்கள் இருந்தன. பொதியில், அம்பலம் இரண்டும் ஒரே பொருளுடையதாகும்.

**கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்**
**பலிகண் மாறிய பாழ்படு பொதியில்**
**நரை மூதாளர் நாயிடக் குழிந்த**
**வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்**
**கான வாரண மீனும்**
**காடாகி விளியு நாடுடை யோரே** **(புற.52:12-17)**

**. . . . . . . . . . . . . . . ஏறிப் பலர்தொழ,**
**வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்**
**பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டி,**
**பெருநல் யானையொடு பிடிபுணர்ந்து உறையவும்**
**(பட்டி 248-251)**

**அவையிருந்த பெரும் பொதியிற்**
**கவையடிக் கடுநோக்கத்துப்**
**பேய் மகளிர் பெயர் பாட** **(மதுரை.161-163)**

இச்சான்றுகள் பொதியில் பாழ்பட்டதை எடுத்துரைக்கின்றன.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியின் படையெடுப்பால் பகைவரின் வளம்மிக்க ஊரின் நடுவில் இருந்த பொதியில் கோயில் பாழாகியது. கந்தத்திலிருந்த கடவுட் தன்மை நீங்கியது. இது அழிவின் பயங்கரத்தைக் காட்டுவதாக உள்ளது.

வளம் மிகுந்திருந்தபோது ஊரிலிருந்த முதியோர் பொதியில் சூதாடுவர். சூதாடும் போது சூதாடும் கருவி தொடர்ந்து இடப்பட்டதால் அங்குக் குழிகள் ஏற்பட்டன. காட்டுக் கோழிகள் முட்டையிடும் இடமாக அக்குழிகள் மாறின.

திருமாவளவனின் படையெடுப்பால் பகைவரின் அம்பலங்களிலுள்ள தெய்வம் உறையும் நெடிய தூண்கள் களிறுகள் உரசினமையால் சாய்ந்தன. புதியராய் வருபவர் தங்கி வழிபாடு செய்யும் அம்பலங்களில் களிறுகள் பிடிகளுடன் கூடித் தங்கின. நெடுஞ்செழியனின் பகை அழிவால் சான்றோர் இருந்த அம்பலங்களில் பேயாகிய மகளிர் உலாவி நின்றனர். இவ்வாறு பகை மக்கள் வழிபடும் இடங்கள் பாழாக்கப்பட்டன.

### 2.3.6.1 மன்றங்கள்

மக்கள் கூடும் வெளியிடம் மன்றமாகும். மன்றம் என்பது பதின் மூன்று பொருள்களைக் கொண்டதாக உள்ளது. அவை, முறை மன்றம், ஊருக்கு நடுவாயுள்ள மரத்தடிப் பொதுவிடம், குதிரைகளைப் பயிற்றும் செண்டுவெளி, மக்கள் கூடும் வெளியிடம், போர்க்களப் பரப்பின் நடுவிடம், பொன்னம்பலமுள்ள தில்லை, வீடு, மாட்டுத்தொழு, நெடுந்தெரு, மெய்ம்மை, பேய்கள் கூடுமிடம், பறவைகள் கூடுமிடம் (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 2007:350) முதலான பொருள்களைக் கொண்டுள்ளது. திருமுருகாற்றுப்படை,

**மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினும்**

**(திரு.முரு.226)**

என்ற வரியில் மன்றம் என்பதற்கு ஊர்க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடி என்றும் பொதியில் என்பதற்கு அம்பலம் என்றும் பொருள் தந்துள்ளது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி அம்பலம் மன்றம் இரண்டிற்கும் உள்ள தொடர்பை எடுத்துரைத்துள்ளது. முல்-பொருந்தற் கருத்துவேர்.

முல்>மல்=மிகுதல். மல்>மன்=மிகுதல், கூடுதல். மன்>மன்று=அம்பலம், கூடுமிடம். மன்று>மன்றம். பெருமைப் பொருள் பின்னொட்டு. மன்>மன்று>மன்றம் (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 2007:350). மக்கள் கூடுமிடமாகக் கொள்ளலாம். பகைவரின் அரண்களை, நிலங்களை, இல்லங்களை அழித்தலோடு மக்கள் ஒன்று சேருகின்ற இடங்களையும் அழித்துள்ளனர். இதனை,

**முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்து (அகம்.157:11)**

**அரசு பகை நுவலும் அருமுனை இயவின்,**
**அழிந்த வேலி அம்குடிச் சீறூர்**
**ஆளில் மன்றத்து (நற்.346:3–5)**

**முனைகவர்ந்த கொண்டென, கலங்கி, பீர் எழுந்து**
**மனை பாழ்பட்ட மரைசேர் மன்றத்து (அகம்.373:1–2)**

**மலைந்தோர் தேஎம் மன்றம்பாழ்பட (பெரும்பாண்:423)**

போன்ற பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. போர்முனை குடிமக்களை இடம் பெயர்ந்து போகச் செய்தது. குடிகள் அழிந்த சிறிய ஊரின்கண் மக்கள் இல்லாது ஒழிந்தனர். ஆளில்லாத அம்மன்றங்களில் மரை மான்கள் வந்து தங்கின.

திருவிழா நாளில், கூத்தரின் யாழிசை ஒலிக்கும் இடமாகவும் இம்மன்றங்கள் திகழ்ந்தன. மக்களின் மகிழ்ச்சிக்குரிய நிலையில் இருந்த மன்றம், திருமாவளவனால் பாழ்பட்டு, மக்கள் அணுகுவதற்கும் அஞ்சும் இடமாக மாறின. இதனை,

**பெருவிழாக் கழிந்த, பேஎம் முதிர் மன்றத்து,**
**சிறுபூ நெருஞ்சியோடு அறுகை பம்பி,**
**அழல்வாய் ஓரிஅஞ்சுவரக் கதிர்ப்பவும்**
**அழுகுரல் கூகையோடு ஆண்டலை விளிப்பவும்;**
**கணம்கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ,**
**பிணம்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும் (பட்டி.255–260)**

என்னும் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. இம்மன்றத்தில் நரியின் ஊளையும், கூகையின் குழறலும், ஆந்தையின் அலறலும் கேட்டன. கூத்தாடுவோர் ஆடிய

மன்றத்தில் ஆண் பேய்களோடு கூடிப் பெண் பேய்களும் ஆடின. மக்கள் நடமாட்டம் இல்லாது இருத்தலால் அங்குச் செல்ல நடுக்கம் ஏற்பட்டது. இம்மன்றத்தைப் போன்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனால் அழிவுற்ற மன்றமும் அச்சம் தருவதாக இருந்தது. இது,

**தாதெரு மறுத்த கலியழி மன்றத்**
**துள்ள மழிய ஊக்குநர் மிடல்தபுத்**
**துள்ளுநர் பனிக்கும் பாழா யினவே** (பதி.13:17-19)

என்ற பாடல் வழி தெரியவருகிறது. மனத்துணிவுடன் மன்றத்துக்குப் போக எண்ணினாலும், அவ்வெண்ணத்தைக் கெடுத்து நடுங்கச் செய்யும் பாழிடமாகக் காட்சியளித்தது.

ஊரின் நடுவே அம்பலங்களும் மன்றங்களும் இருந்தன. மக்கள் ஒன்று கூடும் இடமாகவும் இருந்தன. மக்கள் கூட்டமாக சேரும் இடங்களை அழிப்பது சிந்திக்கத் தக்கதாக உள்ளது. பல காரணங்களால் இவற்றை அழித்திருக்கலாம். மக்களுக்கு ஆளும் அரசனின் மீது நம்பிக்கையற்ற தன்மையை ஏற்படுத்துவது, கருத்துப் பரிமாற்றத்தை, கருத்துப் பரவலைத் தடுப்பது போன்றவற்றைக் குறிப்பிடலாம். நாட்டின் நிலையைத் தெரிந்து கொள்ள முடியாமல், செயலாற்ற முடியாமல் அவர்களுக்குள் ஒன்று சேர விடாது தொடர்பறுத்தலாக அம்பலங்கள் மற்றும் மன்றங்களின் அழிவுகள் நடைபெற்றிருக்கலாம்.

### 2.3.7 கழுதை ஏரிட்டு பாழாக்குதல்

பழந்தமிழகத்தில் விளைநிலங்கள் பரந்து காணப்பட்டன. மக்களின் அடிப்படைத் தொழிலாக உழவு இருந்தது. எருதுகளைக் கொண்டு ஏர் உழுதனர். விளைச்சல் மிகுந்திருந்தன. உணவு உற்பத்தி பெருகியிருந்தது. வளம் நிறைந்த பழந்தமிழகம் அரசர்களின் பகையால் வளமிழந்தன. பகையரசனின் நாடழிவு என்பது மருதநில அழிவாக இருந்தது. குதிரைகள் யானைகள் இவற்றின் செலவினால் பகைவர் நிலங்கள் ஒரு பக்கம் அழிந்தன என்றால், மறுபக்கம் கழுதைகள் கொண்டு அழிக்கப்பட்டன.

ஒரு அரசன் பகையரசனுடைய கோட்டையை அழித்து ஏரில் கழுதையைப் பூட்டி ஏர் உழும் வழக்கம் சங்க காலத்தில் இருந்தது. இவ்வழக்கத்தைப் பற்றித் தொல்காப்பியர் கூறியதாகத் தெரியவில்லை.

ஆனால் 'தாவினல்லிசை கருதிய கிடந்தோர்க்கு' என்று தொடங்கும் பொருளதிகாரம் புறத்திணையியல் சூத்திரத்தில் வருகிற 'மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும்' என்னும் அடிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் கழுதை ஏர் உழுதலைக் கூறுகிறார்.

'மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும்' -மாற்றரசன் வாழ்ந்த மதிலையழித்துக் கழுதையேரான் உழுது வெள்ளைவரகுக் கொள்ளும் வித்தி மங்கலமல்லாத செய்தான் மங்கலமாக நீராடு மங்கலமும்' என்பது அவர் உரை (மயிலை சீனி. வேங்கடசாமி, 1970:123). புறப்பொருள் வெண்பாமாலை,

**எண்ணார் பல்லெயில் கழுதையே ருழுவித்**
**துண்ணா வரகொடு கொள்வித் தின்று (புறப்.வெண்.120)**

என்று கழுதையாகிய ஏரிட்டு, உழுது, கவடியுடன் குடைவேலை விதைத்ததைக் குறிப்பிடுகிறது.

உழவுத் தொழிலில் எருதுகள் பயன்பாட்டில் இருந்தன. ஆனால், கழுதைகளைக் கொண்டு உழுதல் என்பது ஆராயத்தக்கதாக உள்ளது. பகை அரசனை, அவனுடைய ஆட்சியை அவமானப்படுத்துவதற்காக கழுதை ஏர் உழவு நடைபெற்றிருக்கலாம். பகை அரசனுடைய கோட்டையைப் போரில் வென்று அதனைக் கைப்பற்றிய அரசன், வெற்றி கொண்ட பின்னரும் தனது சினம் தணியாதவனாயின், தான் கைப்பற்றிய கோட்டையில் உள்ள அரண்மனைகளை இடித்துச் சிதைத்துத் தரையைக் கழுதை பூட்டிய ஏரினால் உழுது கொள்ளையும் வெள்வரகையும் விதைப்பான். இவ்வாறு செய்வது தோல்வியுற்ற பகையரசரை இகழ்ந்த செயலாகும் (மயிலை சீனி. வேங்கடசாமி, 2001:209-210) என்ற கருத்து எண்ணத் தக்கது.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பகைநாட்டில் உள்ள தேரோடும் வீதிகளை அழித்தான். கழுதைகளைப் பூட்டி உழுது பாழாக்கினான் (புறம்.15:1-3). அதியமான் மகன் பொருட்டெழினியும் பகைவர் நிலங்களைக் கழுதை ஏர் பூட்டி உழுதான். வெள்ளை வரகையும் கொள்ளையும் விதைத்தான். அவன் செயலை,

**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி**
**வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்**
**வைக லுழுவ வாழிய பெரிதென** **(புறம்.392:9-11)**

என்று ஔவையார் குறிப்பிட்டுள்ளார். இத்தொழிலை நாள்தோறும் இடையறாது செய்பவனாக இருந்தான். அரிசில் கிழாரும், கரும்பும் செந்நெல்லும் விளைந்த பகைவர் நிலங்களில் இளஞ்சேரலிரும் பொறை வெள்வரகை விளைவித்த செய்தியை,

**வெள்வரகு உழுத கொள்ளுடைக் கரம்பைச்**
**செந்நெல் வல்சி அறியார்** **(பதிற்.75:11-12)**

என்று எடுத்துரைத்துள்ளார். கழனியாக இருந்த இடங்களை நீரற்ற கரம்பை நிலங்களாக மாற்றினான். அதனால் செல்வ வளமிக்க பகை மக்கள் உணவிற்காக வருந்தினர். செந்நெல் சோறு கிடைக்காது துன்புற்றனர். நாட்டில் உணவு இன்றி பசியுற்ற மக்கள் வேறுநாடுகளில் தஞ்சம் அடையும் நிலை உருவாகியது.

தானியங்கள் விளையும் இடங்களில், முள் மரங்கள், வெள்ளை வரகு, கவடி, கொள், குடை ஒருவகை வேலமரம் (ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, பகுதி-II, 2002:433) போன்றவை வளர்க்கப்பட்டன. அவ்வாறு வளர்க்கப்படுவதன் நோக்கம் உணவு உற்பத்தியைக் குறைத்து, உணவு தட்டுப்பாட்டைப் பகைமக்களிடத்தே உண்டாக்குதலாகும். நிலங்கள் ஒன்றிற்கும் பயன்படாத வகையில், அழித்தலாகும். இதன் மூலம் பகை மக்கள் போதிய உணவு பெறாது, பசியால் துன்பப்படும் நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

பழந்தமிழகத்தில் மட்டுமன்றி வடநாடுகளிலும் கழுதை பூட்டி ஏரிடும் வழக்கம் இருந்துள்ளது. இதனை மயிலை சீனி வேங்கடசாமி பிறமொழியினரின் சான்றுகளைக் கொண்டு நிறுவியுள்ளார். காரவேலன் என்னும் கலிங்கநாட்டு அரசன் கி.மு. 2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். ஹத்தி கும்பா குகைக்கோவிலில் பிராகிருத மொழியில் எழுதி வைத்திருந்த சாசனத்தில் இச்செய்திகளைக் கூறியுள்ளான். இந்தச் சாசனம் இவ்வரசனுடைய பல செய்திகளைக் கூறுகிறது. காரவேல் பிதுண்ட நகரத்தை அழித்துக் கழுதை பூட்டி ஏரினால் உழுத செய்தியையும் கூறுகிறது. . . "ஹரிபத்ரீ என்பவர்

எழுதிய ஆவஸ்யக விருத்தி என்னும் நூலிலும், ஹேமசந்திரர் எழுதிய வீர சரித்திரத்திலும் இச்செய்தி கூறப்பட்டிருக்கிறதாம். கோணிகன் என்னும் அரசன் வைசாலி நாட்டரசனை வென்று அவனுடைய கோட்டையை இடித்துத் தகர்த்துக் கழுதை பூட்டிய ஏரினால் உழுதான் என்று அந்த நூல்கள் கூறுகின்றன என்பர். அரசர் கழுதையினால் ஏர் உழுத வழக்கம் தமிழ்நாட்டில் மட்டும் அல்லாமல் கலிங்க தேசம் வைசாலி முதலிய வடநாடுகளிலும் இருந்தது என்பது தெரிகிறது (மயிலை. சீனி. வேங்கடசாமி, 1970:125).

## 2.3.8 அச்சம் உருவாக்கல்

தன் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து உருவாகும் போதும் அவற்றிற்குப் பாதுகாப்பு இல்லாத போதும் அச்சம் ஏற்படுகிறது. பிறவற்றால் ஏதோ ஒரு தீங்கு ஏற்பட போகின்றது என்ற மன உணர்வும் அச்சத்தை உருவாக்குகிறது. தவறு செய்யும் போது அதன் தீமையை எண்ணியும் தண்டனையை எண்ணியும் அச்சம் தோன்றுகிறது.

பொதுவாக, இந்நான்கு நிலைகள் அச்சத்திற்கு உரியது என்றாலும், முதல் மூன்று நிலைகளைப் பழந்தமிழ்ச் சமூகத்தவரோடு பொருத்திக் காணலாம். கொலையும், கொள்ளையும், நாட்டை அழிக்க எண்ணும் பகையும், அரசனுக்கும் மக்களுக்கும் அச்ச உணர்வை ஏற்படுத்துகிறது. பிறநாட்டார் தம் நாட்டின் மீது படையெடுக்கப் போவதாக கூறினால் அல்லது படையெடுத்தால் தம் நாட்டில் ஏற்படப்போகும் இழப்புகளை எண்ணியும் அச்சம் பிறக்கின்றது.

### 2.3.8.1 உறக்கமின்மை

அச்சம் உடல் மற்றும் மனம் இரண்டின் செயல்பாட்டையும் குறைவுறச் செய்கிறது. மனத்தின் அமைதியைக் கெடுக்கின்றது. எண்ணங்களில் சிதைவை ஏற்படுத்துகின்றது. உடல் சோர்வு மற்றும் தடுமாற்றத்தை உண்டாக்குகிறது. செயல்படும் ஆற்றலைக் குறைக்கின்றது. மனிதனை நிம்மதியாக உறங்கவிடாது துன்புறுத்துகிறது. மனத்தின் வலிமையை அழிக்கின்றது. இத்தகைய அச்சத்தால் உருவாகும் துன்ப நிலையைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டியுள்ளன.

பதிற்றுப்பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலா படையெடுப்பைக் கண்டு, பகை அரசர்கள் தங்கள் நகரங்களில் துயி கொள்ளாது நடுங்கி வாழும் துன்பநிலையை எடுத்துரைக்கின்றது. இதனை,

**தார்அணி எருத்தின் வாரல் வள்உகிர்**
**அரிமான் வழங்கும் சாரல் பிறமான்**
**தோடுகொள் இனநிரை நெஞ்சு அதிர்ந்தாங்கு**
**முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது (பதிற்.12:4–7)**

என்று உவமையின் மூலம் குமட்டூர் கண்ணனார் விளக்குகின்றார். பிடரிமயிருடைய கழுத்தினையும் கூர்மையான நகங்களையும் உடைய சிங்கம் திரிகின்ற மலையில் யானை முதலிய பல்வேறு விலங்கினங்கள் எப்போதும் மனம் நடுங்கி வாழும். அதுபோல இவ்வரசனின் படையால் பகையரசர் அச்சத்துடன் வாழ்ந்தனர்.

இளஞ்சேரல் இரும்பொறையை நோக்கி, பெருங்குன்றூர் கிழார், நீ ஒரு நாள் போரை நிறுத்தி உன் தேவியைக் காணச்செல்வாய் என்றால் தம் குடி வேரோடு அழிந்துவிடும் என்று அஞ்சும் பகையரசர் சிறிது கண்ணுறங்குவாராக (பதி.81:31-37) என்று பகையரசரின் அஞ்சுகின்ற மனநிலையை எடுத்துரைக்கின்றார். அப்பகையரசர் அவனுக்கு அஞ்சி, தாம் வழிபடும் தெய்வங்களைத் தமக்குக் காவலென வேண்டிக் கொண்டனர் (பதி.82:1-2). அவ்வாறு அவர்கள் சொல்லிக் கொள்ளக் காரணம் அவன் பகைவரின் மக்கட் தொகுதியைக் கூற்றுவனைப் போன்று அழித்தொழிப்பதாகும் (பதி.83:7) என்று பகையரசர் அச்சப்படும் காரணத்தையும் விளக்குகின்றார்.

### 2.3.8.2 மக்கள் அச்சம்

அரசர்கள் மட்டுமன்றி, மக்களும் அச்சத்தால் உறங்காது தவிக்கின்றனர். போர்க்களமுள்ள ஊரினர் அச்சத்தின் மிகுதியால் இரவில் தூங்காது இருக்கின்றனர். இதனை ஔவையார்,

**. . . . . . . . . .நெடுந்தே ரஞ்சி**
**கொன்முனை பிரவூர் போலச்**
**சிலவாகுகநீ துஞ்சும் நாளே (குறு.91:6–8)**

என்கிறார். அதியமான் நெடுமான் அஞ்சியின் அச்சத்தைத் தரும் போர்க்களத்திலே உள்ள இரவையுடைய ஊரிலுள்ளோர் அச்சத்தால் தூங்காது இருக்கின்றனர். அவர்களைப் போன்று தலைவனைப் பிரிந்த தலைவியும் தூங்காது தவிப்பாள் என்ற உவமை நயத்துடன் விளக்குகிறார். பரணரும்,

**ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்**
**பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே** **(குறு.292:7-8)**

என்று உவமையின் மூலம் உணர்த்துகின்றார். ஒரு பெண்ணின் தாய், விருந்தினனாக தன் பெண்ணின் காதலன் வரும்போது, பகைப் புலத்திலுள்ள ஊரின் தன்மை போன்ற தன்மையுடையவளாய் இரவில் துயில் கொள்ளாது தன் பெண்ணின் நலத்தைக் காத்தாள் என்கிறார்.

அச்சத்தால் அரசனும் மக்களும் உறங்காது தவித்த நிலை ஒருபக்கம் என்றால், அச்சத்தால் தமக்கு வரும் துன்பத்தை மறைக்கும் நிலையையும் அக்காலத்தவர் மேற்கொண்டிருந்தனர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் ஆற்றலைக் கண்டு பகைவர்கள் அச்சம் கொள்கின்றனர். தம் மகிழ்ச்சியை இழந்து தவிக்கின்றனர். இதனைக் கோவூர்கிழார்,

**செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி**
**மையல் கொண்ட வேம லிருக்கையர்**
**புதல்வர் பூங்கண்முத்தி மனையோட்**
**கெவ்வம் கரக்கும் பைதன் மாக்களொடு**
**பெருங்கலக் குன்றற்றாற் றானே** **(புறம்.41:12-16)**

என்று காட்சிப்படுத்துகின்றார். கிள்ளி வளவன் வருகின்ற செலவை எண்ணி அச்சம் கொண்ட பகைவர்கள், அச்சத்தை வெளிக்காட்டாமல், இருக்கின்றனர். தமக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை மனைவியர் அறியாதவாறு மறைக்கின்றனர். தம் பிள்ளைகளின் பூப்போன்ற கண்களை முத்தமிடுகின்றனர். இத்தகைய துன்பத்தையுடைய ஆடவரோடு, பகைநாடுகள் மிகுந்த கலக்கமுற்றவனாக இருந்ததை எடுத்துக் காட்டுகின்றார்.

மேற்கூறிய இச்சான்றுகளின் மூலம், அரசன் நிலையில் தன் ஆட்சிக்கு தன் மக்களுக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்ற மன உணர்வும், மக்கள் நிலையில் தன் உயிருக்கு உடைமைக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்ற அச்ச உணர்வும், குடிமகன் என்ற நிலையில் தம் உறவுகளைப் பிரிய மனமில்லாத பாச உணர்வும் வெளிப்படையாகத் தெரிகின்றன. இருந்தாலும், இவ்வுணர்வு போராட்டங்கள் அரசர்களின் பகை உணர்ச்சியால் தொடர்ந்து நடைபெறுவதாக இருந்தன.

## 2.4 கொள்ளை

கொள்ளை என்பது பிறர் பொருளைக் கவர்தல். உரியவருக்குரிய பொருளை அவருக்குத் தெரியாமல் எடுத்தல். அவ்வாறு எடுப்பது களவு என்றும் திருட்டு என்றும் கொள்ளை என்றும் கூறப்படுகின்றன. மேலும், கொண்டி (பட்டி.246), வவ்வல் (அகம்.149), வௌவல் (பெரும்பாண்.40) முதலான பெயர்களும் கொள்ளையைக் குறிக்கின்றன. கழகத் தமிழ் அகராதி கொள்ளையின் பொருளாக பிறர் பொருளைக் கவர்கை, பற்றுதல், சூறையாடுதல் . . . போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. வவ்வுதல் என்பது பற்றுதல் என்றும் வவ்வு என்பது கவர்கை என்றும் வௌவுதல் என்பது கைப்பற்றுதல், ஆறலைத்தல், திருடுதல் . . . என்றும் இவ்வகராதி பொருளுரைக்கின்றது (கழகத் தமிழ் அகராதி, 1998 : 401, 824, 884).

### 2.4.1 குணம் கொள்ளாமை

களவு செய்பவன் நற்குணங்களைப் போற்றாமல் நன்மை தீமையை ஆராயாமல், பிறர் பழிக்கு அஞ்சாமல் களவுத் தொழிலைச் செய்கின்றான். அருளும் அன்பும் நேர்மையும் நல்லறிவும் அமையாதவன் களவை மேற்கொள்கின்றான். வள்ளுவர் இதனை,

**அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்க ணில் (குறள்.285)**

**களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு**
**மாற்றல் புரிந்தார்க ணில் (குறள்.287)**

என்று எடுத்துரைக்கின்றார். மேலும், களவு கொள்ளும் மனத்தில் வஞ்சனை நிலைபெற்றிருக்கும் (குறள்.288) என்கிறார். இவ்வஞ்சனை பிறரை ஏமாற்றவும் அழிக்கவும் செய்கிறது.

பிறர் பொருளைக் கொள்ளும் போது இடையூறு ஏற்பட்டால், அவ் இடையூறைத் தடுத்து எப்படியாவது பொருளைக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உருவாகிறது. அடுத்து, இடையூறாக இருந்தவரின் மீது கோபம் எழுகிறது. அக்கோபம் அவரைப் பயமுறுத்தி அல்லது துன்புறுத்திப் பொருளைக் கவரச் செய்கிறது.

## 2.4.1.1 கொள்ளை உருவாதல்

தம்மிடம் இல்லாத ஒன்று, அடுத்தவரிடம் இருப்பதைக் கண்டு திருடும் எண்ணம் ஏற்படுகிறது. உணவு, உடை, இருப்பிடம் முதலான அடிப்படை வசதிகள் இல்லாமை, வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய பொருள் இல்லாமை, உழைப்பிற்கும் உண்மைக்கும் இடம் கொடாமை, இல்லாமையிலிருந்து விடுபட, உயிர் வாழ வேண்டி இத்தீய எண்ணம் உருவாகிறது எனலாம்.

தான் மட்டும் வறுமையுற்று துன்பத்தில் இருக்கும்போது மற்றவர் செல்வ வளத்துடன் இருப்பதைக் கண்டு மனம் துன்புறுகிறது. அத்துன்பமானது நல்லியல்பை இழக்கச் செய்யும் போது பொறாமை, வெறுப்பு, கோபம் முதலான தீய குணங்கள் எழுச்சியுறுகின்றன. இவை பிறர் பொருள் மீது ஆசை கொள்ளச் செய்கின்றன. அவ்வாசை களவாக, கொள்ளையாக, திருடாக செயல்படுகிறது. திருடுதல் என்பது சிலவேளைகளில் பொருளாக மட்டுமன்றி, பிறர் அறிவை, உழைப்பைத் திருடுவதாகவும் அமைகிறது.

## 2.4.1.2 கொள்ளும் பொருள்

நாட்டில் வாழும் குடிமகனுக்கு இந்நிலை ஏற்படும் போது நற்குணம் இழந்தவன் கள்வனாக மாறுகின்றான். பிறர் பொருளைக் கொள்ளையிடுகின்றான். தனியாக அல்லது குழுவாக சேர்ந்து கொள்ளை செயலில் ஈடுபடுகின்றான். இது நாட்டில் வாழ்கின்றவனின் செயலாக உள்ளது. ஆனால், நாடாளும் அரசன் கள்வனாக இருக்கின்றான். அவனது வீரர்கள் கள்வர்களாக இருக்கின்றனர். பிற நாட்டின் பொருள்களைக் கொள்ளையிடுகின்றனர். உணவுத் தானியங்கள், அணிகலன்கள், பொற்கலன்கள் என மற்றவரது செல்வங்களைக் கொள்ளையிடுகின்றனர்.

பதிற்றுப்பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் படையெடுப்பைக் கண்டு, பகை அரசர்கள் தங்கள் நகரங்களில் துயில் கொள்ளாது நடுங்கி வாழும் துன்பநிலையை எடுத்துரைக்கின்றது. இதனை,

**தார்அணி எருத்தின் வாரல் வள்உகிர்**
**அரிமான் வழங்கும் சாரல் பிறமான்**
**தோடுகொள் இனநிரை நெஞ்சு அதிர்ந்தாங்கு**
**முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது (பதிற்.12:4–7)**

என்று உவமையின் மூலம் குமட்டூர் கண்ணனார் விளக்குகின்றார். பிடரிமயிருடைய கழுத்தினையும் கூர்மையான நகங்களையும் உடைய சிங்கம் திரிகின்ற மலையில் யானை முதலிய பல்வேறு விலங்கினங்கள் எப்போதும் மனம் நடுங்கி வாழும். அதுபோல இவ்வரசனின் படையால் பகையரசர் அச்சத்துடன் வாழ்ந்தனர்.

இளஞ்சேரல் இரும்பொறையை நோக்கி, பெருங்குன்றூர் கிழார், நீ ஒரு நாள் போரை நிறுத்தி உன் தேவியைக் காணச்செல்வாய் என்றால் தம் குடி வேரோடு அழிந்துவிடும் என்று அஞ்சும் பகையரசர் சிறிது கண்ணுறங்குவாராக (பதி.81:31-37) என்று பகையரசரின் அஞ்சுகின்ற மனநிலையை எடுத்துரைக்கின்றார். அப்பகையரசர் அவனுக்கு அஞ்சி, தாம் வழிபடும் தெய்வங்களைத் தமக்குக் காவலென வேண்டிக் கொண்டனர் (பதி.82:1-2). அவ்வாறு அவர்கள் சொல்லிக் கொள்ளக் காரணம் அவன் பகைவரின் மக்கட் தொகுதியைக் கூற்றுவனைப் போன்று அழித்தொழிப்பதாகும் (பதி.83:7) என்று பகையரசர் அச்சப்படும் காரணத்தையும் விளக்குகின்றார்.

### 2.3.8.2 மக்கள் அச்சம்

அரசர்கள் மட்டுமன்றி, மக்களும் அச்சத்தால் உறங்காது தவிக்கின்றனர். போர்க்களமுள்ள ஊரினர் அச்சத்தின் மிகுதியால் இரவில் தூங்காது இருக்கின்றனர். இதனை ஔவையார்,

**. . . . . . . . . . .நெடுந்தே ரஞ்சி**
**கொன்முனை பிரவூர் போலச்**
**சிலவாகுகநீ துஞ்சும் நாளே (குறு.91:6–8)**

என்கிறார். அதியமான் நெடுமான் அஞ்சியின் அச்சத்தைத் தரும் போர்க்களத்திலே உள்ள இரவையுடைய ஊரிலுள்ளோர் அச்சத்தால் தூங்காது இருக்கின்றனர். அவர்களைப் போன்று தலைவனைப் பிரிந்த தலைவியும் தூங்காது தவிப்பாள் என்ற உவமை நயத்துடன் விளக்குகிறார். பரணரும்,

**ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்**
**பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே** (குறு.292:7-8)

என்று உவமையின் மூலம் உணர்த்துகின்றார். ஒரு பெண்ணின் தாய், விருந்தினனாக தன் பெண்ணின் காதலன் வரும்போது, பகைப் புலத்திலுள்ள ஊரின் தன்மை போன்ற தன்மையுடையவளாய் இரவில் துயில் கொள்ளாது தன் பெண்ணின் நலத்தைக் காத்தாள் என்கிறார்.

அச்சத்தால் அரசனும் மக்களும் உறங்காது தவித்த நிலை ஒருபக்கம் என்றால், அச்சத்தால் தமக்கு வரும் துன்பத்தை மறைக்கும் நிலையையும் அக்காலத்தவர் மேற்கொண்டிருந்தனர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் ஆற்றலைக் கண்டு பகைவர்கள் அச்சம் கொள்கின்றனர். தம் மகிழ்ச்சியை இழந்து தவிக்கின்றனர். இதனைக் கோவூர்கிழார்,

**செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி**
**மையல் கொண்ட வேம விருக்கையர்**
**புதல்வர் பூங்கண்முத்தி மனையோட்**
**கெவ்வம் கரக்கும் பைதன் மாக்களொடு**
**பெருங்கலக் குன்றற்றாற் றானே** (புறம்.41:12-16)

என்று காட்சிப்படுத்துகின்றார். கிள்ளி வளவன் வருகின்ற செலவை எண்ணி அச்சம் கொண்ட பகைவர்கள், அச்சத்தை வெளிக்காட்டாமல், இருக்கின்றனர். தமக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை மனைவியர் அறியாதவாறு மறைக்கின்றனர். தம் பிள்ளைகளின் பூப்போன்ற கண்களை முத்தமிடுகின்றனர். இத்தகைய துன்பத்தையுடைய ஆடவரோடு, பகைநாடுகள் மிகுந்த கலக்கமுற்றவனாக இருந்ததை எடுத்துக் காட்டுகின்றார்.

மேற்கூறிய இச்சான்றுகளின் மூலம், அரசன் நிலையில் தன் ஆட்சிக்கு தன் மக்களுக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்ற மன உணர்வும், மக்கள் நிலையில் தன் உயிருக்கு உடைமைக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்ற அச்ச உணர்வும், குடிமகன் என்ற நிலையில் தம் உறவுகளைப் பிரிய மனமில்லாத பாச உணர்வும் வெளிப்படையாகத் தெரிகின்றன. இருந்தாலும், இவ்வுணர்வு போராட்டங்கள் அரசர்களின் பகை உணர்ச்சியால் தொடர்ந்து நடைபெறுவதாக இருந்தன.

## 2.4 கொள்ளை

கொள்ளை என்பது பிறர் பொருளைக் கவர்தல். உரியவருக்குரிய பொருளை அவருக்குத் தெரியாமல் எடுத்தல். அவ்வாறு எடுப்பது களவு என்றும் திருட்டு என்றும் கொள்ளை என்றும் கூறப்படுகின்றன. மேலும், கொண்டி (பட்டி.246), வவ்வல் (அகம்.149), வௌவல் (பெரும்பாண்.40) முதலான பெயர்களும் கொள்ளையைக் குறிக்கின்றன. கழகத் தமிழ் அகராதி கொள்ளையின் பொருளாக பிறர் பொருளைக் கவர்கை, பற்றுதல், சூறையாடுதல் . . . போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. வவ்வுதல் என்பது பற்றுதல் என்றும் வவ்வு என்பது கவர்கை என்றும் வௌவுதல் என்பது கைப்பற்றுதல், ஆறலைத்தல், திருடுதல் . . . என்றும் இவ்வகராதி பொருளுரைக்கின்றது (கழகத் தமிழ் அகராதி, 1998 : 401, 824, 884).

### 2.4.1 குணம் கொள்ளாமை

களவு செய்பவன் நற்குணங்களைப் போற்றாமல் நன்மை தீமையை ஆராயாமல், பிறர் பழிக்கு அஞ்சாமல் களவுத் தொழிலைச் செய்கின்றான். அருளும் அன்பும் நேர்மையும் நல்லறிவும் அமையாதவன் களவை மேற்கொள்கின்றான். வள்ளுவர் இதனை,

**அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்க ணில் (குறள்.285)**

**களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு**
**மாற்றல் புரிந்தார்க ணில் (குறள்.287)**

என்று எடுத்துரைக்கின்றார். மேலும், களவு கொள்ளும் மனத்தில் வஞ்சனை நிலைபெற்றிருக்கும் (குறள்.288) என்கிறார். இவ்வஞ்சனை பிறரை ஏமாற்றவும் அழிக்கவும் செய்கிறது.

பிறர் பொருளைக் கொள்ளும் போது இடையூறு ஏற்பட்டால், அவ் இடையூறைத் தடுத்து எப்படியாவது பொருளைக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உருவாகிறது. அடுத்து, இடையூறாக இருந்தவரின் மீது கோபம் எழுகிறது. அக்கோபம் அவரைப் பயமுறுத்தி அல்லது துன்புறுத்திப் பொருளைக் கவரச் செய்கிறது.

### 2.4.1.1 கொள்ளை உருவாதல்

தம்மிடம் இல்லாத ஒன்று, அடுத்தவரிடம் இருப்பதைக் கண்டு திருடும் எண்ணம் ஏற்படுகிறது. உணவு, உடை, இருப்பிடம் முதலான அடிப்படை வசதிகள் இல்லாமை, வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய பொருள் இல்லாமை, உழைப்பிற்கும் உண்மைக்கும் இடம் கொடாமை, இல்லாமையிலிருந்து விடுபட, உயிர் வாழ வேண்டி இத்தீய எண்ணம் உருவாகிறது எனலாம்.

தான் மட்டும் வறுமையுற்று துன்பத்தில் இருக்கும்போது மற்றவர் செல்வ வளத்துடன் இருப்பதைக் கண்டு மனம் துன்புறுகிறது. அத்துன்பமானது நல்லியல்பை இழக்கச் செய்யும் போது பொறாமை, வெறுப்பு, கோபம் முதலான தீய குணங்கள் எழுச்சியுறுகின்றன. இவை பிறர் பொருள் மீது ஆசை கொள்ளச் செய்கின்றன. அவ்வாசை களவாக, கொள்ளையாக, திருடாக செயல்படுகிறது. திருடுதல் என்பது சிலவேளைகளில் பொருளாக மட்டுமன்றி, பிறர் அறிவை, உழைப்பைத் திருடுவதாகவும் அமைகிறது.

### 2.4.1.2 கொள்ளும் பொருள்

நாட்டில் வாழும் குடிமகனுக்கு இந்நிலை ஏற்படும் போது நற்குணம் இழந்தவன் கள்வனாக மாறுகின்றான். பிறர் பொருளைக் கொள்ளையிடுகின்றான். தனியாக அல்லது குழுவாக சேர்ந்து கொள்ளை செயலில் ஈடுபடுகின்றான். இது நாட்டில் வாழ்கின்றவனின் செயலாக உள்ளது. ஆனால், நாடாளும் அரசன் கள்வனாக இருக்கின்றான். அவனது வீரர்கள் கள்வர்களாக இருக்கின்றனர். பிற நாட்டின் பொருள்களைக் கொள்ளையிடுகின்றனர். உணவுத் தானியங்கள், அணிகலன்கள், பொற்கலன்கள் என மற்றவரது செல்வங்களைக் கொள்ளையிடுகின்றனர்.

புறப்பொருள் வெண்பாமாலை,

**கூடார்முனை கொள்ளை சாற்றி**
**வீடறக் கவர்ந்த வினைமொழிந் தன்று (புறப்.வெண்:50)**

என்று பகைவர் நிலங்கள் பாழ்படக்கொள்ளை கொள்வதை எடுத்துரைக்கின்றது.

பகைவர் நாடுகளை நெருப்பிட்டு கொளுத்திய பின் அங்கிருக்கும் பொருள்கள் கொள்ளையிடப்படுகின்றன. இது பழந்தமிழக அரசுகள் ஒருவர் மற்றவருக்கு செய்யும் செயலாக அமைகின்றது. இவ்வரசுகளின் இடைவிடாத போரினால், குடிகள் பல இன்னல்களை அடைந்திருக்கின்றன. ஊர் எரிவும் கொள்ளையும் தொடர்ந்து மாறி மாறி நடைபெற்றதால் குடிகள் அமைதியிழந்து தவித்திருக்கின்றனர். மேற்கொண்டு வாழ முடியாத வகையில் ஊரழிவுகள் நடத்தப்பட்டதால், உயிருக்குப் பயந்து பகை மக்கள் தங்கள் ஊரைவிட்டு ஓடியுள்ளனர். இவ்வாறு வாழ்வதற்கு இடம் இல்லாமல், வாழ்க்கைக்கு வேண்டிய பொருள் இல்லாமல், உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு இல்லாமல் துன்புற்றிருக்கின்றனர்.

### 2.4.1.3 விளைநிலங்கள் கொள்ளை போதல்

இரவு பகல் எண்ணாது பகைவர் நாடுகள் தீப்பற்றி எரிகின்றன. பகைவரின் மக்கள் தம் சுற்றத்தை அழைத்துக் கூவி அழுகின்றனர். அவ்வாறு அழும் ஆரவாரத்தின் இடையில் கொள்ளையடிக்கின்றான் சோழன் கரிகால்வளவன். கொள்ளையடிக்கின்ற அவனின் செயலைக் கருங்குழலாதனார்,

**எல்லையு மிரவு எண்ணாய் பகைவர்**
**ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்**
**கொள்ளை மேவலை (புறம்.7:7–9)**

என்று எடுத்துக்காட்டுகின்றார்.

உணவு பொருட்கள், நெல்வயல்கள் கொள்ளையடிக்கப் படுகின்றன. மக்களின் உழைப்பு கொள்ளை போகின்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் வீரர்கள்

பகைநிலங்களின் தானியங்களைத் தம்மால் கொள்ளக்கூடிய அளவு கொள்ளை கொண்டு போகின்றனர். மீதமுள்ள தானியங்கள் எவர்க்கும் பயன்படாமல் அழியும் வண்ணம் அவர்கள் கொள்ளைச் செயல் அமைந்திருந்தது (புறம்.23:6-7).

பாண்டரங்கண்ணனார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், நப்பூதனார், கடியலூர் உருத்திரங் கண்ணனார் போன்றவர்கள் அரசர்களின் கொள்ளைச் செயலை இயம்புகின்றனர்.

**. . . . . . . . . தலைச் சென்றவர்**
**விளைவயல் கவர்பு ஊட்டி (புறம்.16:3)**

**நீயே, பிறர்நாடு கொள்ளும் காலை, அவர்நாட்டு**
**இறங்கு கதிர்க் கழனிநின் இளையரும் கவர்க (புறம்.57:5–6)**

**. . . . . . . . . . . . . . . . . . . . . . . பிறர்**
**வேண்டுபுலம் கவர்ந்த, ஈண்டுபெருந் தானையொடு**
**(முல்லைப்பாட்டு:89–90)**

**கொண்டி உண்டி, தொண்டையோர் மருக!**
**(பெரும்பாண்:454)**

என்று பெருநற்கிள்ளி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், தொண்டைமான் இளந்திரையன் முதலான அரசர்கள் மற்றும் அவர்களது வீரர்கள் விளைநிலங்களில் கொள்ளை நடத்தியதை எடுத்துரைக்கின்றனர்.

### 2.4.1.4 மனத்தால் கொள்ளுதல்

பகை நிலத்தில் அரசனுக்குத் தேவையான பொருள்கள் கிடைக்கின்றன. அப்பொருள்களைப் பெற ஆர்வம் கொள்கின்றான். ஆர்வம் கொண்டு படையெடுத்துப் பகைவரின் பொருள்களைக் கைப்பற்றுகின்றான். ஆனால், நாட்டினைக் கைப்பற்றுவதற்கு முன்னர் தன் மனத்தால் பகைவர் பொருளைக் கொள்ள எண்ணுகின்றான் பாண்டியன் நெடுஞ்செழியன்.

**அரிய வெல்லாம் எளிதினிற் கொண்டு**

**. . . . . . . . . . . . . . . . . . . .**

**. . . . . . . . . . . . . . . . . . . .**

**. . . . . . . . . . . . . . . . . . . .**

**அகநாடுபுக்கு, அவர் அருப்பம் வெளவி (மதுரை.145,149)**

என்று அவனுடைய செயலை மாங்குடி மருதனார் உரைக்கின்றார். தன் ஊரிடத்தே இருந்து, பகைவரின் அரிய பொருள்களை எண்ணி கவரும் எண்ணமுடையவனாக இருந்துள்ளான்.

அடுத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனோ, அப்பொருள் நிறைந்துள்ள இடத்தைக் கவர்ந்து கொள்ள நினைக்கின்றான். தனக்குத் தேவையானவை கிடைக்கும் இடத்தைக் கவர்ந்து கொள்ளும் இயல்புடையவனாக இருந்தான் (பதிற்..12:2). இவ்வாறு, போருக்குச் செல்லும் முன்னரே, பகைவர் நாட்டின் செல்வங்களைக் கைக்கொள்ள நினைக்கும் இவ்வரசர்களின் எண்ணத்தை அறிய முடிகிறது.

## 2.4.1.5 பொன்னும் பொருளும் கொள்ளையிடல்

உணவு தானியங்கள் தவிர, அணிகலன்கள், பொற்கலன்கள் கொள்ளையிடப்படுகின்றன. சான்றாக, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் வீரர்கள் பசுமை நிறைந்த நெல்வயல்கள் சூழ்ந்த கோட்டை மதில்களைக் கவர்கின்றனர். கவர்ந்த அக்கோட்டைகளில் உள்ள அணிமணிகளையும் கவர்கின்றனர் (புறம்.6:11-15). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனின் மக்களும் அவனைப் போன்றே பகைவர்களின் பொருள்களைக் கவர்ந்து உண்ணுதலில் ஈடுபடுகின்றனர். வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் இச்செயலை,

**தண்டமிழ் வரைப்புஅகம் கொண்டியாகப்**
**பணித்துக் கூட்டுண்ணும் தணிப்பருங் கடுந்திறல்**
**நின்னோர் அன்னநின் புதல்வர் என்றும்**
**ஒன்னார் வாட அருங்லம் தந்துநும்**
**பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்**
**முன்னோர் போல்க, இவர் பெரும் கண்ணோட்டம்**

(புறம். 198:12-17)

என்று எடுத்துரைக்கின்றார். தமிழ் நாட்டின் நிலப்பரப்பு முழுவதையும் 8கொள்ளை கொண்டு, அவர் பொருள்களைக் கவர்ந்துண்ணும் ஆசை அடங்காத அவ்வரசனைப் போன்றவர்கள் அவன் மக்கள் என்கிறார். பகைவர் வருந்த அவர்களுடைய அணிமணிகளைக் கவர்ந்து கொண்டு வந்து நன்மாறனின் நாட்டில் குவிக்கும் செயலில் அவனுடைய முன்னோர் ஈடுபட்டனர். அவர்களைப் போன்று அவன் மக்களின் செயல் அமைந்திருந்தது. நன்மாறனின் முன்னோர்கள் மட்டுமன்றி, அவனது குடியும் வழிவழியாக கொள்ளைச் செயலில் ஈடுபட்டிருந்ததைக் காணமுடிகிறது.

### 2.4.1.6 பொற்கட்டிகளாக மாற்றல்

கொள்ளையிடப்பட்ட அணிகலன்கள், பொற்கலன்கள் அனைத்தும் உருக்கப்பட்டு பொற்கட்டிகளாக மாற்றப்படுகின்றன. மாற்றப்பட்ட அப்பொற்கட்டிகள் வீரர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. இதனைப் பெருங்குன்றூர் கிழார்,

**நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி**
**அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி**
**கட்டறை வலிப்ப நின்தானை யுதவி (பதிற்.81:15-17)**

என்று இளஞ்சேரலிரும் பொறையின் செயலை விளக்குகின்றார்.

இச்செயலின் தன்மையை, கொண்ட கொள்ளை பல்வேறு வகைப் பொற்கலன்களாதலால் அவற்றை ஓரினமாக்குவதற்காகப் பொடித் துருக்கிப் பொற்கட்டிகளாக மாற்றினமை தோன்ற "அழல் வினை யமைந்த நிழல்விடு கட்டி" யென்றும் கூறினார். இவ்வடை சிறப்பானேயதற்கு நிழல்விடு கட்டி என்ற பெயராயிற்று என்று எடுத்துரைக்கப்படுகிறது (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,1995:388). பாட்டின் பெயர் அரசனின் இச்செயலின் பெயராக வந்துள்ளதைக் குறிப்பிடுகின்றார். மேலும் பெருங்குன்றூர் கிழார், இவ்வரசன் பகைநாடுகளைப் பலநிலைகளில் அழித்துப் பொற்கலன்களைக் கவர்ந்தான் என்கிறார்.

**இன்னா தம்மவது தானே பன்மாண்**
**நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉ (பதிற்.83:6-7)**

என்ற பாடலில் "பன்மாண்" என்பது பலவகையில் அழித்தலைக் குறிக்கும். எரியூட்டியும், சூறையாடியும், கொலை புரிந்தும் அரிய கலன்களை இவ்வரசன் கவர்ந்தான் (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, 1995:597). இச்சேரன், பகையரசன் நாட்டையழித்தற்குப் பலவகை முறைகளைக் கையாண்டனன். சென்ற உலகப் போரில் ஒருநாட்டார் பகைவர் தமது நாட்டைக் கைப்பற்றி நாட்டின் கண்ணுள்ள வளங்களை உரிமையாக்கி, தம் ஆக்கங்களைப் பெருக்கி கொள்ளும்முன், தன்நாட்டின் வளப்பத்தையெல்லாம் அழித்துப் பொசுக்கினர். . . . . . . இச்சேரன் பகைவர் நாட்டைக் கைப்பற்றி எரியிட்டும், சூறையாடியும் அந்நாட்டை அழித்ததோடு, அங்குள்ள உயரிய பொற்கலன்களைக் கவர்ந்து வந்தனன் என்று தெரிகிறது (மேரி மாசிலாமணி, 1955: 295). அடுத்து, பாண்டிய மன்னன் ஒருவன் முசிறியை முற்றுகையிட்டு அங்குள்ள பொன்படிமத்தைக் கைப்பற்றி கொணர்ந்தான் என்று எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் (அகம்.149: 11-13) குறிப்பிடுகின்றார்.

### 2.4.2 ஆறலைக் கள்வரோடு ஒப்பாதல்

பகைவர் நாட்டில் கவர்ந்து வரும் வளங்களில் ஒன்றாக பொன் வளம் உள்ளது. பகைநாட்டின் மீது படையெடுப்பதற்கு முன் அந்நாட்டில் கிடைக்கும் வளங்களை முதலில் ஆராய்கின்றவனாக அரசன் செயல்படுகின்றான். பகைவரின் வளங்களைக் குறித்துப் போர் அமைகின்றது எனலாம். பொன்வளம் குறித்துப் போருக்கு எழுகின்ற அரசனின் செயல் ஆறலைக் கள்வரின் செயலாக உள்ளது. அவ்விருவரின் செயலை, பிறநாட்டுப் பொன்வளம் குறித்துப் போருக்கு எழுவான் செயல் ஆறலைக் கள்வரின் செயலிலிருந்து சிறிதளவே வேறுபட்டதாகும். ஆறலைக் கள்வன் ஓரிடத்தில் இருந்தவாறே அவ்வழியில் வருவோரை வருத்தி அவர் கொணரும் பொருள்களைக் கொள்ளையிடுவான். பொன் ஆசை கொண்டு போருக்கு எழுவோன் அப்பொருள் இருக்கும் இடம் தேடிச் சென்று கொள்ளையாடி வருவான். வேறுபாடு தவிர்த்துப் பொன் வளம் உடையாரின் மண்ணின் மீது காதல் கொள்ளாது, அம்மண்ணில் மண்டிக்கிடக்கும் பொன்னின் மீது மட்டுமே காதல் உடையராதலில் இருவருமே ஒருமைப்பாடு உடையவராவர் (கா. கோவிந்தன், 2003:101) என்ற கருத்துக் கருதத்தக்கதாக உள்ளது. ஆறலைக் கள்வன் வழியில் வருவோரைத் துன்புறுத்தி பொருளை அடைகின்றான். அரசனோ, பகைவரைத் துன்புறுத்தி பொருளை அடைகின்றான். தன் நாட்டின்

வளத்திற்குத் தேவையான பொருள் எங்கிருக்கிறதோ, அங்கு தன் வலிமையைக் காட்டி அப்பொருளைக் கவர்ந்து கொள்கிறான்.

### 2.4.3 கொண்டி மகளிர்

விளை நிலங்கள், அணிகலன்கள், பொற்கலன்கள் என இவற்றைக் கொள்ளையிட்டதோடு, பெண்களையும் கொள்ளையிட்டுள்ளனர். சோழன் கரிகால் பெருவளத்தான் இச்செயலைச் செய்துள்ளான். அவன் பகை அரசரின் மகளிரைக் கொள்ளையிட்டதை,

**கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி,**
**அந்தி மாட்டிய நந்தா விளக்கின்,**
**மலர் அணி மெழுக்கம், ஏறிப் பலர்தொழ (பட்டி.246-248)**

என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் குறிப்பிடுகின்றார். இம்மகளிர், பலரும் நீர் உண்ணும் துறையில் நீராடினர். அம்பலங்களை மெழுகிட்டு தூய்மைப்படுத்தினர். அந்திப் பொழுதில் விளக்குகளை ஏற்றி, தெய்வம் உறையும் தறிகளுக்கு மலர் சூட்டி வழிபாடு செய்தனர். இவ்வாறு கோயில்களில் திருப்பணி செய்ய பகைநாட்டின் மகளிர் சிறைபிடித்துக் கொண்டு வரப்பட்டனர்.

கொண்டி மகளிர் என்பதற்கு பிறநாட்டிலிருந்து கொள்ளையிட்டுக் கொணர்ந்த பெண்டிர் (பொ.வே. சோமசுந்தரனார், 1971:59) என்று பொருள் கூறப்பட்டுள்ளது. பண்டைய அரசர்கள் தம் பகை நாட்டுறையும் மகளிரைச் சிறைப்பிடித்து வருதலும் அம்மகளிரைக் கற்பழித்தல் முதலியன செய்யாது திருக்கோயிற் திருப்பணி செய்வித்து ஓம்புவர் என்பதும் இதனால் உணரலாம் என்று பொருள் விளக்கம் தருகிறார். ரா. ராகவையங்கார் கூறும் கொண்டி மகளிர் பற்றிய கருத்துரையை மறுத்து, சான்றுகள்காட்டி, தன் கருத்துரையை நிறுவுகிறார். . . . . . 'கொண்டி மகளிர் என்பார் கோயிற் பணிபுரியும் பதியிலார்' என்றும் 'இவர்தாமே தம் போகத்திற்கு ஆடவரை வரிப்பவராதலிற் கொண்டி மகளிர் என்றார் என்றும் விளக்கம் கூறும் ரா.ராகவையங்கார் தெய்வந் தொழுமிடத்தே இப்பதியிலாரை விளக்கேற்றிக் கடவுளுக்குத் தொண்டியற்ற வைத்தனர் என்பது பொருந்தாமை யுணர்க. வரைவின் மகளிரைக் கொண்டி மகளிர் என்றதும் அவர் பிறர் பொருளைக்

கொள்ளை கொள்ளுதலைக் கருதியே ஆகலின் கொண்டி மகளிர் என்றதற்குக் கொள்ளையிடப்பட்ட மகளிர் எனவே சிறப்பாம் என்க (பொ.வே.சோமசுந்தரனார், 1971:59) என்று இலக்கியச் சான்றுகள் காட்டி கொள்ளையிடப்பட்ட மகளிர் என்று விளக்கம் தருகிறார். தன் நாட்டில் கோயில்களில் பணிபுரிய வேற்று நாட்டு பெண்களை, கரிகால்வளவன் கொள்ளையிட்டிருக்கின்றான். போருக்குமுன்,

**ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும், பிணியுடையீரும்** (புறம்.9:1–2)

என இவர்கள் பாதுகாப்பை அறச்செயலாகக் கொள்ளும் சங்கச் சமூகத்தில் பிறநாட்டு மகளிரைக் கொள்ளையிட்டது வருந்தத்தக்கச் செயலாக உள்ளது. பெண்கள் மட்டுமின்றி, ஆடவரும் சிறைப்படுத்தப்பட்டனர். காப்பியாற்றுக் காப்பியனார்,

**மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து**
**மன்னெயி லெறிந்து மறவர்த் தரீஇ** (பதிற்.37:8–9)

என்று களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பகைவரின் வீரர்களைச் சிறைப்பிடித்துக் கொணர்ந்ததை எடுத்துக் காட்டுகின்றார்.

### 2.4.4 கள்வர் உருவாதல்

பழந்தமிழர் பண்பாட்டு சிறப்புடையவர். கலைகள் பல கற்றவர். இலக்கிய வளம் நிறைந்தவர். செல்வவளம் உடையவர். வணிகத் திறனுடையவர். வளமிக்க வாழ்வுடையவர். இத்தகைய வளமிக்க வாழ்வுடைய பண்டைத் தமிழகத்தில், வாழ்க்கை வளமற்று வறுமையில் வாடியவரும் இருந்தனர். வறுமையுற்ற புலவர்களின் வாழ்க்கை வள்ளல்களை எதிர் நோக்கியிருந்தது. வள்ளல் தன்மையுள்ள அரசர்களின் வாழ்க்கை, பகை நிலத்தை நோக்கியிருந்தது.

பகைவரின் அரண்மனையில் குவிந்து கிடக்கும் அணிகலன்களை, பொற்கலன்களை அரசன் கொள்ளையிடுகின்றான். அவனது வீரர்கள் உணவுத் தானியங்களைக் கொள்ளையடிக்கின்றனர். பகைநாட்டின் செல்வங்கள் அனைத்தும் இவர்களால் சூறையாடப்படுகின்றன.

பகைநிலத்தின் வளத்தை எடுத்துக் கொண்டு வறுமையை விட்டுவிட்டு செல்கின்றனர். பல்யானைச் செல்கெழு குட்டுவன் பகைநாட்டின் வளன் அழியும்படி கவர்ந்து, விளங்கி வாழ்வார் பலர் இறக்கும்படி அழித்தான். பாலைக் கௌதமனார் அவனின் இச்செயலை,

**படுபிணம் பிறங்க பாழ்பல செய்து**
**படுகண் முரசம் நடுவண் சிலைப்ப**
**வளன்அற நிகழ்ந்து வாழுநர் பலர்பட** **(பதிற்.49:15–17)**

என்று எடுத்துரைக்கின்றார். பகைநிலம் மக்கள் வாழ முடியாதவாறு முற்றிலும் இவர்களால் பாழாக்கப்படுகிறது. விளைநிலங்கள் அழிக்கப்பட்டு, நெருஞ்சிமுட்களும், வேலமுட்களும் நிறைந்த காடாகவும், பயிர்த்தொழில் செய்ய இயலாத வறண்ட நிலமாகவும் மாற்றப்படுகின்றன. நாடாக இருந்த நிலப் பகுதி காடாகத் தோன்றும்படிக் காட்சியளிக்கின்றன. பகைமக்கள் தங்கள் வாழ்விடங்களை இழத்தலும், வாழ்க்கைக்குரிய உடைமைகளை இழத்தலும், உரிமைகளை, தேவைகளை இழத்தலும் இக்காட்சியின் உள்ளமைவில் அடங்கியுள்ளன.

அனைத்தையும் இழந்த மக்கள் தொடர்ந்து தம் நாட்டில் வாழ இயலாது தவிக்கின்றனர். வாழ்க்கை நடத்துவதற்குரிய பொருள் இன்றித் துன்புறுகின்றனர். தங்களின் வளத்தை இழந்து வறுமையைப் பெறுகின்றனர். வறுமையின் காரணமாக சிலர் பிறர் பொருளைக் கவர்ந்து பிழைக்கும் கள்வர்களாக மாறுகின்றனர். அக்கால அரசர்களின் இத்தகைய அழிவுச் செயல்கள் பகை நிலங்களைப் பாலை நிலமாக்கியதோடு, அங்கு கள்வர்கள் தோன்றுவதற்கும் வழியமைத்துக் கொடுத்தன. இது, போர்க்களங்களால் பாழாக்கப்பட்ட பரந்த இடங்களும் (பறந்தலை) ஊர்களும், மக்களால் கைவிடப்பட்டு, இயற்கை வளமும் குன்றிக் காடாகமாறும் என்று உணரலாம். வளம்மிக்க ஊர்களுக்கு இடையே கல்லும் முள்ளும் நிறைந்த இக்காட்டுப் பகுதியே இடைச் சுரமாகவும் பாலையாகவும் ஆளில் அத்தமாகவும் அமைந்தன என்று தெளியலாம். இத்தகைய வறண்ட நிலப்பகுதியிலும் ஒரு சில மக்கள் வழிப்பறியைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்திருந்தனர் என்றும் தெரிகிறது (கி.பாண்டுரங்கன், 1986:152,153). பொதுவாக பொருள் பற்றாக்குறைவும் இல்லாமையும் திருடி பிழைக்கும் நிலையைத் தோற்றுவிக்கிறது.

இந்நிலையைப் பகைமக்களிடம் பழந்தமிழரசர்கள் தோற்றுவித்தனர். வறுமைக்குள்ளாக்கி, பிறரது பொருளைக் கவர்ந்துண்ணும் நிலைக்கு ஆளாக்கினர். கள்வர் என்பவர் அயல்நாட்டினர் அல்லர். பேரரசர்களின் வறுமையுற்ற குடிகளில் சிலராவர்.

### 2.4.4.1 பாலைநிலங்களில் கள்வர் செயல்

பாலைநில வழியே வருவோரின் பொருள்களைக் கள்வர்கள் கவர்ந்தனர். அவர்களை அச்சுறுத்தியும் கொலை செய்தும் பொருள்களைக் கைப்பற்றினர். மதுரைக்காஞ்சிப் புலவர் இக்கள்வரின் செயலை,

**விளர்ஊன் தின்ற வீங்குசிலை மறவர்**
**மைபடு திண்தோள் மலிர வாட்டி,**
**பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**
**திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த**
**படுபுலாக் கமழும் நாட்பில் துடிஇகுத்து,**
**அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர்,**
**வில்கெழு குறும்பில் கோள்முறை பகுக்கும் (அகம்.89:10–16)**

என்று எடுத்துக்காட்டியுள்ளார். வணிகர்களின் பொருள்களைக் காத்து வந்த வணிக வீரர்களைத் தங்கள் அம்பினால் கொன்று, அவர்களின் பொருள்களைத் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர். பொருள் இல்லாது வந்தால், வந்தவரிடம் பொருள் இல்லையே என்று அவர்களைவிட மாட்டார்கள். அவர்களின் உயிரை விரும்பி நிற்பார்கள். இதனை,

**. . . . . . . . . . . . . . . கடுங்கண் மறவர் தாங்**
**கொள்ளும் பொருளில ராயினுங் வம்பலர்**
**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்**
**(கலி.4:3–5)**

என்னும் பாடல் காட்சிப்படுத்தியுள்ளது.

பொருள் இல்லையென்றால் உயிரைக் கவரும் கள்வர்கள் சில வேளைகளில் உயிரைக் கொல்லாது விடுவதும் உண்டு. ஆனால், அக்கள்வர்களின் தலைவனோ, கொல்லாது விட்டதற்காக அபராதம்

விதிக்கின்றான். களிற்றின் கொம்போடு புலியின் தோலைத் தண்டமாக தன் இளையாரிடமிருந்து பெறுகின்றான். இந்நிகழ்வை,

> **வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்,**
> **கைப்பொருள் இல்லை ஆயினும், மெய்க்கொண்டு**
> **இன்உயிர் செகாஅர் விட்டு அகல் தப்பற்குப்**
> **பெருங்களிற்று மருப்பொடுவரி அதள் இறுக்கும்**
> **அறன் இல் வேந்தன் ஆளும்**
> **வறன்உறு குன்றம்பல விலங்கினவே** (அகம்.109:10-15)

என்று கடுந்தொடைக் காவினார் எடுத்துரைத்துள்ளார். அறநெறி இல்லாத தலைவன் ஆளுகின்ற நிலமாக அந்நிலம் உள்ளது. பொருளுக்காக கொலை செய்யும் கள்வர் வாழுமிடமாக பாலைநிலம் அமைந்திருந்தது.

பாலை நிலங்களில் மட்டுமன்றி, நாட்டிலும் கொள்ளைச் செயல் நடந்துள்ளது. மதுரை நகரில் கள்வர்கள் இருந்ததை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. மதுரையும் எல்லாச் செல்வங்களும் நிறைந்த எழில் நகராகத்தான் திகழ்ந்தது. ஆனால் அந்நகரத்தில் வறுமை காரணமாகத் திருடி பிழைக்கும் கள்வர்களும் இருந்தனர் (சாமி சிதம்பரனார், 2003:127). கள்வர்கள் உருவாவதற்கு வறுமை காரணமாகக் காட்டப்படுகிறது. இக்கள்வரின் தோற்றத்தை, கள்வரைப் பிடிக்கும் காவலரின் தன்மையை மாங்குடி மருதனார் (மதுரை.634-653) விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார்.

பகைவரின் இல்லங்களிலும் கொள்ளையிட்டுள்ளனர். இல்லங்களில் இருந்த உணவுத் தானியங்கள் கொள்ளையிடப்பட்டன. இதனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

> **தொடுதோல் அடியர் துடிபடக் குழீஇ**
> **கொடுவில் எயினர் கொள்ளை உண்ட**
> **உணவுஇல் வறுங்கூடு உள்ளகத்து** (பட்டின.265-267)

எனக் குறிப்பிடுகிறார். திருமாவளவனின் படையெடுப்பிற்குப் பின்னர் பகைநிலத்தின் இல்லங்களில் இருந்த நெற்கூடுகளை எயினர்கள் கொள்ளையிட்டதைக் குறிப்பிட்டுள்ளார். எயினர்கள் கொள்ளை கொண்டு

விட்டதால், உணவின்றி நெற்கூடுகள் வெறுமையாக இருந்தன. இவ்வாறு, இல்லங்களில் உணவு பொருள்களைக் கொள்ளையிடுதலும், நகரில் அணிகலன்களைக் (மதுரை.641) கொள்ளையிடுதலும் நடந்துள்ளன.

### 2.4.4.2 கள்வர் வாழ்க்கை

உயிர் வாழ்க்கைக்குத் தேவையான உணவு உழவுத்தொழில் மூலம் பெறப்படுவதைப் போன்று, கள்வர்கள் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான உணவை, களவுத்தொழில் மூலம் பெற்றனர். உழவுத்தொழில் போன்று களவையே தம் வாழ்வுத் தொழிலாகச் செய்தனர். களவுத் தொழில் செய்யும் இடமாக ஒடுங்காடு என்னும் ஊர் அமைந்திருந்தது (அகம்.91:11-12). நாட்டின் முக்கியத் தொழிலாக உழவுத் தொழில் இருப்பது போன்று களவுத் தொழிலும் அதிக அளவில் இருந்திருக்கலாம்.

தொண்டைமான் நாடு களவுத்தொழில் இல்லாத நாடாகும் என்கிறார் உருத்திரங்கண்ணனார்.

**அத்தம் செல்வோர் அலறத் தாக்கி**
**கைப் பொருள் வௌவும் களவு ஏர்வாழ்க்கைக்**
**கொடியோர் இன்று அவன் கடியுடை வியன்புலம்**
**(பெரும்பாண்.39–41)**

களவினை ஏர்த்தொழில் போன்று வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட கொடுமை உடையவர் இளந்திரையன் நாட்டில் இல்லை என்கிறார். ஐங்குறுநூற்றில், அரசன் ஆதன் அவினி,

**களவு இல்லாகுக (ஐங்.8:2)**

என்று களவு இல்லாமல் நாட்டைப் பாதுகாக்க வேண்டும் என்று வாழ்த்தப்படுகின்றான். இக்கொடிய களவுத்தொழிலைப் பூம்புகாரில் வாழும் வேளாண்குடிமக்கள் நீக்குகின்றனர். இதனை,

**கொலை கடிந்தும் களவு நீக்கியும் (பட்டின.199)**

என்ற வரி குறிப்பிடுகிறது. ஆண்டு வாழும் வேளாளர், தாமும் கொல்லாமை மேற்கொண்டொழுகி மேலும் கொல்லுந் தொழிலுடையார்க்கும் நென் முதலிய

நல்லுணவளித்து அறிவு கொளுத்துமாற்றால், அவர்தம் கொலை களவு முதலிய தீத்தொழிலைத் தவிர்க்கும் சான்றோராவார். ஆகலின், கொலை கடிந்தும் களவு நீக்கியும் என அவர் மேற்றாக்கிக் கூறினார் (பொ.வே. சோமசுந்தரனார், 1971:48) என்று விளக்கப்படுகிறது. இவ்விளக்கத்தின் வழி, உண்ண உணவில்லாது வறுமையுற்று இத்தொழிலைச் செய்பவரின் பசியைப் போக்கி நல்லறிவை உண்டாக்கினர் என்பதை அறிய முடிகிறது.

இவ்வாறு உண்ண உணவில்லாது, வாழ இடமில்லாது வறுமையில் துன்புற்றுக் கள்வனாக மாறி, பாலை நிலத்தை வாழும் இடமாகக் கொள்கின்றான். அவ்வழியே வருபவர் கொண்டுவரும் பொருளைத் தன் வாழ்க்கைக்குரிய பொருளாகவும் கொள்கின்றான். வறண்ட நிலங்கள் உருவாதல் அங்கு கள்வர்கள் வாழ்தல் என இவ்விரண்டும் போரழிவால் உருவான நிகழ்வுகள் எனலாம்.

சங்க காலம் பொற்காலம். அக்காலத்தில் வாழ்ந்த அரசர், குடிமக்கள் என அனைத்து மக்களும் நன்முறையில் வாழ்ந்தனர் என்பன போன்ற கருத்துகள் காணப்படுகின்றன. எனினும் அக்காலத்தில் எவரும் தவறே செய்யவில்லையா? என்ற எதிர் வினாவும் முன்வைக்கப்படுகின்றது. எனவே, முறையற்ற வாழ்க்கை முறை என்னுந் தலைப்பின் கீழ் ஆராய்வதன் மூலம் கிடைக்கப்பெற்ற ஆய்வு முடிவுகள் பின்வருமாறு தொகுத்தளிக்கப்படுகின்றன.

சேர, சோழ, பாண்டியர் என மூன்று பேரரசர்களின் படையெடுப்பிற்குமுன், நாடாக இருந்த நிலம் படையெடுப்பிற்கு பின், காடாக உருக்குலைக்கப்பெற்றன. நரியும், மானும், யானையும், புலியும் சுற்றித் திரியும் இடங்களாக மாறின.

பகை மக்கள் தொடர்ந்து வாழ இயலாமல் தவித்தனர். நாட்டை விட்டு வெளியேறும் வகையில் அழிவுகள் அமைந்திருந்தன. நிலங்கள், வளங்கள், மக்களின் பொருள்கள் சூறையாடப்பட்டன. தோற்ற அரசனின் அரண்மனைச் செல்வங்கள் வென்ற நாடுகளில் குவிக்கப்பட்டன. பகை மக்கள் உயிர்வாழ முடியாது என்று கூறுமளவிற்கு ஊரழிவுகள் ஊக்கமுடன் மேற்கொள்ளப்பட்டன.

பகையரசை எதிர் கொள்ள, தோல்வியுறச் செய்ய துணிவும், வீரமும் தேவைப்பட்டது. இந்தத் துணிவும் வீரமும் சினத்தின் எழுச்சியினால் வீறு கொண்டது. வீரத்திற்கும் வெற்றிக்கும் அடிப்படை பண்பாக சினம் அமைந்தது.

அழிவை உண்டாக்கும் சினத்தை அற ஆட்சிக்குத் தடையாகப் புலவர்கள் குறிப்பிட்டிருந்தாலும் அக்கருத்துக்குச் செவி கொடாதவர்களாக அக்கால அரசர்கள் இருந்தனர். அவர்கள் கொண்டிருந்த சினத்தின் சீற்றத்தை வெளிக்காட்டுவனவாக போரின் பேரழிவுகள் உள்ளன.

# 3. பண்டைத் தமிழர் வாழ்வியலில் வறுமை

மனித வாழ்விற்கு உணவு, உடை, இருப்பிடம் ஆகிய மூன்றும் அடிப்படைத் தேவைகள். இம்மூன்றும் பெறாத, பெற முடியாத நிலையில் உள்ளவன் வறுமை உடையவன் ஆவான். வறுமையில் இருப்பவனை ஏழை என்பர். ஏழ்மை, வறுமை என்னும் சொற்கள் வாழ்வின் துன்பத்தை வெளிப்படுத்துகின்றன. இவை ஒரு பகுதி மனித சமுதாயத்தின் நிரந்தரத் தன்மையாக இருக்கிறது. இந்நிலை அன்றும், இன்றும் மறையாத மறைக்க முடியாத சமூகச்சிக்கலாக உள்ளதைக் காணலாம்.

## 3.1 ஏழ்மையும் ஏழையும்

ஏழ்மை, ஏழை என்பது துன்பத்தை உணர்த்தும் சொற்களாக உள்ளன. பொருள் தரும் முறையில் சில வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. ஏழ்மை, ஏழை, ஏழமை, ஏழைமை, ஏழைமார், ஏழையன், ஏழையாளன் முதலான சொற்கள் வறுமையாகிய துன்பத்தையும், துன்பம் உடையவர்களையும் குறிப்பிடுவனவாக உள்ளன. இன்று வறுமை மற்றும் வறுமை உடையவர் என்ற பொருளில் கையாளப்படுகின்ற இச்சொற்கள் எண்ணிக்கை, அறியாமை, எளிமை, அறிவின்மை, பெண், தரித்திரன், அறிவில்லாதவன் போன்ற பொருள்களிலும் ஆளப்பட்டுள்ளன. எனவே, இதனடிப்படையில் வறுமையைக் குறிப்பிடும் சொற்களின் பொருள்களை ஆராய்வது தேவையாகிறது.

சங்க இலக்கியத்தில் 'ஏழ்' என்பது எண்ணிக்கையைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது. பொருநராற்றுப்படையில் கரிகால் வளவன்,

*ஏழின் கிழவ* **(பொரு.63)**

என்று இசைக்கு உரிமையுடையவனாகப் போற்றப்படுகின்றான். இதில் ஏழ் என்பது குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் இசையின் ஏழுவகை நரம்புகளைக் குறிக்கின்றது. 'ஏழ்மை' என்ற சொல்லில் உள்ள ஏழ் என்பதும் 'ஏழு' என்ற எண்ணிக்கையைத் தருகிறது. ஏழ்மையை,

**ஏழு → ஏழ் + மை**

எனப் பிரித்து, அதற்கு 'ஏழ்மைப் பிறப்புக்குஞ் சேமம் (திவ். திருவாய் 4.6.9) என்பதைச் சான்று காட்டியுள்ளது (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 1997:303). ஏழ்மைக்கு ஏழு என்று பொருள் (செந்தமிழ் அகராதி, 1999:115).

ஏழ்மை என்னும் சொல்லுக்கு மாற்றாக வறுமை என்னும் சொல் அதே பொருளில் ஆளப்பட்டுள்ளது. வறுமையின் பொருள்களாக வற்றிய தன்மை, பொருள் இன்மை, தரித்திரம், ஏழ்மை, வளம் இன்மை . . . (வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி, 2002 :2177) என்பதையும் குறித்துள்ளது. அகராதிகள் ஏழ்மையையும் வறுமையையும் ஒரே பொருளில் குறித்துள்ளன.

சங்க இலக்கியத்தில் ஏழை என்ற சொல்லுக்கு, பேதை (அகம். 195:8), அறியாமை (கலி.55:22) ஆகிய பொருள்கள் உள்ளன. பேதை என்ற பொருள் தரும் வகையில் அகநானூற்றில்,

**இன்நகை முறுவல் ஏழையைப் பல்நாள்**
**கூந்தல் வாரி, நுசுப்பிவர்ந் தோம்பிய**
**நலம்புனை உதவியும் உடையன் மன்னே (அகம்.195:8–10)**

என்ற பாடல் அமைந்துள்ளது. இதில் ஏழையை என்பது பேதையாகிய தலைவியைக் குறிக்கின்றது. ஏழை எனும் சொல் அறிவிலான், பெண் (தேவ. 1171, 2), வறியவன் (சூடா) போன்ற பொருளைத் தருகிறது (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 1997 : 306). .

### 3.1.1 ஒரே பொருள் தருதல்

ஏழமை, ஏழைமை இவ்விரண்டும் ஒரே பொருள் தரும் வகையில் அமைந்துள்ளன. தொல்காப்பியர்,

**இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை**
**என்றிவை யின்மை யென்மனார் புலவர்**
**(தொல்.பொருள்.1223)**

என்றுரைக்கிறார். ஏழைமைக்கு, நுழைந்தவுணர்வினரன்றி வரும் வெண்மையும் என்று பொருள் உரைக்கிறார் பேராசிரியர்.

(அறியாமை பொருளோடு வறுமைப் பொருளிலும் ஏழைமை வந்துள்ளது. ஏழைமைக்கு அறியாமை, வறுமை என்ற பொருளைக் கூறி, அதன் வேர்ச் சொல்லாக, எள் → ஏள் → ஏழை → ஏழைமையைக் (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 1997 : 306) குறிப்பிட்டுள்ளது. ஏழைமைக்கு அறியாமை, வறுமை பொருள்களோடு ஏழைத் தன்மை,சிறியனாந்தன்மை ஆகிய பொருள்களையும் (தமிழ்ச் சொல்லகராதி, 1910:667) தந்துள்ளது.)

### 3.1.2 ஏழையர் பொருள் விளக்கம்

ஏழைமை போன்று ஏழையர் என்ற சொல்லும் பேதையர் (கலி.47:16), தரித்திரர் (நிக.பி.885) ஆகிய பொருளைக் குறிப்பனவாக உள்ளது. சான்றாக, கலித்தொகையில் தலைவனுக்குக் குறை நேர வேண்டும் எனக் கருதிய தோழி, நீ "அருளாயாயின் உயிர் வாழேன்" எனத் தலைவன் உரைப்பான். அதனால் நற்குடிப் பிறந்தார் ஏழையராய் - பேதையராய் இருப்பர் எனப் பலர் அவனைக் கண்டு கூறும் சொல்லால் நினக்குப் பழி வரும். ஆதலால், இந்நிலையை நாம் ஆராய்ந்து பார்த்தல் நன்று என்று தலைவிக்குக் கூறுமிடத்து இப்பொருள் அமையப் பெற்றுள்ளது (கலி.47:16).

இவற்றைத் தவிர பெண்களைக் குறிக்க ஏழைமார் (தமிழ்ச் சொல்லகராதி, 1910:667) என்ற சொல்லும், வறுமையுடையவரைக் குறிக்க ஏழையாளன் (மெய்யப்பன் தமிழ் அகராதி, 2006:243) என்ற சொல்லும் பயன்பாட்டில் இருந்தன. மேற்குறிப்பிட்ட சொற்கள் தற்காலத்தில் உள்ளன. அவை இல்லாமை என்ற பொருளில் வறுமையை உள்ளடக்கியனவாக அமைந்துள்ளன.

### 3.1.3 தொல்காப்பியத்தில் வறுமைப் பொருள்

(தொல்காப்பியமும், சங்க இலக்கியமும் இல்லாமையைக் குறிக்க வறுமை என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளன.)

**இளிவே இழவே அசைவே வறுமையென**
**விளிவில் கொள்கை அழுகை நான்கே (தொல்.பொருள்.1202)**

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்குப் பேராசிரியர் இளிவு, இழவு, அசைவு, வறுமை என்ற இந்நான்கும் பொருள் பற்றித் தோன்றும் அவலம் என்றும் வறுமைக்கு 'போகம் துய்க்கப்பெறாத பற்றுள்ளம் என்றும் உரை வகுத்துள்ளார்

(பேராசிரியர் , 1975:8). போகம் என்பது பெண், ஆடை, அணிகலம், போசனம், தாம்பூலம், பரிமளம், பட்டு, பூஉமளி (சதுரகராதி, 1989:289) ஆகியவற்றைக் குறிப்பனவாகும். மேற்கூறிய சொற்பொருளை ஒப்ப வைத்து எண்ணும்போது, உணவு, உடை, உறையுள் என்னும் மனித வாழ்விற்குரிய அடிப்படைத் தேவைகள் கிடைக்கப் பெறாமையே வறுமை என்பது மிகப் பொருந்துகிறது.

பேராசிரியர் இந்நான்கும் தன்கண் தோன்றினும் பிறர்கண் தோன்றினும் அவலம் என்கிறார். சான்றாக,

**இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை**
**சுவைத்தொ றழுந்தன் மகத்து முகன்நோக்கி**
**நீரோடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்**
**மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ (புறம்.164:4-7)**

என்ற புறநானூற்றுப் பாடலில்,பால் இல்லாமல் அழும் குழந்தையின் அழுகை தன்கண் தோன்றிய வறுமை காரணமான துன்பமாகும். அவ்வாறு பசியால் அழும் குழந்தையின் முகத்தை நோக்கி அழுகின்ற தாயின் அழுகை பிறர்கண் தோன்றிய வறுமை காரணமான துன்பமாகும்.

### 3.1.4 வறுமையை உணர்த்தும் சொற்கள்

சங்க இலக்கியத்தில் வறுமையை உணர்த்தும் பெயர்கள் பல உள்ளன. சான்றாக வறன், வறிய, வறும், வறிமை, வறுங்கை, இன்மை ஆகியவற்றைக் கூறலாம். அவை வறுமை, வறட்சி, வறண்ட, வெறுமை, பொருள் இல்லாத முதலான பொருள்களைத் தருவனவாக அமைந்துள்ளன. சான்றாக,

**நிரயத் தன்னவென் வறன் களைந் தன்றே (புறம்.376:15)**

**நிறுனுற்ற, வராஅப் போலும்**
**வறனொரீஇ (புறம்.382:15-16)**

என்ற புறநானூற்றுப் பாடலில் 'வறன்' என்பது வறுமையைக் குறிக்கிறது.

பொருள் இல்லாமை, வெறுமை ஆகிய பொருள் தரும் வகையில் 'வறும்' எனும் சொல் அமைந்துள்ளது. சான்றாக,

**வறுங் கை வம்பலர்த் தாங்கும் பண்பின் (அகம்.15:6)**

என்ற வரியையும்,

**பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்**
**கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்**
**உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு** (புறம்.160:19-21)

என்ற செய்யுளையும் கூறலாம்.

வறுமையைக் குறிப்பிடும் சொல் வகையில் 'இன்மை' என்ற சொல் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இரவலர்களை ஆற்றுப்படுத்தும் போது, இச்சொல்லாட்சி முக்கியத்துவப் படுத்தப் படுகிறது. 'வறுமையுற்றதால் வள்ளலைத் தேடி வந்த பாணனே என்று வறுமையுற்ற பாணர்களை வள்ளல்களிடம் ஆற்றுப்படுத்தும் போது, முதலில் அவர்களின் வறுமை நிலையை உணர்த்தும் வகையில் 'இன்மை' எனும் சொல் அமைந்துள்ளது. இதனை,

**இன்மை துரப்ப, இசைதர வந்து, நின்**
**வண்மையின் தொடுத்தனம், யாமே** (புறம்.126:17-18)

**இன்மை தீர வேண்டின், எம்மொடு**
**நீயும் வம்மோ? முதுவாய் இரவல!** (புறம்.180:8-9)

என்ற புறநானூற்றுப் பாடல்கள் மூலம் அறியலாம். வறுமையை விரட்ட வள்ளலிடம் அடைக்கலம் தேடும் இரவலரின் துன்பநிலையை, அத்துன்பம் நீக்க முற்படும் முறையை உணர முடிகிறது. இதில் இன்மை என்பது பசியாகிய துன்பத்தை உணர்த்துகிறது. உடல் சுருக்கி அறிவகற்றி மனம் மாளச் செய்யும் பசிநோய்க்கே இன்மைப் பெயர் சாலும் என்ற கருத்து நோக்கத்தக்கது (வ.சுப. மாணிக்கம், 1969:136).

வறுமையைக் குறிப்பதற்கு உலைவு (புறம்.150:4), நல்கூர் (புறம்.196:12), நல்குரவு (புறம்.197:17), ஒற்கம் (புறம்.327:5), இலம்பாடு (புறம்.378 :13), துனிகூர் (சிறுபாண்.397) முதலான சொற்களைச் சங்கப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

குமணின் வள்ளன்மையைக் கண்டு அவனிடம் பரிசில் பெற வரும் பெருஞ்சித்திரனார், தன் பிரிவால் தன் மனைவி படும் துயரத்தை எடுத்துரைக்கிறார். பாலை வழியின் கொடுமையை எண்ணி, தன் கணவனுக்குத்

துன்பம் நேருமோ என வருந்தி நிற்கின்றாள் என்று தன் மனைவியின் துயரத்தை எடுத்துக் கூறுமிடத்து,

**அருந் துயர் உழக்கும் என்பெருந் துன்புறுவி நின்**
**தாள்படு செல்வம் காண்தொறும் மருள** (புறம்.161:14-15)

என்றுரைக்கின்றார். பெரும் துன்பத்தில் வருந்தும் தன் மனைவியின் வறுமைத் துன்பம் குமணன் தரும் பரிசிலால் நீங்கி இன்புறும் தன்மையை எடுத்துரைக்கின்றார். இதில் துன்புறுவி எனும் சொல்லுக்குப் பொருள் காணும் போது, துன்பு என்பது துன்பம், வறுமை ஆகியவற்றைக் குறிக்கும் சொல்லாகக் கொள்ளப்படுகிறது (எஸ்.விசுவநாதன், 1958:97). எனவே, துன்புறுவி என்பது வறுமையைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

இச்சொல்லைப் போன்று சிறுமை என்ற சொல்லும் வறுமையைக் குறிக்கின்றது. புறநானூற்றில் குன்றுகட்பாலியாதனார்,

**என் சிறுமையி னிழித்து நோக்கான்**
**தன் பெருமையின் தகவு நோக்கி** (புறம்.387:20-21)

என்று தன் சிறுமையைக் கண்டு இழிந்து நோக்காது, தன் பெருமையையும் மேம்பாட்டையையும் அறிந்து சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன் பரிசில் நல்குவான் என்றுரைக்கின்றார். சிறுமைக்குத் துன்பம், குறைவு, புன்மை, வறுமை, கொடுமை, அறியாமை முதலான பொருளைக் குறிப்பிட்டு, புறநானூற்று வரியிலுள்ள சிறுமையினால் என்பதற்கு வறுமையினால் என்று பொருள் தரப்பட்டுள்ளது (சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி -III, 1988:57-58). இவ்வகையில் சிறுமை என்ற சொல் வறுமையைக் குறிக்கின்றது எனலாம்.

மேற்குறிப்பிட்ட சொற்களின்றி வேறு பல சொற்களும் வறுமையை உணர்த்துவனவாக உள்ளன. வறுமையைக் குறிக்க இலம்பாடு, ஒற்கம், நல்குரவு என்னும் சொற்களோடு மிடி, கலி, தரித்திரம், நிரப்பு, பிச்சை, இமை, குறுவாழ்வு முதலான சொற்களும் பயன்பாட்டில் இருந்துள்ளன (நாமதீப நிகண்டு, 1985: 186). ஏவல் (வட.நிக.318), நிரப்பு (வட.நிக.979), அல்கல், வீதல் (சதுரகராதி, 1989:255) போன்றவையும் வறுமையைக் குறிப்பனவாக உள்ளன.

இச்சொற்களோடு பிச்சை என்ற சொல்லும் சங்க இலக்கியத்தில் உள்ளது. அச்சொல் குறைவாகவே பயன்படுத்தப்பட்டுள்ளது. சான்றாக,

**ஆசுஇல் தெருவின் நாய்இல் வியன்கடை**
**செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது**
**ஓர்இல் பிச்சை ஆரமாந்தி (குறு.277:1–3)**

என்ற பாடலைக் கூறலாம். வாடைப் பருவம் வருவதை உரைத்தால் ஓரிற் பிச்சை இடுவதாகத் தலைவி உரைக்கும் பாடலில் அறிவர் பிச்சையேற்று வாழ்ந்ததை அறிய முடிகிறது. இத்தொடரின் சிறப்பால் இப்பாடலின் ஆசிரியர் 'ஓரிற்பிச்சையார்' என்று அழைக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

நற்றிணையில், ஊடல் தீர்க்கும் வாயிலாக வந்து நின்ற பாணனின் செயல், பிச்சைக்கு வந்து நிற்கும் யானையின் செயலோடு ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**பிச்சைசூழ் பெருங்களிறு போல, எம்**
**அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற்.300:11–12)**

என்று எடுத்துக்காட்டுகிறது. பெரும்பாணாற்றுப் படையில்,

**பலிபெறு வியன் களம் (பெரும்.233)**

என்ற வரிக்கு நச்சினார்க்கினியர் ஆண்டுறையுந் தெய்வங்கள் பலி பெறுகின்ற அகன்ற களங்களிலே என்று பொருளுரைக்கின்றார் (கலியாண சுந்தரையர், 1986:233). பலி என்பது களப்பிச்சையைக் குறிக்கின்றது. களத்தின் கண் இரவலர்க்குப் பிச்சை வழங்குதல் உழவர்களின் வழக்கம் (பொ.வே.சோமசுந்தரனார்,1971:70). இதில் பிச்சை வழங்குதலை அறிய முடிகிறது.

பாணன் ஒருவன் பிறரிடம் இரந்து பெற்று உண்ணும் உணவினால் இளைத்த மேனியொடு இருந்தமையை,

**தன்ஊர் மன்றத்து என்னன் கொல்லோ?**
**இரந்தூண் நிரம்பா மேனியொடு (குறு.33:2–3)**

என்ற குறுந்தொகைப் பாடல் வழி அறிய முடிகிறது. இப்பாடலில் பிச்சை என்ற சொல் வெளிப்படையாக அமையாவிட்டாலும், பிறரிடமிருந்து இரந்துண்ணும் நிலையை உணரமுடிகிறது.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரனிடம் தமது வருத்தம் மிகுந்த இரந்துண்ணும் வாழ்க்கையை எடுத்துரைக்கிறார். அப்போது,

**ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ**
**ஊழ் இரந்து உண்ணும் உயவல் வாழ்வைப்**
**புரவு எதிர்ந்து கொள்ளும் சான்றோர் யார்? (புறம்.375:6–8)**

என வினவுகிறார். உழுதுண்டு வாழ்வோர் மனையின் கண் புகுந்து, அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் பொருந்திய வாழ்வை உடைய தம்மைப் பாதுகாத்தலைச் செய்பவர்கள் யார் எனக் கேட்டு ஆயிடம் அடைக்கலம் நாடுகிறார்.

### 3.1.5 வறுமையின் இயல்பு

வறுமையுற்றவர் பல இன்னல்களுக்கு ஆளாகின்றனர். நண்பர்கள், உறவினர்கள் இடத்து மதிப்பை இழக்கின்றனர். பிறருக்குப் பயனுள்ளவராக இல்லாது, தான் பிறரை எதிர்பார்த்து வாழும் நிலையில் அமைகின்றனர். இல்வாழ்க்கைக்குரிய பொருள் இல்லாது, துன்பப்படும் நிலைக்கு உள்ளாகின்றனர். பொருள் இன்மையால் பல இழிவுகளுக்கு ஆட்படுகின்றனர். தொல்காப்பியம் வறுமையின் இழிவு நிலையை,

**இன்மையது இளிவும் (தொல்.அக:42)**

என்று பொருளின்மையால் அடையும் இழிவை எடுத்துக்காட்டுகின்றது. அறமும் இன்பமும் பெறுவதற்கு பொருள் வேண்டப்படுகிறது. இதனை, பொருட்பயனைக் கருதியும் இன்ப நுகர்ச்சியை எண்ணியும் தடுமாறும் மாந்தர் தம் உளவியற் பண்பினைப் பொருளீட்டற்குரிய செயலுக்கு அடையாகக் கூறிய சொற்களான் பொருள் செய்வார்க்கும் இன்பம் நுகர்வார்க்கும் புலப்படுத்தியுள்ள திறனை ஓர்ந்து தெளிக என்று விளக்கப்பட்டுள்ளது (ச.பாலசுந்தரம், 1989:95).

இல்வாழ்க்கை நெறிக்கு பொருள் முக்கியத்துவம் ஆகிறது. திருக்குறள்,

**நல்குர வென்னும் மிடும்பையுட் பல்குரைத்**
**துன்பங்கள் சென்று படும்** (குறள்.1045)

என்கிறது. இதில் வறுமை என்று சொல்லப்படும் துன்பத்திற்குள் மற்ற பல வகையான துன்பங்களும் சேர்ந்துவிடும் என்கிறது. வறுமையின் துன்பத்திற்குள் உள்படும் துன்பங்களைப் பரிமேலழகர், துன்பமும் தானும் உடன் நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத்துன்பமடியாகச் செல்வர் கடைநோக்கிச் சேறற் துன்பமும், அவரைக் காண்டற்றுன்பமும், கண்டான் மறுத்துழி நிகழுந்துன்பமும், மாறாவழியும் அவர் கொடுத்து வாங்கற்றுன்பமும், அது கொடுவந்து நுகர்வன கூட்டற்றுன்பமும் முதலாயின நாடொறும் வேறு வேறாக வருதலின் எல்லாத் துன்பங்களும் உளவாமென்றும் கூறினார் என்று வறுமையுற்று துன்பப்படுவர்க்கு வரும் துன்பங்களை வகைபடுத்தப்படுகிறது. (பரிமேலழகருரை, 1965:540-541). வறுமையின் இயல்பாக பல நிலைகளில் துன்புறுதல் அமைகிறது. சான்றாக,

**சுவல் அழுந்தப் பல காய**
**சில் ஓதிப் பல் இளைஞருமே,**
**அடி வருந்த நெடிது ஏறிய**
**கொடி மருங்குல் விறலியருமே** (புறம்.139:1-4)

என்ற மருதனிள நாகனாரின் பாடலையும்,

**அரிசி இன்மையின் ஆர்இடை நீந்தி** (புறம்.371:9)

என்ற கல்லாடனார் பாடலையும் செல்வர்கடை நோக்கிச் செல்லும் இரவலர்களின் துன்பமாகக் கொள்ளலாம்.

பொருள் உள்ளவர்கள் இல்லை என மறுத்தால் அது பொருள் கேட்டவர்களைத் துன்புறச் செய்யும். சான்றாக, ஆவூர் மூலங்கிழார்,

**ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது**
**இல் என மறுத்தலும், இரண்டும், வல்லே**
**இரப்பார் வாட்டம் அன்றியும், புரப்போர்**
**புகழ் குறைபடூஉம் வாயில் அத்தை;**
**அனைத்து ஆகியர், இனி; இதுவே எனைத்தும்**
**சேய்த்துக் காணாது கண்டனம்;** (புறம்.196:4-9)

என்று எடுத்துரைக்கின்றார். புரவலர்கள் இல்லை என மறுக்கும்பொழுது, இரவலர்கள் படும் வேதனையை இப்பாடல்கள் மூலம் உணர முடிகிறது.

பொருள் கேட்டு வருபவரை நேரில் கண்டு பொருள் வழங்க வேண்டும். ஆனால், நேரில் காணாது தந்த பரிசினை ஏற்க மறுக்கின்றார் பெருஞ்சித்திரனார். அதற்குக் காரணமாக,

**காணாது ஈத்த இப்பொருட்கு யான்ஓர்**
**வாணிகப் பரிசிலன் அல்லென்** (புறம்.208:6-7)

என்கிறார். மேலும் அவர், இளவெளிமான் சிறிது கொடுப்ப அதனைக் கொள்ளாது, குமணன்பாற் சென்று பரிசில் பெற்று மீண்டு வந்தவர், உலகில் புரப்போர் நீ ஒருவன் மட்டும் இல்லை பலர் இருக்கின்றனர் என்பதை உணர்த்த,

**இரவலர் புரவலை நீயும் அல்லை;**
**புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;**
**இரவலர் உண்மையும் காண், இனி; இரவலர்க்கு**
**ஈவோர் உண்மையும் காண், இனி; நின் ஊர்க்**
**கடிமரம் வருந்தத் தந்து யாம் பிணித்த**
**நெடுநல் யானை எம் பரிசில்** (புறம்.162:1-6)

என்று எடுத்துரைக்கின்றார். இரப்போர்க்கு ஈந்து பாதுகாப்பாய் நீயும் அல்லை. பொருள் தந்து பாதுகாக்கும் புரப்போர் இரப்போருக்கு இல்லாமல் போய் விடவில்லை. இனி இரப்போர் இருத்தலையும் காண்பாயாக. இனி இரப்போர்க்கு கொடுப்போர் உண்டாதலையும் காண்பாயாக என்ற இவரின் கூற்றின் மூலம் நிறைவான பொருள் பெறுதலை எண்ணி வருந்துவதைக் காணமுடிகிறது.

பெற்ற பரிசிலைத் தம் சுற்றத்தினருக்குத் தந்து மறைத்து கொள்ளாது தாமும் உண்டு, தம் உள்ளம் மலர பிறருக்கு வழங்கியும் வாழ்வர். தம்மை ஆதரிப்பார் தமக்குச் செய்யும் சிறப்பின் பொருட்டு வருந்தும் பரிசில் வாழ்க்கை உடையவரைக் கோவூர்கிழார் குறிப்பிடுகின்றார் (புறம்.47:4-6). இவ்வாறு இரவலர்கள் பொருளைப் பெறுவதற்குப் பலநிலைகளில் துன்புறுவதைக் காணமுடிகிறது.

### 3.1.6 பொருள் இல்லார் அடையும் துன்பங்கள்

ஈதலாகிய அறமும் துய்த்தலாகிய இன்பமும் பொருள் இல்லாதவர்க்கு அரிதாகும். பொருள் இல்லாதவர்கள் ஆற்றமுடியாத செயல்களை, செயலாற்றுவதற்கு வேண்டிய பொருளின் முக்கியத்துவத்தை அகநானூறு எடுத்துக்காட்டுகிறது. வறுமையில் துன்புறுவோர்க்கு வாழக்கையில் இன்பம் இல்லை. தம்மை விரும்பி வாழ்வோரைப் பாதுகாக்க முடியாது. தாம் விரும்பிய சுற்றத்தோடு இன்பம் மிகும்படி மகிழ்ந்திருக்க இயலாது (அகம்.151:1-3) என்கிறது. மேலும், வறியவர்க்கு நண்பர்கள் இல்லை. அவர்களுடைய உறவினர்களின் துன்பத்தை அவர்களால் போக்க முடியாது. பகைவர்களால் இகழப்படுவர். அவ்வறியவர்கள் இவற்றையெல்லாம் கண்டு தாங்கள் வாழும் இடத்தில் நிலைத்து வாழ விரும்ப மாட்டார்கள் என சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன (அகம்.279:1-3).

இவ்வாறு, தாமும் மகிழ்ச்சியில்லாது, பிறரின் துன்பத்தைப் போக்கும் வழியறியாது துன்பப்படும் நிலையை அடைவர். குறுந்தொகை இதனை,

**ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில் (குறு.63:1)**

**இல்லோ னின்பங் காமுற் றாஅங்கு (குறு.120:1)**

என்று எடுத்துரைக்கின்றது. இரவலர்க்குக் கொடுத்தலும், இன்பங்களை அனுபவித்தலும் பொருளில்லாத வறியவர்க்கு இல்லை என்கிறது.

வறுமையால் வருந்துகின்றவரின் வருத்தத்தைப் போக்குகின்ற அருள் உள்ளத்தை உடையவராக ஒருவர் இருந்தாலும் பொருள் இல்லாதவர்க்கு ஈதல் என்பது இயலாதது ஆகும் (அகம்.335:1-3). இக்கருத்தை அடியொற்றித் திருக்குறளும்,

**அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்**
**கிவ்வுலகம் இல்லாகி யாங்கு (குறள்.247)**

என்று இவ்வுலகத்து இன்பங்களுக்குப் பொருள் காரணமாவதை எடுத்துரைக்கிறது.

பொருளின்மையால் விருந்தினரைக் கண்டு விருந்தளிக்க இயலாமல் ஒளியச் செய்யும் தன்மையுடையதாக இல்வாழ்க்கை அமைகிறது. இதனை,

**விருந்து கண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கை (புறம்.266:11)**

என்ற பாடலின் வழி அறிய முடிகிறது. இல்வாழ்க்கைக்குரிய பண்பாக விருந்தோம்பல் அமைகிறது. கலித்தொகையும் இல்லறவாழ்வில் வறுமை உற்றவர்க்கு உதவுதலைச் சிறந்த ஒழுக்கமாகக் காண்கிறது (கலி.133:6). இதன்வழி, வாழ்க்கைக்குரிய அறங்களை, இன்பங்களை அடைய இயலாது வருந்தும் தன்மையைப் பொருளின்மை ஏற்படுத்துகிறது என்பதை அறிய முடிகிறது. இதனைத் திருக்குறள்,

**இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும் (குறள்.1042)**

என்கிறது. பொருளின்மையானது, ஒருவனுக்கு இப்பிறவியிலும் மறுபிறவியிலும் வரக்கூடிய அனைத்து நன்மைகளையும் இல்லாமல் செய்து விடுகிறது.

### 3.2 பசி–துன்பம்

வறுமையை உணர்த்தக் கூடிய சொல் வகையில் பசியைக் குறிப்பிடலாம். வறுமையின் முதல் நிலை பசித் துன்பமாகும். ஒரு வேளை உண்டு மறுவேளை உணவின்றி வறுமையால் வாடும் மக்கள் பலர் உள்ளனர். ஒரு நாடு பலதுறைகளில் வெற்றி கண்டு வளர்ச்சியடைந்திருந்தாலும், அந்நாட்டில் வறுமையானது நீடித்திருந்தால் அதனைச் சிறந்த நாடாகக் கொள்ள முடியாது. ஒரு நாடு சிறந்து விளங்க வேண்டுமென்றால் அந்நாட்டில் பசி, பிணி, பகை ஆகிய மூன்றும் இல்லாதிருக்க வேண்டும், இதனை, வள்ளுவர்,

**உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா தியல்வது நாடு (குறள்.734)**

என்கிறார். நோய், பகை என இவற்றைவிட பசித் துன்பம் மக்களை மிகவும் வருந்தச் செய்யும் என்பதால் உறுபசியை முதலில் கூறியுள்ளது எண்ணத்தக்கது.

### 3.2.1 நற்குணங்கள் நீங்குதல்

பசியாகிய வறுமை நல்ல குணமுள்ளவர்களை அக்குணங்களிலிருந்து நீங்கச் செய்யும் ஆற்றலுடையது. ஒருவரின் குடிச்சிறப்பை, அறிவை, கல்வியை என அவர்க்குரிய சிறப்புகளையெல்லாம் அழித்து விடும் தன்மை வாய்ந்தது. இதனை,

**குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்**
**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்**
**நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்**
**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்**
**பசிப்பிணி என்னும் பாவி (மணி.பாத்.காதை:76-80)**

என்கிறது. இந்தக் கருத்தை அடியொற்றி,

**மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை**
**தானம் தவம் முயற்சி தாளாண்மை தேனின்**
**கசிவந்த சொல்லியர் மேல் காமுறுதல் பத்தும்**
**பசிவந்திடப் பறந்துபோம் (நல்வழி:26)**

என்று பசியினால் ஏற்படும் இழப்புகளைக் குறிப்பிடுகிறது.

வறுமையினால் உண்டாகும் இழப்புகளைப் புறநானூற்றிலும், பெரும்பாணாற்றுப்படையிலும் காணமுடிகிறது. வறுமை பிறருக்கு உதவிசெய்ய முடியாத நிலையை உண்டாக்குகிறது. வறுமையினால் விருந்தினரைப் பேணமுடியாது தவிக்கின்றார் பெருங்குன்றூர் கிழார். இதனை,

**வல்லே களைமதி யத்தை யுள்ளிய**
**விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்**
**பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்**
**அறிவுகெட நின்ற நல்கூர் மையே (புறம்.266:10-13)**

என்று சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியிடம் எடுத்துரைக்கின்றார். இச்செய்யுளுக்கு, கண்டு வைத்தும் அவர்க்கு விருந்தாற்ற மாட்டாமல் ஒளிக்கும் நன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய ஐம்பொறியும் குறைவின்றிப் பொருந்திய எனது யாக்கையின் கட்டோன்றி அவற்றனாய பயன்கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற வறுமையை என்றும்,

பொறிப்புண ருடம்பிற் றோன்றி என்பதற்குப் பாவை போலும் வடிவு மாத்திரையே தோன்றித் தோன்றிய பயன்கொள்ளாமையால் என் அறிவுகெட நின்ற நல்கூர்மையென்றும் விருந்து கண்டொளிக்கும் என்பதற்கு வறுமை கண்டு, வந்த விருந்து தாம் அது காணமாட்டாது ஒளிக்குமென்றும் உரைப்பாரும் உளர் (உ.வே.சாமிநாதையர், 1935:467). அறிவு அழியும்படி, விருந்தினரைப் பாதுகாக்க முடியாத வாழ்க்கையை வறுமை தந்துள்ளதைக் காணமுடிகிறது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை நாடி வரும் நல்லிறையனார், கிணைப் பொருநன் ஒருவன் கூற்றில்,

**பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்**
**குறுநெடுந் துணையொடு கூமை வீதலின்** (புறம்.393:1-2)

என்று வறுமையின் துன்பத்தை எடுத்துரைக்கின்றார். தொடக்கம் முதலே பழகி அறியாத துன்ப வாழ்க்கையில் மனைவியோடு வறுமை துன்புறுத்துவதைக் குறிப்பிடுகின்றார்.

இச்செய்யுளில் பாடவேறுபாடு காணப்படுகிறது. மூலஉரை பாடலில்,

**குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்** (புறம்.393:2)

என்றுள்ளது (உ.வே.சாமிநாதையர், 1935: 621). ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் விளக்க உரையில்,

**குறுநெடுந் துணையொடு கூர்மை வீதலிற்** (புறம். 393:2)

என்று அமைந்துள்ளது. இதில் கூமை என்பது வறுமையைக் குறிப்பதாகும் (சங்கஇலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி-II, 2003:464). கூர்மை என்பது, அறிவின் நுட்பம். சீரிய மதிநுட்பமுடையார்க்கும் வறுமை அந்நுட்பம் மழுங்கச் செய்தலின், கூர்மை வீதலின் என்றார் (ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, பகுதி-II,2002:437). மதிநுட்பம் கெடச் செய்யும் வகையில் வறுமை வருத்தியதை இவரது கூற்றின்வழி அறிய முடிகிறது.

பாதுகாப்பவர் எவரும் இல்லாது பாணனும் அவனது சுற்றத்தினரும் வருந்துகின்றனர். பசியால் வருந்தும் சுற்றத்தினருடன்

பொலிவிழந்த வடிவினையுடைய பாணன் தான் கற்றக் கல்வியை வெறுத்துப் பேசுகின்றான். இதனை,

**கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்**
**புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண (பெரும்.20-21)**

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் எடுத்துரைக்கின்றார். வறுமையானது கல்வியை வெறுக்கச் செய்துள்ளது.

### 3.2.2 நலம் விழைதல்

வறுமை கல்வியை, அறிவைக் கெடச் செய்கிறது. ஒருவரது நல்லியல்பு மாறுவதற்கு வறுமை காரணமாகிறது. சிலவேளைகளில், தீய இயல்புகளைத் தூண்டச் செய்யும் தன்மை வாய்ந்தது. இக்காலத்தில் தீவிரவாதம் உருவாக்கத்திற்கு ஒரு காரணமாக வறுமை கொள்ளப்படுவதும் நோக்கத்தக்கது. வறுமை, தீய செயலுக்குக் காரணமாக அமைகிறது.

சங்க காலத்தில் வறுமையுற்றவரிடம் தீய இயல்புகள் காணப்படவில்லை. அவர்களிடம் பாவளம் இருந்தது. தங்கள் பாக்களின் மூலம் பொருள் பெற்றனரே அன்றி அவர்கள் தீயவற்றை நாடவில்லை. அவர்கள் பசியும் நோயும் இல்லாத நாட்டை விரும்பினர். இதனை,

**பசி இல்லாகுக பிணிசேண் நீங்குக (ஐங்.5:2)**

என்று வாழ்த்தினர். சிலப்பதிகாரமும் மணிமேகலையும் நாட்டில் பசியும் நோயும் பகையும் நீங்கி நாடுவளம் பெற வாழ்த்துகின்றன. சான்றாக,

**பசியும் பிணியும் பகையும் நீங்கி**
**வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி (மணி.விழா.5:70)**

என்று மக்கள் நலமுடன் வாழ விழைகின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் ஆட்சிச் சிறப்பால் பசியும் பிணியும் நீங்கி நாடு பொலிவு பெற்று விளங்கியதை, குமட்டூர்க் கண்ணனார்,

**நோயொடு பசியிகந் தொரீஇ**
**பூத்தன்று பெருமநீ காத்த நாடே (பதிற்.13:27-28)**

என்று எடுத்துக்காட்டுகின்றார். மேலும், அவ்வரசன் பல ஆண்டுகள் மழைமுகில் மழையினைப் பெய்யாது ஒழிந்தாலும் தன்னை அடைந்தவர்க்கு வயிற்றில் பசித்தீ மிக்கெழுமாறு குறைபட கொடுத்தல் இல்லாத தன்மையுடையவன் (பதிற்.20:25-27) என்று குறிப்பிடுகின்றார். மாங்குடி மருதனாரும்,

**நோய் இகந்து நோக்கு விளங்க (மதுரை.13)**

என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் மக்கள் பசியும் பிணியும் நீங்கி பொலிவுற்று வாழ்ந்ததைக் குறிப்பிடுகின்றார்.

### 3.2.3 பசிநோய்

பசியும் நோயும் என தனித்தனியாக கூறப்பட்ட முறைமாறி, பசியை நோயாகப் பார்க்கும் தன்மை உருவானது. மக்களைத் துன்புறுத்தும் நோயாக பசி இருந்தது. நோய் தீர்வதற்கு மருந்து அமைவது போன்று பசி தீர்வதற்கு உணவு அமைந்தது. பசியை நோயாகவும் உணவை மருந்தாகவும் நோக்கினர். பசிநோய் தீர்ப்பவர்கள் மருத்துவர்களாகக் கருதப்பட்டனர். சான்றாக, பசி நோய் தீர்க்கும் மருத்துவனாக சிறுகுடிகிழான் பண்ணன் குறிப்பிடப்படுகின்றான். அவனை, பசிப்பிணி மருத்துவன் (புறம்.173:11) என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாராட்டுகின்றான். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை,

**இருமருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன் (புறம்.70:9)**

என்று கோவூர் கிழார் சிறப்பிக்கின்றார். இங்கு இருமருந்தாக சோற்றையும் தண்ணீரையும் குறிப்பிடுகின்றார். மேலும், பசியாகிய வறுமையைக் கடப்பதற்குரிய தெப்பமாக ஓய்மான் நல்லியக் கோடன் இருந்தான் (புறம்.376:18) என்று புறத்திணை நன்னாகனார் எடுத்துரைக்கின்றார்.

இவ்வாறு பசியாகிய நோயை இப்புரவலர்கள் போக்கினர் என்றாலும், நோயானது உடலையும் உள்ளத்தையும் வருத்துவதோடு சிலவேளைகளில் உயிரையும் பறித்துக்கொள்ளும் ஆற்றல் வாய்ந்தது. அதனைப் போன்று பசியானது அவர்களது உடலை, உள்ளத்தைப் பெருமளவில் வருத்தியிருப்பதைக் காணமுடிகிறது. நோய் தீர்க்கும் மருத்துவர்கள் போன்று

பசியைப் போக்கும் மருத்துவர்களாக இப்புரவலர்கள் செயல்பட்டுள்ளனர் என்றாலும், பசியை ஒரு நோயாக காண்கின்ற சமுதாயமாக பழந்தமிழ்ச் சமுதாயம் இருந்தது.

### 3.2.4 பசிப்பகை

ஒரு நாட்டை அச்சுறுத்துவது பகையாகும். ஒன்று உள்நாட்டுப் பகை. மற்றொன்று வெளிநாட்டுப்பகை. ஆனால், மக்கள், வாழ்க்கையில் பகை ஒன்று இருந்தது. அது பசி என்னும் பகை. இதனைத் துறையூர் ஓடைகிழார்,

**உண்ணாமையின் ஊன் வாடி,**
**தெண் நீரின் கண்மல்கி,**
**கசிவுற்ற என்பல் கிளையொடு**
**பசி அலைக்கும் பகை ஒன்று என்கோ?** (புறம்.136:6-9)

என்று பசி என்னும் பகை ஏற்படுத்தும் வருத்தத்தை எடுத்துரைக்கின்றார். உணவின்றி, உடலைத் தளர செய்து, அழச் செய்து, வியர்ப்பை உண்டாக்கி பசி, பகையாக இருந்து வருத்தும் தன்மையைக் குறிப்பிடுகின்றார்.

பசி என்னும் பகையிடமிருந்து இரவலர்களைப் புரவலர்கள் காப்பாற்றினர். அவர்களின் பசிப்பகையை அழித்தனர். சான்றாக, ஈர்ந்தூர்கிழான் தோயன் மாறன் பாணரின் பசியைப் போக்கும் பகைவனாக இருந்தான். அவனை,

. . . . . . . . . **பாண் பசிப் பகைஞன்** (புறம். 180:7)

என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாராட்டுகின்றார். கோப்பெருஞ் சோழனும்,

. . . . . . . . . . . . . . . . . . . **பாணர்**
**பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்**
**கோழி யோனே கோப்பெருஞ் சோழன்** (புறம்.212:6-8)

என்று பசித் தீர்க்கும் பண்புடையவனாக பிசிராந்தையாரால் போற்றப்படுகின்றான்.

சோழன் நலங்கிள்ளியும் தன்னை வருத்தக் கருதும் பகையைப் போக்குவதுடன், தன்னைச் சேர்ந்தோருடைய பசியாகிய பகையையும்

போக்குவதில் வல்லவனாக இருக்கின்றான் (புறம்.400:16-17). புரவலர்கள் இரவலர்களின் பசிப்பகையைத் தம் பரிசில்கள் மூலம் நீக்கினர். பசிக்குப் பகையாக அவர்களின் பரிசில்கள் அமைந்திருந்தன. சான்றாக, சிறுகருந்தும்பியார் பாணனை, வல்லார்கிழான் பண்ணனிடத்து ஆற்றுப்படுத்தும் போது,

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . **நின்**

**பசிப் பகைப் பரிசில் காட்டினை கொளற்கே (புறம்.181:9–10)**

என்று பசிக்குப் பகையாகிய பரிசிலைப் பெற்று வறுமையைப் போக்கிக் கொள்ளுமாறு கூறுகிறார். இவ்வாறு, பழந்தமிழரைத் துன்புறுத்திய பசி என்னும் பகை நோயை நீக்கி புரவலர்கள் அவர்களைக் காப்பாற்றியதை இச்சான்றுகளின் வழி அறியமுடிகிறது.

### 3.2.5 பசி வருத்தம்

உணவு உண்பதற்கான உணர்வை விருப்பத்தைப் பசி தூண்டும். பசி என்பதன் பொருளாக, பசி என்பது வயிற்றில் உண்டாகும் ஒருவிதத் துன்ப உணர்ச்சி. இந்த உணர்ச்சி உண்டாகும் போது உடம்பில் சோர்வு, தூக்கச் சடைவு, தலைவலி, கோப உணர்ச்சி, அமைதியின்மை முதலியன உண்டாகலாம். இரைப்பை காலியாகும் போது அது சுருங்குகிறது. அப்போது பசித் துன்பம் தோன்றுகிறது (கலைக் களஞ்சியம், தொகுதி-ஆறு, 1959:640). இது உணவு, வேட்கை, வறுமை, தீ என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது (தமிழ் தமிழ் அகரமுதலி, 1985:701). பசியால் வயிறும் (புறம்.260:6), குடலும் (புறம்.160:6) வாடித் துன்பப்படும் இரவலரின் வறுமையைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் ஈகைப் பண்பாக, தன்னைத் தேடி வந்தவர்க்குப் பசியானது மீண்டும் தோன்றாதவாறு மிகுதியாகக் கொடுக்கும் இயல்புடையவன் என்று பதிற்றுப்பத்து போற்றுகின்றது. அவன் செயலை,

**வயிறு பசி கூர ஈயலன் (பதிற்.20:26)**

என்று குமட்டூர்க் கண்ணனார் பாராட்டுகின்றார். இங்கு வயிறு பசி கூர என்பதற்கு, பசித்தீ மிக்கெழுமாறு என பொருள் கூறப்பட்டுள்ளது

(ஔவை சு. துரைசாமிப்பிள்ளை,1958:62). பசி, தீயின் செயலோடு ஒப்பிடப்படுகிறது. மணிமேகலையும்,

**பசிப்பிணி யென ஒருபாவி (மணி.11:80–81)**

என்று பசியைப் பாவியாக குறிப்பிடுகின்றது. இவ்வாறு உணவின்றி வயிறும் குடலும் வாடும் வகையில் பசியின் கொடுமை இருந்ததைக் காணமுடிகிறது.

### 3.2.6 பசியின் நிலைகள்

சங்க இலக்கியத்தில் பசி பலவகைகளில் குறிக்கப் பெற்றுள்ளது. சான்றாக,

**பழம்பசி கூர்ந்தஎம் இரும்பேர் ஒக்கல் (பெரும்.25)**

**தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை (பெரும்.253)**

**ஆடுபசி உழந்தநின் இரும்பேர் ஒக்கலொடு**
**நீடுபசி ஒராஅல் வேண்டின், நீடுஇன்று**
**எழுமதி, வாழி, ஏழின் கிழவ! (பொரு.61–63)**

போன்ற பாடல்களில் காணமுடிகிறது. இவற்றில் பழம்பசி, தொல்பசி, நீடுபசி போன்றவை தொன்றுதொட்டு வந்த பசியினைக் குறிக்கின்றது. இதில் தொல்பசி என்பதற்கு, இச்சொல் ஆழ்ந்த பொருளுடையது. நமக்குப் பசிவந்தால் அது தீரும் படியாக-தீரும்வரை உணவு கொள்வோம். பசி முழுதும் நீங்கிவிடும். ஆயின் கவிஞன், அவன் சுற்றத்தார் அவர்களின் பசி பல்லாண்டு காலமாக வேளைக்கு வேளை பாதிப்பங்கு அறுபது விழுக்காடு தீர்வதே அருமை என்ற நிலை. அவர்களது பசி இத்தனை காலமாக முழுவதும் தீராமல் சேமிக்கப்பட்டு வந்திருக்கிறது. இதுவே, தொல்பசி, தொன்மைக்காலமாக அருஞ்சொத்து போலச் சேர்க்கப்பட்ட தொடர்பசி, தீராப்பசி என்றுரைக்கப்படுகிறது (அ.வெ.சுப்பிரமணியன், 1990:26).

உடல் துன்புற்று ஒடுங்குவதற்குக் காரணமான பசி ஒல்குபசி (சிறுபாண்.135) என்றும், அறிவு முதலானவற்றை அழிக்கும் பசி அழிபசி (சிறுபாண்.140) என்றும் குறிக்கப்பெறுகின்றன.

காய்பசி என்பது மிகுந்த பசியாக (பெரும்பாண்.365), சுடுகின்ற பசியாக (புறம்.150:14) குறிக்கப் பெறுகின்றது. கடும்பசி (புறம். 68:2) என்பது மிகுதியான பசியை உணர்த்துகின்றது. உடல் மெலிந்து கெடுவதற்குக் காரணமான பசி தேம்புபசி (புறம்.164:2) என்று புறநானூறு குறிக்கின்றது. இதன்வழி, உடலைத் துன்புறுத்தி மெலியச் செய்யும், வாழ்வின் நிலை அழிக்கும் பசியின் கொடுமையை உணரமுடிகிறது.

## 3.3 மக்களும் வறுமையும்

பொருள் வளம் கொண்ட செல்வந்தர் ஒருபுறம், அவ்வளம் இல்லாது வறியோர் மறுபுறம் என இரு அமைவுகள் சங்கச் சமூகத்தில் நிலவின. கலைஞர்களும், கவிஞர்களும் வறுமையில் வாடினர். அவர்களின் குடும்பங்கள் உண்ண உணவின்றித் தவித்தன. தாயும் மனைவியும், குழந்தையும் என குடும்பத்தில் உள்ள அனைவரும் பசியால் வருந்தினர். அவர்களின் வறுமை நிலையைப் புறநானூறும், ஆற்றுப்படை நூல்களும் வெளிப்படையாக எடுத்துக் கூறியுள்ளன.

### 3.3.1 புலவர் வறுமை

இளையோர் முதல் முதியோர் வரை பசியால் துன்புற்றனர். பால் இல்லாது அழும் குழந்தை, சோறு இல்லாது வருந்தும் மனைவி, வறுமையால் தொடர்ந்து வாழ்வதை வெறுக்கும் தாய் என ஒரு குடும்பமே வறிய நிலையில் தவித்தது.

தனியாக நடக்க இயலாது, தடியைக் காலாகக் கொண்டு மெதுவாக சிறுக அடியிட்டு நடப்பவள். நரைத்த மயிரை உடையவள். கண்பார்வை மறைந்து முற்றத்தில் இருந்து புறப்பட இயலாத நிலையில் உள்ளவள். இத்தகைய முதுமையுடைய தாயானவள் வாழ்வதில் விருப்பம் இல்லாது வருந்துகின்றாள்.

குழந்தையின் உணவாகிய பால் தன்னிடமில்லாது, மனம் வருந்தி நிற்கின்றாள் அக்குழந்தையின் தாய். சோறாகிய உணவு இல்லாததால் கீரையை வேகவைக்கின்றாள். வீட்டில் உப்பும் இல்லாத நிலையில் வெறும் இலையைச் சமைத்து உண்டு வாழ்கிறாள். அழுக்குடன் கூடிய உடையுடன் இருக்கின்றாள். இத்தகைய குடும்பத்தின் தலைவராகப் பெருஞ்சித்திரனார் காணப்படுகின்றார்.

ஈன்ற தாயின், மனைவியின், குழந்தையின் பசியைப் பொறுக்க முடியாது மனம் வேதனைப் படுகின்றார். தன்னுடைய குடும்ப வறுமையை,

> ***வாழு நாளோ டியாண்டுபல வுண்மையின்***
> ***தீர்தல்செல் லாதென் னுயிரெனப் பலபுலந்து***
> ***கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி***
> ***நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்டுயின்று***
> ***முன்றிற் போகா முதர்வினள் யாயும்***
> ***பசந்த மேனியொடு படரட வருந்தி***
> ***மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள்***
> ***பிசைந் துதின வாடிய முலையள் பெரிதழிந்து***
> ***குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த***
> ***முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று***
> ***நீருலை யாக வேற்றி மோரின்***
> ***றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து***
> ***மாசொடு குறைந்த வுடுக்கையள்*** **(புறம்.159:1–13)**

என்று வரிசைப் படுத்திக் காட்டுகின்றார். துன்புறும் தன் குடும்ப நிலையைக் காட்டிய பெருஞ்சித்திரனார் உணவில்லாது உடம்புபடும் வேதனையையும் எடுத்துக்காட்டியுள்ளார். இதனை,

> ***பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை***
> ***அவிழ்புகு வறியா தாகலின் வாடிய***
> ***நெறிகொள் வரிக்குடர்*** **(புறம்.160:4–6)**

என்று பசித்தின்னப்பட்டு உலர்ந்த வேர்ப்புடைய உடம்பு, சோற்றை அறியாததால் வாட்டமுற்று உள்ளதைக் குறிப்பிடுகின்றார்.

பெருஞ்சித்திரனாரின் இல்லம் உணவுப் பொருள் எதுவும் இல்லாததாக கிடக்கின்றது. அந்நிலையை இகழ்ந்து உறைபவனாக அவரது புதல்வன் அமைகின்றான். பால் இல்லாததால் கூழையும் சோற்றையும் வேண்டி சோறு சமைக்கும் பாத்திரத்தைத் திறந்து பார்க்கின்றான். அங்கே உணவைக் காணாது அழுகின்றான். அவனது அழுகையை நிறுத்த மறப்புலி வருகிறது என்று

சொல்லியும், நிலாவைக் காட்டியும் அழுகையைத் தணிக்க இயலாது அப்பிள்ளையின் தாய் வருந்துகின்றாள் (புறம்.60). பெருஞ்சித்திரனாரின் வறுமையின் வேதனையை, உணவிற்காக மனம் வருந்தும் தவிப்பைக் காணமுடிகிறது.

பெருந்தலைச் சாத்தனாரின் இல்லம் மிகவும் வேதனைத் தருவதாக உள்ளது. சமைத்தல் என்பதை மறந்த இல்லமாக அவருடைய இல்லம் உள்ளது. சமைக்காத அடுப்பில் காளான் பூத்துள்ளது. இதனை,

**ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்**
**ஆம்பி பூப்ப (புறம்.164:1-2)**

என்ற வரிகளால் அறிய முடிகிறது. மேலும், அடுப்பு எரியவில்லை, உணவு சமைக்கவில்லை என்று நேரடியாக சொல்லாமல், அடுப்பில் காளான் பூத்துள்ளது என்று குறிப்பாக தம் வறுமையை உணர்த்துகின்றார்.

குழந்தை பால் இல்லாது அழுகின்றது. அழுகின்ற அக்குழந்தையின் முகத்தைப் பார்த்து பெருந்தலைச் சாத்தனாரின் மனைவி அழுகின்றாள். அவ்வருத்தத்தை,

**. . . . . . . . . . . . . தேம்பு பசி உழவா,**
**பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி,**
**இல்லி தூர்ந்த பொல்லா வறு முலை**
**சுவைத் தொறு அழூஉம் தன்மகத்து முகம் நோக்கி,**
**நீரொடு நிறைந்த ஈர்இதழ் மழைக்கண் என்**
**மனையோள் எவ்வம் நோக்கி, நினைஇ**
**நிற் படர்ந்திசினே (புறம்.164:2-8)**

என்று எடுத்துரைக்கின்றார். பால் இல்லாததால் உடல் மெலிந்து பசியால் வருந்தும் குழந்தையின் அழுகையும், பசியால் அழும் அக்குழந்தையின் முகத்தைப் பார்த்து நீர் நிரம்பிய கண்களொடு அழும் தாயின் அழுகையும் அக்குடும்பத்தின் வேதனையை விளக்கிக் காட்டுகின்றன. மேலும், இதில், நினைஇ நிற்படர்ந்திசினே என்பதற்கு, பெற்ற சேய்க்குப் பயன்படாது பாலின்மையால் மிக்க மன நோயைத் தருதல் பற்றி, சேய் துயரும், தாய் துயரும் கண்ட யான் வேறொருவரையும் நினையாது நின்னையே நினைந்தேன் என்பார் என்று

பொருள் கூறப்படுகிறது. (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பகுதி-I, 2002 : 352). இதன் மூலம் தன் குழந்தையின், தன் மனைவியின், பசி வருத்தத்தைக் கண்டு வருந்தும் தந்தையின் கணவனின் குடும்பத் தலைவனின் வருத்தத்தை அவரது பாடலில் காணமுடிகிறது.

பெருந்தலைச் சாத்தனார் போன்று பெருங்குன்றூர் கிழாரும் தம் குடும்பத்தின் வறுமை நிலையை,

**. . . . . . . . . . . . . . . . வைகலும்**
**வல்சி யின்மையின் வயின்வயின் மாறி**
**இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்**
**பா அலின்மையிற் பல்பாடு சுவைத்து**
**முலைக் கோண் மறந்த புதல்வனொடு**
**மனைத் தொலைந் திருந்த** (புறம்.211:17–22)

என்ற பாடலின் மூலம் எடுத்துரைக்கின்றார். இதில் வைகலும் வல்சியின்மையின் என்பது நாள்தோறும் உணவில்லாத வெறுமை நிலையைக் குறிக்கின்றது. உணவில்லாத அவ்வீட்டில் ஒவ்வோர் இடத்திலும் மாறி மாறித் தோண்டி ஒன்றும் இல்லாததால் பசியால் இல்லெலிகள் மடிந்து கிடக்கின்றன. அவை மடிந்து கிடக்கும் பழைய சுவர்களையுடைய வீட்டில், பால் இல்லாமையால் உண்ணுதலை வெறுத்த பிள்ளையுடன் தன் மனைவி வருந்தியிருக்கும் நிலை கண்டு பெருங்குன்றூர் கிழாரும் வருந்தி நிற்கின்றார்.

இவ்வாறு பெருஞ்சித்திரனாரும் பெருந்தலைச் சாத்தனாரும் பெருங்குன்றூர் கிழாரும் தத்தம் குடும்பத்தின் இல்லாமையாகிய வறுமை நிலையினைக் கேட்பவர் உள்ளம் இரங்கும்படி எடுத்துரைத்ததை இதன் வழி அறிய முடிகிறது.

### 3.3.2 கலைஞர் வறுமை

புலவர்கள் தங்கள் வறுமையை எடுத்துக் கூறியதைப் போன்று கலைஞர்களும் தங்கள் வறுமையைக் கூறி பரிசிலரிடம் வேண்டுவதை ஆற்றுப்படை நூல்களில் காணமுடிகிறது. சான்றாக, சிறுபாணன் ஒருவன் வறுமையில் எய்தும் கலக்கத்தை நல்லூர் நத்தத்தனார்,

. . . . . . . . . . . . . . . . . இந்நா
டிறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்த னோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில்
காழ்சேர் முதுசுவர்க் கணச்சித லரித்த
பூழிபூத்த புழற்கா ளாம்பி
யொல்குபசி யுழந்த லொடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணி கடையடைத்
திரும்பே ரொக்கலொ ருங்குடன் மிசையு
மழிபசி வருத்தம் வீட (சிறுபாண்.129-140)

என்று எடுத்துரைக்கின்றார். வீட்டில் உணவுப் பொருள் ஏதும் இல்லை. தொடர்ந்து சமைத்தல் என்பது நடைபெறாத வீடாக சிறுபாணனுடைய வீடு இருக்கின்றது. சமைக்கும் இடமான அடுக்களையும் அடுப்பும் பாழ்பட்டுக் கிடக்கின்றது.

அண்மையில் குட்டிகளை ஈன்ற நாய் தன் குட்டிகளுக்குப் பாலூட்ட தன்னிடம் பாலில்லாததால் குரைக்கின்றது. நாய்க்குட்டிகளும் குடிப்பதற்குத் தாயிடம் பால் இல்லாது தவிக்கின்றன. அப்பாணனின் வீட்டில் பழைய சுவர்களைக் கறையான் அரித்துக் கிடக்கின்றது. கறையான் அரித்துச் சேர்த்த புழுதியிடத்துக் காளான் பூத்திருக்கிறது. காளான் பூத்து விளங்கும் அட்டிலாக இருக்கிறது. இது சிறுபாணன் வீட்டில் உள்ள அடுக்களையில் தோன்றும் காட்சி. அடுக்களையில் இடையறாது தீ எரிந்தால் காளான் தோன்றாது. சமையல் நடைபெறாத வறுமையுற்ற இல்லமாக இருக்கின்றது.

இத்தகைய வறுமையுற்ற இல்லத்தில் உள்ள கிணைமகள் பசியினால் உடல் இளைத்துக் காணப்படுகின்றாள். கடுமையான பசி வருத்த, குப்பையில் இருந்த வேளைக் கீரையைச் சமைக்கின்றாள். சுவை பயப்பதற்கு இடும் உப்பும் இல்லாத வறுமை நிலையில் அவள் வீடு உள்ளது. உப்பின்றி உணவாக சமைத்தக் கீரையை உண்டால் பிறர் ஏளனம் செய்வர் என்று நாணி வாயிற்கதவை அடைத்துச் சுற்றத்தோடு பகிர்ந்து உண்ணும் இயல்புடையதாக பாணனின் வீடு அமைகின்றது.

குட்டிகளை ஈன்ற நாய் உணவு ஒன்றுமில்லாது பசியால் குரைக்கும் நிலை, கறையானும் காளானும் சேர்ந்து வாழும் நிலை, பசியால் உடல் இளைத்து மனைவி துன்புறும் நிலை என இவற்றைக் காணும்போது சிறுபாணனுடைய வாழ்க்கையில் வறுமை மிகக் கொடியதாக இருந்துள்ளதை உணரமுடிகிறது. இவ்வாறு சிறுபாணன் வறுமையில் ஆட்பட்டதை, இந்நூல் ஆசிரியர் வளர்ச்சி குன்றி வளமிழந்து கிடந்த தமிழகத்தை இங்குக் காட்டுகின்றார். . . . . . . . . வாழ்வு தேடி வரும் பாணன் மூவேந்தர்களையும் நாடிப் பரிசில் பெறாது, கடையெழு வள்ளல்களையும் நினைந்து, அவர்களும் மறைந்து விட்டமையால் வருந்தி, முடிவில் தொண்டை நாட்டில் ஒரு பகுதியில் அரசாண்ட நல்லியக் கோடனிடம் சென்று பரிசில் பெறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. வளமான தமிழகம் ஏறக்குறைய கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் வறுமையின் எல்லையை நோக்கிச் செல்லத் தொடங்கி விட்ட கொடுமையை இவ்வாற்றுப்படையில் காண்கிறோம் (சி.ஈ. இராமச்சந்திரன்,1977:43). இந்தக் கருத்து மனத்தில் கொள்ளத்தக்கது என்றாலும், கடையெழு வள்ளல் மறைந்து விட்டதால் இவ்வள்ளலிடம் வரும் பாணனின் வறுமை நிலையைப் போன்று புறநானூற்றில் வள்ளல் குமணனை நாடிச் செல்லும் பெருந்தலைச் சாத்தனாரும் தன் வீட்டில் சமைக்காத அடுப்பில் காளான் பூத்துள்ளதைக் கூறியுள்ளதும் இங்குக் கருதத்தக்கது

பாதுகாக்கும் புரவலர் எவரும் இல்லாது, பட்டினியோடு மரத்தடியில் தங்கி வருந்தியுள்ளனர். உண்ண உணவும், இருக்க இடமும் இல்லாது வருந்தும் நிலையை,

> **அகன்தலை வையத்துப் புரவலர்க் காணாது,**
> **மரந்தலைச் சேர்ந்து, பட்டினி வைகி (புறம்.371:1–2)**

என்று கல்லாடனார் எடுத்துரைக்கின்றார்.

### 3.3.2.1 இரவலர் சுற்றம்

பிறரிடம் ஒரு பொருளை வேண்டி நிற்கும் இரவலர்களின் உறவினர்கள் வறுமையில் வாடினர். பசியால் துவண்டனர். இரவலர்களும் அவர் தம் சுற்றத்தினரும் பசித் துன்பத்தை நீக்க புரப்போரை நாடினர். இரவலர்கள்

புரவலர்களிடம் தம் வறுமைத் துன்பம் நீங்குவதோடு, தம்முடைய சுற்றத்தினர் துன்பமும் நீங்க வேண்டுகின்றனர்.

இரவலர்களின் சுற்றத்தினர் ஒக்கல் (புறம்.69), கடும்பு (புறம்.68), கிளை (புறம்.136) என பலவாறு அழைக்கப்பட்டனர். அவர்களின் பசித்துன்பம் பலநிலைகளில் அவர்களை வருத்தின. பாணர்களும் பொருநர்களும் தங்களின் சுற்றத்தினரின் வறுமைத் துன்பத்தைக் குறிப்பிட்டுப் பரிசிலுக்கு விழைந்தனர். அவ்வாறு விழையும் போது, தம் உறவினரின் உடல் மெலிவை எடுத்துக்காட்டினர். சான்றாக கோவூர் கிழார்,

**உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்**
**கடும்பின் . . . . . . . . . . . . . . (புறம்.68:1–2)**

என்று உரித்த உடும்பினைப் போன்று தம் சுற்றத்தினரின் விலாப்புறத்து எலும்புகள் எழுந்து தோன்றுவதைக் குறிப்பிடுகின்றார். மேலும் இச்சுற்றத்தின் பசியைத் தீர்ப்பவரைக் காணாமையால், சிலரால் மட்டும் அறியப்படும் யாழை, பாணன் மனம் வெறுத்துக் கூறுகிறான். இதனை,

**கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது**
**சில்செவித் தாகிய கேள்வி நொந்து நொந்**
**தீங்கெவன் செய்தியோ பாண (புறம்.68:2–4)**

என்று பாணன் ஒருவனுக்குக் கூறும் முறையில் கோவூர் கிழார் எடுத்து கூறுகின்றார்.

ஆலத்தூர் கிழார், பாணரின் சுற்றத்தைச் சோம்பலினால் ஊக்கமில்லாதவன் உடலைப் போன்று பொலிவிழந்த சுற்றமாகக் குறிப்பிடுகின்றார். இதனை,

**பூட்கை இல்லோன் யாக்கை போலப்**
**பெரும் புல்லென்ற இரும்பேர் ஒக்கலை**
**வையகம் முழுதுடன் வளைஇ பைஎன**
**என்னை வினவுதி ஆயின் (புறம்.69:5–8)**

என்று இச்சுற்றத்தோடு உலகம் முழுதும் திரிந்த பின், வறுமை தீர்ப்பார் யாரென வினவும் பாணனின் துன்பநிலையை எடுத்துக் காட்டுகின்றார்.

பாணரது சுற்றம் உணவு உண்ணாததால் உடல்வாடி, கண் நீரால் நிறைந்து, வியர்ப்புற்றுப் பசியால் வருந்தும் நிலையை துறையூர் ஓடைகிழார்,

**உண்ணாமையின் ஊன் வாடி,**
**தெண் நீரின் கண் மல்கி**
**கசிவுற்ற என் பல் கிளையொடு** **(புறம்.136:6–8)**

என்று விளக்குகின்றார். ஊன்பொதி பசுங்குடையார் இரவலனின் சுற்றத்தினர் உணவு கிடைக்கப் பெறாததால் மேற்கொள்ளும் செயலினை,

. . . . . . . . . . . . . . . . . . . . . . .
**நாளும் போழும் செய்து உண்டு, ஓராங்குப்**
**பசி தினத் திரங்கிய இரும்பேர் ஒக்கற்** **(புறம்.370:1–3)**

என்று குறிப்பிடுகின்றார். சுற்றத்தினர் மரங்களின் நாரினையும் பனங் குருத்தினையும் உணவாக உண்டு, பசித் தின்னலால் வருத்தமுற்றவராக இருந்தனர். இத்தகைய சுற்றத்தினர் நிலையை அறிந்து, நாற்றிசையும் தேடி, உடலில் வியர்வை ஒழுக அலைந்து, புலர்ந்து, வயிறுஒட்டி வாடி வந்ததை,

**ஆர்பதம் கண்ணென மாதிரம் துழைஇ,**
**வேர் உழந்து உலறி, மருங்கு செத்து ஒழிய வந்து**
**(புறம். 370:4–5)**

என்ற பாடலின் மூலம் அறிய முடிகிறது. சுற்றத்தார்க்கு உணவு வேண்டி அலைந்து திரியும் நிலை மூலம் அவர்களின் பசியின் கொடுமையை உணர முடிகிறது.

### 3.3.2.2 சுற்றத்தினர் வருத்தம்

புரவலர்களை நாடிச் செல்லும் இரவலர்கள் தம் வறிய நிலையினை அவர்களுக்கு எடுத்துச் சொல்லும் போது, தம் சுற்றத்தின் துயர் நிலையைக் கேட்பவர் மனம் நெகிழும்படி கூறியுள்ளனர். சான்றாக,

*காறென் ஒக்கல் கடும்பசி, இரவல!* *(புறம்.141:6)*

*. . . . . . . . . . . . . . . என்,*
*பசிதினத் திரங்கிய ஒக்கலும்* *(புறம்.159:20–21)*

*இலம்பாடு உழந்த என்இரும்பேர் ஒக்கல்* *(புறம்.378:13)*

*பசித்த ஒக்கல் பழங்கண் வீட*
*வீறுசால் நன்கலம் நல்குமதி, பெரும!* *(புறம்.389:14–15)*

*இரும்பேர் ஒக்கல் பெரும்புலம்பு அகற்ற* *(புறம். 390:20)*

*ஈங்குவந்து இறுத்தஎன் இரும்பேர் ஒக்கல்* *(புறம்.391:8)*

*ஈர்ங்கை மறந்தஎன் இரும்பேர் ஒக்கல்*
*கூர்ந்த எவ்வம் விட* *(புறம்.393:10–11)*

*இரும்பேர் ஒக்கல் பெரும்புலம்பு உறினும்* *(புறம்.394:16)*

*. . . . . . . . . . . . . . . . . . . நீயிரும்*
*இவண் நயந்து இருந்த இரும்பேர் ஒக்கல்*
*(சிறுபாண்.144–145)*

*ஆடுபசி உழந்தநின் இரும்பேர் ஒக்கலொடு* *(பொரு.61)*

*பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு* *(பெரும்.25)*

முதலான பாடல்களைக் கூறலாம். இரவலர்களது சுற்றத்தார் பசியில் வாடிய வருத்தத்தை அறிய முடிகிறது. உண்டு கை ஈரமாதலை அறியாது மறந்த சுற்றமாக கிணைப்பொருநன் சுற்றம் காணப்படுகிறது. இச்சான்றுகளின் வழி அவர்களது வறுமையின் உச்சநிலையை உணர முடிகிறது.

உணவு உண்ணாது வருந்தும் சுற்றத்தினரின் துன்பத்தை,

*பெரிதால் அத்தை என் கடும்பினது இடும்பை* *(புறம்.169:7)*

*. . . காண்க இவன்கடும்பினதுஇடும்பை* *(புறம்.173:2)*

**உண்ணா வறுங் கடும்பு உய்தல் வேண்டின்,**
**இன்னே சென்மதி** (புறம்.181:7–8)

போன்ற சான்றுகளின் வழி அறியமுடிகிறது. இரவலர்களின் சுற்றம் அடைந்த வறுமை துன்பத்தையும் அத்துன்பம் நீங்க புலவலர்களை நாடும் இரவலர்களது மனத்துயரையும் இதன் வழி உணர முடிகிறது.

### 3.3.2.3 கடன் பெறுதல்

இரவலர் மட்டும் அல்லாது, வீரன் ஒருவன் தன் சுற்றத்தின் வறுமை நீங்க பிறரை நாடியுள்ளான். வீரன் ஈட்டிய பொருள், கடன் தந்தோர்க்குக் கொடுத்தல், பாணர்க்கு வழங்குதல், சுற்றத்தாரைப் பேணல் ஆகிய மூன்று நிலைகளில் பயன்பட்டது. அவனுடைய பொருள் கடன்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டது. பாணர்களுக்கு வழங்கப்பட்டது. ஆனால், தன்னுடைய சுற்றத்தாரின் வறுமையைப் போக்குவதற்குப் பொருள் இல்லாது போனது. எனவே, கடன் வாங்கும் தேவை ஏற்பட்டது.

வரகினைக் கடனாக அவன் இரந்து வேண்டுகின்றான். அவ்வாறு அவன் வேண்டுவதை,

**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்**
**பசித்த பாணர் உண்டு, கடை தப்பலின்,**
**ஒக்கல் ஒற்கம் சொலிய, தன் ஊர்ச்**
**சிறுபுல்லாளர் முகத்து அவை கூறி**
**வரகு கடன் இரக்கும் நெடுந்தகை** (புறம்.327:3–7)

என்ற பாடலின் மூலம் அறிய முடிகிறது. இரக்கும் போது தான் முன்பு கடன் பெற்றுக் கொடுத்தமையைக் கூறி இரக்கின்றான். தன் சுற்றத்தினரின் வறுமையைத் தீர்ப்பதற்காக மற்றவரிடம் கடன் வாங்கும் நிலையினைக் காணமுடிகிறது.

குமணனிடம் பரிசில்பெற்ற பெருஞ்சித்திரனார் தன் மனைவியிடம், அப்பரிசலைக் கொடுத்து எல்லோருக்கும் வழங்கி மகிழ்வாயாக என்கிறார். அவர் மனைவியிடம், உன்னை அன்பு செய்து வாழும் மகளிர்க்கும், நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும் பல குணங்களையுடைய கற்பினையுடைய உன் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக. நம் சுற்றத்தின் பசி நீங்க உனக்கு நெடுநாள்

கடன் தந்து உதவியோர்க்கும் வழங்கி மகிழ்வாயாக என்று உரைக்கின்றார். இதனை,

**நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்**
**பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்**
**கடும்பின் கடும்பசி தீர யாழநின்**
**நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்**
**இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது**
**வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்**
**எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே (புறம்.163:1–7)**

என்ற பாடல்வழி உணர்த்துகின்றார். இதில் குறியெதிர்ப்பையாவது அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர் கொடுப்பது (உ.வே.சாமிநாதையர், 1935:316) என்றும், யாம் இப்போது நல்கின் அப்போது நமக்கு நல்குவர் என்று கருதி வழங்கும் கடன் (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பகுதி-1,2002:350) என்றும் பொருள் உரைக்கப்பட்டுள்ளது. சுற்றத்தின் பசி நீங்க கடன் வாங்குவது கடன் தருவது அக்காலத்தில் அமைந்துள்ளமையை அறிய முடிகிறது.

### 3.3.2.4 வெறுமையுற்ற உண்கலம்

வறுமையுற்ற இரவலர்கள் உணவு இல்லாது வருந்தினர். அவர்களின் சமையல் பாத்திரங்கள் சமைப்பதற்குரிய உணவுப் பொருள்கள் இல்லாததால் வெறுமையாக கிடந்தன. உண்பதற்கு இடும் உணவின்மையால் உணவு உண்ணும் பாத்திரம் கவிழ்ந்து கிடந்தது. கவிழ்ந்து கிடக்கும் உண்கலத்தில் உணவு இடவேண்டி அவர்கள், பரிசிலர்களை நாடிச் சென்றனர். இரவலர்களின் உண்கலம் மண்டை (புறம்.115), குழிசி (புறம்.393), கொள்கலம் (அகம்.142) என்று பலவாறு அழைக்கப்பட்டது.

கவிழ்ந்து கிடக்கும் தங்களின் உண்கலத்தில் உணவு இட்டு, அதனை நிமிர்த்த வல்லவர்களைத் தேடிச் சென்றனர். அவ்வாறு தேடிச் செல்பவர்களுக்கு உணவு வழங்கும் இடம் எடுத்துரைக்கப் பெற்று அவர்கள் ஆற்றுப்படுத்தப்படுகின்றனர். சான்றாக, விறலி ஒருத்தி, கவிழ்ந்து கிடக்கும் உண்கலமாகிய மண்டையை மலர்த்த வல்லவர் யாருளர்? என வருந்தி கிடக்கின்றாள். அவளின் வருத்தத்தை ஔவையார்,

**கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்**
**சுரன்முத லிருந்த சில்வளை விறலி** **(புறம்.103:3-4)**

என்றுரைத்து, அதியமானிடம் செல்க என்று அவளை ஆற்றுப்படுத்துகின்றார்.

நாலைகிழான் நாகன் என்பவன், கவிழ்த்து வைத்த இரத்தலையுடைய உண்கலத்தில் உணவு ஏற்கும்படி இட்டு, மலர்த்த வல்லவனாக உள்ளான் (புறம்.179). மோசிகீரனார் எனும் புலவர் கொண்கானங்கிழானது மார்பகத்தை நோக்கி உண்கலம் மலரும் என்கிறார். இதனை,

**வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ**
**உணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக்**
**கிளக்கும் பாண கேளினி நயத்திற்**
**பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடர் னெதிர் கொண் டாஅங்**
**கிலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்**
**கொண்பெருங் கானத்துக் கிழவன்**
**தண்டா ரகல நோக்கின மலர்ந்தே** **(புறம்.155)**

என்று உவமையின் மூலம் காட்சிப்படுத்துகின்றார். பாழூரில் நெருஞ்சியின் பொன்னிறப்பூ எழு ஞாயிறை எதிர் கொண்டு மலரும். அதுபோல வறுமையுற்ற யாழ் புலவரது உண்கலம் கொண்பெருங்கானங் கிழானது குளிர்ந்த மாலை அணிந்த மார்பகத்தை மலர்ந்து நோக்கின என்கிறார்.

### 3.3.2.5 பசித்தீ

உணவின்மையால் வெறுமையாகத் தோன்றும் உண்கலத்தைப் பார்க்கும் பொழுது, வயிற்றில் தீயெழும்பி உள்ளம் வெதும்புகிறது. உள்ளம் வருந்தும் நிலையைத் திருத்தாமனார்,

**அழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை** **(புறம்.398:21)**

என்று எடுத்துரைக்கிறார். இதற்கு மண்டையைக் காணுந்தோறும் உணவின்மை தோன்றி வயிற்றுத் தீயை யெழுப்பி வெதுப்புதலின் அழல்கான் றன்ன மண்டை

யென்றார் என்று உரை விளக்கம் அமைந்துள்ளது (ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, பகுதி-II, 2002,461). உணவு இல்லாத உண்கலத்தைக் காணும்போது பசி மிகுந்து வருத்துகின்ற துன்பத்தைக் காணமுடிகிறது.

### 3.3.2.6 உணவு பொருள் இன்மை

சமையல் நடைபெறாததால் மட்பானையானது கவிழ்த்து வைக்கப்படுகிறது. கவிழ்த்துக் கிடக்கும் பானையில் பொருள் இட்டு நிரம்பச் செய்து, நிமிர்த்த செய்பவர்களைத் தேடுகிறார் நல்லிறையனார். இதனை,

**அடனசை மறந்த குழிசி மலர்க்கும்**
**கடனறி யாளர் பிறநாட் டின்மையின்**
**வள்ளன் மையினெம் வரைவோர் யாரென (புறம்.393:4–6)**

என்று கிணைப் பொருநன் ஒருவனது தேடலாகக் காண்கிறார்.

சோறு சமைப்பதற்கு உள்ள விருப்பத்தை மட்பானையானது மறக்கின்றது. மட்பானையை நிமிர்த்திச் சமைக்க செய்யும் கடமையை அறிந்தாளும் செல்வர் எந்த நாட்டிலும் இல்லை என வருந்துகிறான். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நாடி வருகிறான். இதில் குழிசியை மலர்த்தல் என்பதற்கு, அரிசி முதலாயின இன்மையால் சமைத்தற்றொழில் நிகழாமையின் கவிழ்த்து வைத்திருக்கும் மட்பானையை, அவ்வரிசி முதலாயின பெற்ற வழிச் சமைத்தற்கு நிமிர்த்து அடுப்பேற்றுவது என்று சமைத்தற்கு வேண்டிய உணவு பொருள்கள் முன்வைக்கப்படுகிறது (ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, பகுதி-II, 2002:437). இதன் மூலம் சமைப்பதற்குரிய உணவு பொருள்கள் இல்லாது வருந்தும் நிலையைக் காணமுடிகிறது.

ஒரு குழந்தை சோறையும், கூழையும் உண்ண விரும்புகிறது. உண்கலத்தைத் திறந்து பார்க்கிறது. உண்கலம் ஒன்றுமில்லாது வெறுமையாகக் காட்சியளிக்கிறது. குழந்தை உணவிற்காக அழுகிறது. குழந்தையின் மிகுந்த பசியைப் பெருஞ்சித்திரனார்,

**கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்**
**உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு (புறம்.160:20–21)**

என்று உரைக்கின்றார். உணவு உண்ண உள்ளே சென்று பாத்திரங்களைத் திறக்க, அப்பாத்திரங்களில் ஒன்றும் இல்லாததைக் கண்டு வருந்தும் அக்குழந்தையின் பசிக் கொடுமையை எடுத்துக் காட்டுகின்றார்.

### 3.3.3 பெண்கள் வாழ்வில் வறுமை

புலவர்கள் கலைஞர்கள் மட்டுமன்றி, பொதுமக்கள் வாழ்க்கையிலும் வறுமை குடி கொண்டிருந்தது. குறிப்பாக பெண்கள் வறுமையில் துன்புற்றிருந்தனர். தன் பெற்றோரின் வீட்டில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தவள் திருமணமான பிறகு தன் கணவனது வறுமைத் துன்பத்தில் பங்கேற்று வாழ்கின்றாள். தான் பிறந்த ஊரும் வீடும் வளமையில் இருக்கக் கண்டவள், திருமணமாகி செல்லும் ஊரோ வறுமையில் இருக்கக் காண்கிறாள். என்றாலும், அதனையும் ஏற்றுத் தலைவனுடன் ஒன்றிவாழும் வாழ்க்கைக்குத் தயாராகின்றாள்.

ஒரு பெண்ணின் தாய் வீடு செல்வச் செழிப்புடன் இருக்கின்றது. ஆனால் புகுந்த வீட்டின் ஊரோ வறுமையில் உள்ளது. அவள் நிலை, அவ்வூரில் வறுமையுற்று வாழும் ஒரு பெண்ணின் நிலை போன்று உள்ளது. அவ்வூரின் இல்லத்தில் அப்பெண்ணிற்குத் திருமண ஏற்பாடுகள் நடக்கின்றன. இதனை அறிந்த செவிலித்தாய்,

**சிறப்புஞ் சீரும் இன்றிச் சீறூர்**
**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**
**ஓரா யாத்த ஒருதூண் முன்றில்**
**ஏதில் வறுமனை சிலம்புடன் கழீஇ**
**மேயினள் கொல்** **(அகம்.369:22-26)**

என்று வருந்துகிறாள். சீரும்சிறப்பும் இல்லாத சிற்றூரில், வறுமையால் வாழும் பெண்களின் ஒற்றைப்பசு கட்டப்பட்ட தூண்கொண்ட முகப்பினையுடைய புல்வேய்ந்த வறிய இல்லத்தில், சிலம்பினைக் கழித்து அவனை மணம்செய்து கொண்டாளோ என்று எண்ணி வேதனைப்படுகிறாள். தான் குடும்பம் நடத்த உள்ள ஊரானது வறுமைக்கு உட்பட்டிருந்தாலும், அதனை ஏற்றுத் திருமணத்திற்குத் தயாராகும் பெண்ணின் நிலையையும், தலைவன் வாழும் ஊர் வறுமையில் இருந்ததையும், அங்குள்ள பெண்கள் வறுமையில் வாடியிருந்ததையும் காண முடிகிறது.

### 3.3.3.1 வறுமையைப் பொறுத்தல்

தன் கணவனின் குடி வறுமையுற்ற சூழலிலும் தன் பெற்றோரின் வளமான உணவினை எண்ணாதவளாக அமைகின்றாள். மேலும், பொழுது விட்டு உண்ணும் தன்மையுடையவளாக மாறுகின்றாள். இவ்வாறு வறுமைத் துன்பத்தைப் பொறுக்கும் அவளின் தன்மையை,

**கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்**
**கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்**
**ஒழுகுநீர் நுணங்கறல் போலப்**
**பொழுதுமறுத்து உண்ணுஞ் சிறுமது கையளே (நற்.110:10-13)**

என்று போதனார் எடுத்துரைக்கின்றார். மணம் முடித்த இல்லம் வறுமையுற்று இருப்பதும் கணவனும் மனைவியும் வறுமையில் துன்புற்று இருப்பதும் இப்பாடல் வழி அறிய முடிகிறது.

தலைவனின் வீடும் ஊரும் வறுமையுற்று காணப்பட்டாலும் அதனையேற்று, குடும்பம் நடத்தும் தலைமை பண்புமிக்கவளாகத் தலைவி காட்டப்படுகின்றாள். இதனைக் கலித்தொகை,

**ஒன்றன் கூறாடை யுடுப்பவரே யாயினு**
**மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை (கலி.18:10-11)**

என்று, ஒன்றன் கூறாகிய ஆடையை உடுப்பவராக வறுமையுற்று வாழ்ந்தாலும், ஒன்று கலந்து பிரியாது இருப்பவர்களுடைய வாழ்க்கையைச் சிறந்த வாழ்க்கை எனக் காட்டுகிறது.

### 3.3.3.2 வறுமைக்கு உள்ளாதல்

மேற்கூறிய இல்வாழ்க்கை நிலையில் மாறுபட்டு, தலைவன் ஒருவன் தலைவியை விட்டு பரத்தையர் பால் பிரிந்து செல்கின்றான். அவ்வாறு சென்றதால் தலைவி வறுமை நிலைக்குத் தள்ளப்பட்டுத் துன்புறுகிறாள். இந்நிலையை ஓரம்போகியார்,

**பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ**
**புலத்தல் ஒல்லுமோ? மனைகெழு மடந்தை**
**அதுபுலந் துறைதல் வல்லி யோரே**
**செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்**
**தாமட் டுண்டு தமிய ராகித்**
**தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப**
**வைகுந ராகுதல் அறிந்தும்**
**அறியா ரம்மவஃ தூடலு மோரே** **(அகம்.316:10-17)**

என்று எடுத்துரைக்கின்றார். இதில் தலைவன் மேற்கொள்ளும் பரத்தைமையை வெறுத்து அவனோடு ஊடல் கொள்ளும் பெண்கள் வறுமை நிலைக்கு உள்ளாகின்றனர். தலைவன் பிரிவதால் திருமகள் தலைவியை விட்டு நீங்குகிறாள். நொய் அரிசியை முறத்தால் புடைத்துத் தானே சமைத்து உண்டு வாழும் தனிமை வாழக்கைக்குத் தள்ளப்படுகின்றாள். இனிய மொழிபேசும் குழந்தைகள் பால் இன்றி உலர்ந்த முலையைச் சுவைத்துப் பார்த்து வருந்துகின்றன.

இத்தகைய துன்பநிலை தலைவனிடம் ஊடல் கொள்வதால் ஏற்படுகிறது. அவ்வாறு செய்வது அறிவில்லாதவர் செயலாகும் என்று கூறி தலைவியிடம் ஊடலைக் கைவிட வேண்டும் என்று தோழி வேண்டுவதாக பாடல் அமைகின்றது. பொருள் ஈட்டும் ஆண்மகன் இல்லாததால் வறுமைச் சூழலுக்குத் தலைவி ஆட்படுகின்றாள் என்றாலும் அங்குத் தலைவி வறுமைக்கு உட்பட்டுத் துன்புறுகிறாள் என்பது உண்மை நிலையாகும்.

### 3.3.2.3 மனக்கலக்கம்

தன் கணவனுடைய வீடும் ஊரும் வறுமையில் இருந்தாலும் அதனை ஏற்று இல்லறம் நடத்தும் பெண்களை அகநானூறு எடுத்துக்காட்டுகிறது என்றால் புறநானூறு தம் வறுமைக்கு அறக் கடவுளைப் பழிக்கும் பெண்ணின் பரிதாபநிலையைக் காட்டுகிறது. தானும் தன் குடும்பமும் வறுமையுற்ற நிலைக்கு அறக்கடவுளைப் பழிக்கின்றாள். இதனைப் பெருஞ்சித்திரனார்,

**. . . . . . . அறம் பழியாத்**
**துவ்வாளாகிய என் வெய்யோளும்** **(புறம்.159:13-14)**

என்று, தன் வறுமைக்குக் கணவனைக் கோபிக்காமல் அறக்கடவுளைக் கோபித்து நிற்பதைக் குறிப்பிடுகின்றார்.

குடும்ப வறுமையைத் தீர்க்க வேண்டி சென்ற தன் கணவன் இறந்திருப்பானோ என எண்ணி வருந்தி, தன் உயிரும் தன்னை விட்டு நீங்க வேண்டும் என்று பலவாறு வெறுத்துப் புலம்புகிறாள் மற்றொரு குடும்பத் தலைவி. தன் மனைவியின் இத்தகைய வருத்தத்தை,

**உயிர் சிறிது உடையள் ஆயின், எம்வயின்**
**உள்ளாது இருத்தலோ அரிதே; அதனால்,**
**'அறன்இல் கூற்றம் திறன்இன்று துணியப்**
**பிறன் ஆயினள் கொல் இறீஇயர், என்உயிர்!' என**
**நுவல்வுறு சிறுமையள் பலபுலந்து உறையும்**
**இடுக்கண் மனையோள்** (புறம்.210:6-11)

என்று பெருங்குன்றூர் கிழார் எடுத்துரைக்கின்றார்.

இச்சான்றில் அறமில்லாத கூற்றுவன் தன் கணவனின் உயிரைக் கொண்டிருப்பானோ எனப் புலம்பும் இப்பெண்ணின் வேதனையில், அவள் குடும்பத்தில் கூற்றுவனவாக வறுமை செயல்பட்டுள்ளது என்பதை உணரமுடிகிறது. மேலும், வறுமை நீங்க பொருள் தேடிச் செல்பவர்கள், பொருள் பெற்று மீண்டும் தம் மனைக்குத் திரும்பி வர நீண்ட நாட்கள் ஆகியிருக்கும். அவ்விடைப்பட்ட நாட்களில் தன் கணவனின் உயிரை எண்ணி வருந்தும் அம்மனையோளின் துன்பம் தெரிகிறது.

பெருஞ்சித்திரனாரின் மனைவியும் இத்தகைய நிலை உடையவளாக இருந்திருக்கின்றாள். கொடிய பாலை வழியில் நெடிது சென்றவர்க்குக் கேடு உண்டாகும் என்று அஞ்சுகின்றாள். அவளின் துன்பத்தைப் பெருஞ்சித்திரனார்,

. . . . . . . **அருஞ் சுரம் இறந்தோர்க்கு,**
**இற்றை நாளொடும் யாண்டு தலைப்பெயர எனக்**
**கண்பொறி போகிய கசிவொடு உரன் அழிந்து,**
**அருந்துயர் உழக்கும் என்பெருந் துன்புறுவி** (புறம்.161:11-14)

என்று எடுத்துக்காட்டுகின்றார்.

ஆவூர் மூலங்கிழாரின் மனைவி நாண், கற்பு ஆகிய பண்புகளைச் செல்வமாகப் பெற்று பொருளில்லாது வறுமை துயர் கொண்டவளாக இருக்கின்றாள். தன் மனைவியின் மாண்பினை,

> **கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை**
> **நாணல் தில்லாக் கற்பின் வாணுதல்**
> **மெல்லியற் குறுமகள்** (புறம்.196:12–15)

என்று எடுத்துரைக்கின்றார். இதில், கல்குயின்றன்ன வென்னல் கூர்வளிமறை என்பதற்கு கல்லாற் செய்தாற் போன்ற பயன் கொள்ளாத யாக்கையையுடைய எனது நல்கூர்ந்த வளிமறையெனவும், கல்லைத் துளைத்தாற் போன்ற காற்றடை மாத்திரையாகச் செய்யப்பட்ட நல்கூர்ந்த எம் மனையெனவும் உரைப்பாரும் உளர் (உ.வே. சாமிநாதையர்,1935:370) என்றும், மனையின் மேற்கூரை வெயிலும் பனியும் மழையும் மறையா தொழியினும், சுவர் நின்று காற்றை மறைப்பது போன்ற வளிமறை யென்றார் (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பகுதி-II, 2002:424) என்றும் பொருள் காணமுடிகின்றது. இதன்வழி, ஆவூர் மூலங்கிழாரின் உடற்துன்பத்தை அவரது மனைவியின் மனத்துன்பத்தை உணர முடிகிறது.

### 3.3.4 ஊர் மக்கள் நிலை

சீறூர்த் தலைவன் ஒருவன், தன் கண் வறுமை உண்டாகுமானால், அதனைப் போக்கி தன்கண் இல்லாதவற்றை விரைவாகப் படைத்துக் கொள்ளும் வன்மைமிக்கவனாக உள்ளான். அவன் தன் வறுமையைத் தீர்க்க செயல்படுமுறையை, உறையூர் முதுகூத்தனார்,

> **நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்**
> **புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்**
> **கல்லா விடையன் போலக் குறிப்பின்**
> **இல்லது படைக்கவும் வல்லன்** (புறம்.331:3–6)

என்று எடுத்துக்காட்டுகின்றார்.

சிறுதீயைப் பெறுவதற்காகத் தீக்கடைக் கோலால் கடைகின்ற தொழிலையல்லது பிற தொழிலைக் கல்லாத இடையன் போல மனையில் இல்லாததைக் குறிப்பால் அறிந்து அதனை விரைந்து படைத்துக் கொள்ளும் வல்லமை உடையவனாகக் காணப்படுகின்றான். வீரனின் இல்லாண்மை சிறப்பை இப்பாடல் எடுத்துக் கூறுவதாக இருந்தாலும் நனிநல் கூர்ந்தன

னாயினும் என்ற வரியின் மூலம் அவ்வீரன் சிலவேளைகளில் வறுமைக்கு உட்பட்டவனாய் வாழ்ந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

இதற்குச் சான்றாக, புறநானூற்றின் மற்றொரு பாடலைக் குறிப்பிடலாம். வீரன் ஒருவன் போருக்குச் செல்லும் முன் வறிய நிலையில் வாழ்கிறான். பறித்த இலைகளோடு கொண்டு வந்த விறகுகளால் வேக வைத்து உண்பதற்கும் இயலாத நிலையில் மனைவியோடு இருந்த, அவ்வீரனின் ஊர் பசியால் மிகவும் துன்புற்றிருந்தது. இதனைப் பெருங்குன்றூர் கிழார்,

**கொய்யடகு வாடத் தருவிற குணங்க**
**மயிலஞ் சாயன்மாஅ யோளோடு**
**பசித்தன் றம்ம பெருந்தகை யூரே** (புறம்.318:1–3)

என்று போரில் தோல்வியுற்றதால், அவ்வூர் பசித்துன்பத்திற்கு ஆளாவதைக் காட்சிப் படுத்துகின்றார்.

போர் முனைகளைக் கொண்ட சிற்றூர்களில் வறுமை குடிகொண்டிருந்தது. அங்கு வாழும் பெண்கள் உணவின்றித் துன்புற்றனர். பருத்தியின் கொட்டைகளை உணவாகக் கொண்டனர். இந்நிலையை அகநானூறு,

**கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பைத்**
**தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்**
**பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப்**
**போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்காழ்**
**நல்கூர் பெண்டிர் யல்கற் கூட்டுங்**
**கலங்கு முனை சீறூர்** (அகம்.129:6–11)

என்ற பாடல்வரிகளில் எடுத்துரைக்கின்றது.

குடிசையின் அருகில் பறவைகள் கொத்திப் பிளந்து போட்ட பருத்தியின் எஞ்சிய கொட்டைகளை வறுமையுற்ற பெண்கள் உணவாக சேர்த்து வைத்தனர் என்கிறார் குடவாயிற் கீரத்தனார். இதன் மூலம் போருக்கு முன்னுள்ள ஊர்கள், போர் முனைகளைக் கொண்ட ஊர்கள் வறுமை நிலையில் இருந்திருக்கின்றன என்பதை அறிய முடிகிறது.

அகநானூற்றின் மற்றொரு பாடல், சிற்றூர்கள் வறுமையில் இருந்ததைக் குறிப்பிடுகின்றது. வினைவயிற் பிரிந்த தலைவன் வினை முடிந்து மீளும் பொழுது, தான் வறுமைப்பட்ட ஊரில் தங்கியதை நினைவு கூர்வதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தயிரைக் கடைந்த மத்து, கன்று தன் நாவினாற் சுவைத்திடும்படி, வீட்டின் முற்றத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறது. மரத்தின் தழை நிழலாகிய பந்தரையும், புல்லால் வேயப்பட்ட சிறுகுடில்களையும் உடைய வறுமை கொண்ட சிறிய ஊரில் இரவு நேரத்தில் தலைவன் தங்குகிறான் (அகம்.87:1-4) என்று மதுரைப் பேராலவாயார் எடுத்துக் காட்டுகின்றார்.

மேற்கூறிய சான்றுகளின் மூலம் புலவர்கள், கலைஞர்கள், அவருடைய உறவினர்கள், பொதுமக்கள் வாழ்க்கையில் வறுமை இருந்ததை அறிய முடிகிறது. செல்வவளம் கொண்ட சங்கச் சமூகத்தில் வறுமையின் தடங்கள் பதிந்திருப்பதைக் காண முடிகிறது. உணவிற்காக துன்பப்படும் அவர்களின் மனப்போராட்டத்தை உணர முடிகிறது.

**ஈன்று புறந் தருத லென்றலைக் கடனே**
**சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே (புறம்.312:1–2)**

என்று ஒரு குழந்தையின் பிறப்பை, வளர்ப்பை உறுதியிடும் சங்கச் சமூகத்தில் குழந்தைகள் பால் இன்றி அழுவதும், அழுகின்ற குழந்தையின் அவலத்தைக் கண்டு தாய் அழுவதும், தந்தை வேதனைப்படுவதும் என இவை மிகவும் இரங்கத் தக்கவையாக உள்ளன.

செல்வ வளம் கொண்டதாய் தன் பெற்றோர் இல்லம் அமைந்திருக்க, கணவனுடன் இல்லறம் நடத்தும் இல்லம் வறுமையுடையதாக உள்ளது. இல்லறம் வறுமையுற்று இருந்த போதிலும் நல்லறத்தைக் கொண்டவளாக தலைவி குறிப்பிடப் பட்டிருந்தாலும், அவள் வாழ்க்கை வறுமையில் வாடுமாறு அமைந்திருந்தது.

தாய், மனைவி, குழந்தை, தந்தை என குடும்பத்தின் வறுமைநிலை, இல்லற துணைவனின் வறுமைநிலை, போர்ச்சூழலால் உருவாகும் வறுமைநிலை என இவற்றைக் காணும்பொழுது பண்டைத் தமிழரின் வளமான வாழ்க்கையில்

இத்தகைய வறுமை நிலையும் இருந்துள்ளதை அறிய முடிகிறது. இந்நிலையை, கலைஞர்களும் கவிஞர்களுங்கூட வறுமைகனலால் வாடி வதங்கினர் என்றால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும். இவர்கள் நிலமும், செல்வமும் படைத்த வள்ளல்களின் ஆதரவு பெற்றுத் தான் வாழவேண்டிய நிலையிலிருந்தனர். உயர்ந்த ஆடைகள் நெய்த அக்காலத்தில் உடையில்லாமல் வருந்தினோர் பலர். உறைவதற்கு ஏற்ற இடமில்லாமல் ஊரூராக இடந்தேடி அலைந்தோர் பலர். உணவுக்காகச் செல்வம் படைத்தவர்களிடம் சென்று கையேந்தி நின்றவர்கள் பலர் என்று எடுத்துரைக்கப்பட்டுள்ளது (சாமி.சிதம்பரனார், 2003:48).

### 3.4 வறுமை ஒப்பீடு

வறுமை பிறபொருளோடு, செயலோடு ஒப்பீடு செய்யப்பட்டுள்ளது. வறுமையின் துன்ப நிலையைக் கலித்தொகை மரங்களின் தன்மையோடு ஒப்பிட்டுக் காண்கிறது. சான்றாக, இளமையில் வறுமையுற்றவன் நிலையை,

**வறியவன் இளமைபோல், வாடிய சினையவாய் (கலி.10:1)**

என்கிறது. இளமையில் வறுமையுற்றவன் போல மரங்களின் தளிர்கள் வாடி நின்றதைக் குறிப்பிடுகிறது. வறுமையுற்றவன் தோற்றம் வாடிய தளிர்களைப் போன்று இருப்பதைக் காண முடிகிறது. வறுமை என்பதே துன்பமாகும். அதிலும் இளமையில் வறுமை இருந்தால் அது மிகுந்த துன்பத்தைத் தரும். இக்கருத்தை ஔவையார்,

**இன்னா இளமை வறுமை வந்து எய்திக்கால் (மூதுரை:3)**

என்று எடுத்துரைக்கின்றார். இன்பமாக இருக்க வேண்டிய பருவம் இளமைப்பருவம். அப்போது வறுமை ஏற்பட்டு வாட்டினால் துன்பமே உண்டாகும் என்றுரைக்கின்றார்.

கலித்தொகையின் மற்றொருபாடல், தலைவனது அருளை இழந்த தலைவியின் நலத்தைப் பொருள் இல்லாதவனுடைய நலத்தோடு ஒப்பிட்டுக் காண்கிறது. பொருளில்லாதவன் இளமை பொலிவற்று காணப்படுவதைப் போன்று தலைவனது அருள் இல்லாததால் தலைவி பொலிவிழந்து நிற்கிறாள் (கலி.38:15) என்கிறது. இதன் மூலம் இளமையின் வறுமை நல்வாழ்க்கையைச் சிதைவுறச் செய்வதைக் காணமுடிகிறது.

வறுமையுற்ற ஒருவன் மற்றவனை இரப்பதற்கு அஞ்சுகிறான். தன் வலியின் தன்மைகெட்டு, பிறரை வேண்டும் நிலை அவனுக்கு உண்டாகிறது. அங்ஙனம் வேண்டும்போது அவனுடைய நெஞ்சம் அழிகிறது. இதனை,

**உரவுத்தகை மருங்கித்தன் இடும்பையா லொருவனை**
**இரப்பவன் நெஞ்சம்போற் புல்லென்று புறமாறி (கலி.120:4–5)**

என்று மரங்களின் பொலிவிழந்த தன்மையோடு ஒப்பிட்டு நோக்குகிறது. இதற்கு, மிடியாலே இரத்தற் கஞ்சினவன் வலியின் றகைமை கெட்டுச் சென்று ஒருவனை வேண்டுகின்றவனுடைய நெஞ்சுபோலே, மரமெல்லாம் முதற் பொலிவழிந்து என்று விளக்கம் தரப்பட்டுள்ளது (பொ.வே. சோமசுந்தரனார், 1978:8).

வறுமையினால் பொருள் இல்லாதார் நடத்தும் இல்லறத்தைக் கலித்தொகை,

**இல்லவர் ஒழுக்கம்போல், இருங்கழி மலர் கூம்ப; (கலி.148:6)**

என்று கரிய உப்பங்கழியில் மலர்கள் கூம்பின நிலையோடு பொருத்திக் காண்கிறது. மரங்களின் தளிர்கள் பொலிவழிந்து வாடியிருப்பதை, வறுமை நிலையில் உள்ளவர்களின் தன்மையோடு ஒப்பிட்டு கூறியுள்ளதை நோக்கும்போது, மக்களின் வாழ்க்கையில் வறுமை நிலவியதையும், அவ்வறுமை அவர்களுக்குப் பொலிவற்ற மகிழ்ச்சியற்ற துன்ப வாழ்க்கையைத் தந்துள்ளது என்பதையும் உணர முடிகிறது.

### 3.4.1 புறத்தில் உவமை

வறுமையின் துன்பத்தை உவமையின் மூலம் கலித்தொகை வெளிப்படுத்தியதைப் போன்று புறநானூறும் வெளிப்படுத்தியுள்ளது. சான்றாக, வறுமை தீரவேண்டி வெளிமானைக் காணச் சென்ற பெருஞ்சித்திரனார், அவன் இறந்துபட தானும் தன் சுற்றத்தாரும் இனி என்னாவமோ? என எண்ணி கலங்குகிறார். தம் வறுமையை நீக்க ஆள் இல்லாது போகவே இறப்பது நல்லது எனத் துணிகிறார். அவ்வாறு துணியுமிடத்துத் தன் நிலையை,

**எந்தை யாகுத லதற்பட லறியேன்**
**அந்தோ வளியேன் வந்தனென் மன்ற**
**என்னா குவர்கொலெற் றுன்னி யோரே**
**மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதின்**
**ஆரஞ ருற்ற நெஞ்சமொ டொராங்குக்**
**கண்ணி லூமன் கடற்பட் டாங்கு**
**வரையளந் தறியாத் திரையரு நீத்தத்**
**தவல மறுசுழி மறுகலின்**
**தவலே நன்றுமற் றகதியு மதுவே** **(புறம்.238:11–19)**

என்று கண்ணிழந்த ஊமையின் நிலையோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றார்.

மழை பொழிகின்ற இரவில் மரக்கலம் ஒன்று கடல் நடுவே செல்லும்போது கவிழ்கிறது. அதிலிருந்து கண்ணிழந்த ஊமையன் ஒருவன் கடலில் விழுகின்றான். தன்னைக் காப்பாற்ற யாரையும் அழைக்க முடியாத ஊமை நிலை ஒரு புறம். மற்றொரு புறம், கடலை நீந்தி கரை அடைய முடியாத கண் இல்லாத நிலை. அதனால் அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் நிலை அறியாது இறக்கின்றான். அது போன்று வறுமைத் துன்பத்தில் தவிக்கும் தன்னைக் காப்பாற்றுபவர் எவரும் இல்லை. இருப்பதைவிட இறப்பதே நல்லது என எண்ணுகிறார். தன் இயலாமையைக் கண்ணிழந்த ஊமையனின் இயலாமையோடு பொருத்திக் காண்கிறார். அவருடைய இத்தகைய எண்ணத்திற்கு அடிப்படைக் காரணம் அவரின் வறுமை.

புறத்திணை நன்னாகனார் தம் வறுமையின் துன்பத்தை,

**நிரயத் தன்ன வென் வறன்** **(புறம்.376:15)**

என்று நரகத்தோடு ஒப்பிடுகின்றார். பசித்துன்பத்துடன் வருந்திய கோவூர்கிழார், தன்னிடமுள்ள வறுமை முழுமையாக தன்னை விட்டு நீங்க ஆவல் கொள்கிறார். அவர் இதனைக் கிணைப்பொருநன் ஒருவன் கூற்றில்,

**நல்குவனின் பசித்துன்பற**
**என்பநின் பொருநர் பெரும வதற்கொண்டு**
**முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும்**
**யானும், ஏழ்மணியங் கேழணி யுத்திக்**
**கட்கேள்விக் கவை நாவின்**
**நிரனுற்ற வராஅப் போலும்**
**வறனொரீஇ** **(புறம்.382:10–16)**

என்றுரைக்கின்றார். பாம்பு தன் உடலிலிருந்து தோலை உரித்து நீக்குவது போன்று தன்னிடமுள்ள வறுமையை நலங்கிள்ளி நீக்கவேண்டும் என்று வேண்டுகிறார்.

இவ்வாறு பார்வையற்று காது கேட்காத தன்மையுள்ளவர்கள் வாழ்வில் எத்தகு துன்பம் அடைவார்களோ அத்தகு துன்பம் வறுமையுற்றவர்களின் வாழ்க்கையில் அமைந்திருக்கும். நல்லனவற்றின் வழியாக, மகிழ்ச்சியின் நிலையாக சுவர்க்கமும், தீயனவற்றின் வழியாக நரகமும் வைத்து எண்ணப்படுகிறது. இங்கு நரகம் போன்று வறுமை அமைவது என்பது அவர்களின் மிகுந்த துன்பத்தை உணர்த்துகிறது எனலாம்.

### 3.4.2 உடையில் வறுமை

மனிதனின் தோற்றப் பொலிவிற்கு உடை முக்கிய பங்கு வகிக்கின்றது. ஆள்பாதி ஆடை பாதி என்ற வாய்மொழிக்கு இணங்க, உடை மனிதனுக்கு உண்டாகும் மதிப்பை வெளிப்படுத்துகிறது. சமூகத்தில் ஒருவரின் மதிப்பு கல்வி, பணி, செல்வம் ஆகிய நிலைகளில் நோக்கப்படுவதோடு, உடுத்தியிருக்கும் உடையின் மூலமும் வெளிப்படுகிறது. செல்வத்தின் வெளிப்பாடாகவும் வறுமையின் வெளிப்பாடாகவும் உடை உள்ளது. இது செல்வர் வறியவர் என்ற வேறுபாட்டை உணர்த்துகிறது. இரவலர்களின் வறுமையினை, அவர்கள் உடுத்தியிருந்த உடைகள் வெளிப்படுத்தின. உடுக்க வேறு உடையில்லாமல் கிழிந்து தைக்கப்பெற்ற கந்தலாடைகளை உடுத்தியிருந்தனர். சான்றாக புறநானூற்றில்,

**. . . . . . . . . . . . . . . . . . அரையது**
**வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்**
**ஓம்பி யுடுத்த உயவற் பாண (புறம்.69:2-4)**

என்று பாணனின் உடையின் வறுமையை ஆலத்தூர்கிழார் எடுத்துரைக்கின்றார். வறிய பாணனது உடை வேர்வையால் நனைந்து பலமுறை தைக்கப்பெற்றதால், வேற்றிழை நுழைந்ததாக உள்ளது என்றுரைக்கின்றார்.

மருதன் இளநாகனாரும், மூத்த பாணன் கந்தை உடையை உடுத்தியிருந்ததை,

***சிதாஅர் உடுக்கை, முதாஅரிப் பாண! (புறம்.138:5)***

என்று எடுத்துக் காட்டுகின்றார். இவை கிழிந்த கந்தலாடையைக் காட்டுகின்றன. இந்தக் கந்தலாடை நார் நாராய் கிழிந்திருந்ததாக திருத்தாமனார் குறிப்பிடுகின்றார் (புறம். 398: 18-19). பொருநர்களின் உடை, துளைகளுடன் அதன் இழைகள் கெட்டு, மெலிந்து கரை கிழிந்து இருப்பதை,

**. . . . . . . . . . . . . . . . . . . . . என்னரை**
**தொன்றுபடு துளையொடு பெருவிழை போகி**
**நைந்துகரை பறைந்தவென் னுடை (புறம்.376:9-11)**

என்று புறத்திணை நன்னாகனாரும்,

**தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி (புறம்.400.10)**

என்று கோவூர்கிழாரும் எடுத்துரைக்கின்றனர். மேலும், பழைமையுற்ற இவ்வாடை மண்தின்னும்படி பழையதாய்க் கிழிந்திருந்ததை,

**வறனியா னீங்கல் வேண்டி என்னரை**
**நிலந்தினச் சிதைந்த சிதாஅர் களைந்து (புறம்.385:5-6)**

என்று கல்லாடனார் குறிப்பிடுகின்றார். மூலவுரையில் இப்பாடல்,

**வறனியா னீங்கல் வேண்டி யென்னரை**
**நீனிறச் சிதாஅர் களைந்து (புறம்.385:5-6)**

என்றுள்ளது. இதில் நீனிற என்பதற்கு, நிலந்திகை குறைந்த சிதாஅர், நிலந்தினசிதாஅர், என்று பொருளுரைக்கப்பட்டுள்ளது (உ.வே. சாமிநாதையர், 1935:607). மற்றொரு விளக்கவுரையில் நிலந்தினச் சிதைந்த சிதாஅர் என்றுள்ளது. அதில், மாற்றுடையின்மையின் அழுக்கேறி மட்கிக் கிழிந்து குறைந்திருந்த பீறல் உடை என்றாற்கு நிலந்தினக் குறைந்த சிதாஅர் என்று பொருள் உரைக்கப்பட்டுள்ளது (ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பகுதி-II, 2002:407).

மேற்கூறிய புறநானூற்றுச் சான்றுகள் மாற்று உடை இல்லாது மிக நீண்ட நாட்களாக ஒரே ஆடையைப் பயன்படுத்திய நிலை, துளைகள் இட்டு, இழைகள் விட்டு உடை தைக்கப்பெற்ற நிலை என்று இரவலர்களின் உடையின் வறுமையினை விளக்குகின்றன.

அழுக்கேறி நைந்து போன ஆடையில் ஈரும் பேனும் இருந்து வருத்தியதை,

**இழைவலந்த பஃறுன்னத்**
**திடைப்புரைப் பற்றிப் பிணிவிடாஅ**
**ஈர்க்குழாத்தோ டிறை கூர்ந்த**
**பேஎற்பகையென** (புறம்.136:2-5)

என்று ஔைடகிழாரும்,

**ஈரும் பேனும் இருந்து இறைகூடி,**
**வேரொடு நனைந்து, வேற்றுஇழை நுழைந்த**
**துன்னற் சிதாஅர் துவரநீக்கி** (பொரு.79-81)

என்று முடத்தாமக் கண்ணியாரும் எடுத்துக் காட்டுகின்றனர். வியர்வையால் நனைந்து, தையல் போட்ட உடையில் இவை பிணித்திருக்கின்றன.

### 3.4.3 உடையில் உவமை

சங்க காலப் புலவர்கள் கிழிந்த கந்தலாடையைப் பருந்தின் சிறகுடன், பாசியின் வேருடன் ஒப்பிட்டுள்ளனர். வன்பரணர்,

**கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன**
**பாறிய சிதாரேன்** (புறம்.150:1-2)

என்றும், குமட்டூர்க் கண்ணனார்,

**நீர்ப்படு பருந்தினீர்ஞ்சிற கன்ன**
**நிலந்தின் சிதாஅர்** (பதிற்.12:19-20)

என்றும் எடுத்துரைக்கின்றனர். அழுக்கேறிக் கிழிந்திருக்கும் உடை நீரில் நனைந்த பருந்தின் சிறகு போல இருந்ததை இவ்விருவரும் குறிப்பிடுகின்றனர்.

அழுக்குடன் கிழிந்த கந்தலாடைப் பாசியின் வேர் போன்று இருந்ததை,

**. . . . . . . . . . . . . . . யென்னரை**
**முதுநீர்ப் பாசி யன்ன உடை** (புறம்.390:13-14)

**ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி**
**வேர்புரை சிதாஅர்** (புறம்.392:13-14)

என்று ஔவையாரும்,

**பாசிவேரின் மாசொடு குறைந்த**
**துன்னற் சிதாஅர்** (பொரு.153-154)

என்று முடத்தாமக் கண்ணியாரும்,

**. . . . . . . . . . . . . . நின்னரைப்**
**பாசி அன்ன சிதர்வை** (பெரும்.467-468)

என்று கடியலூர் உருத்திரங் கண்ணனாரும் எடுத்துரைக்கின்றனர். இப்பாசியின் வேரைக் கொட்டைப் பாசியின் வேராக நச்சினார்க்கினியர் உரைக்கின்றார். கொட்டைப் பாசியினது வேர்போலே அழுக்கோடு குறைந்த தையலையுடைய துணிகள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது (உ.வே. சாமிநாதையர், 1950:118).

நல்லிறையனார் முட்டையீன்ற பாம்பின் நாவின் வடிவைப் போன்று உடையானது கிழிந்திருந்தது என்கிறார். இதனை,

**. . . . . . . . . . . . . . . . நாளுற**
**ஈன்ற வரவி னாவுருக் கடுக்குமென்**
**தொன்றுபடு சிதாஅர்** (புறம்.393:14-16)

என்றுரைக்கின்றார். முட்டை யீன்ற பாம்பின் நா பெரிதும் . . . பிளவுபட்டுக் காட்டுமென்ப எனப்படுகிறது (ஔவை சு.துரைசாமிப் பிள்ளை,பகுதி-II, 2002:438). உடையின் கிழிந்த நிலையைப் பாம்பின் பிளவுபட்ட நாவின் வடிவோடு ஒப்பிட்டுக் காண்கிறார்.

மேற்கூறிய இவ்வுவமைகள் ஆடையின்றி இரவலர்கள் துன்புற்ற நிலையை உணர்த்துகின்றன. மக்கள் அனைவரும் உண்பதும் உடுப்பதும் ஆகிய அளவினை,

**உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே**
**பிறவு மெல்லா மோரொக் கும்மே** (புறம்.189:5-6)

என்று புறநானூறு காட்டுகிறது. உணவில், உடையில் பொது நிலை காணும் அக்காலத்தில் போதிய அளவு உணவில்லாது, உடுக்க வேறு உடையில்லாது வாழ்ந்த மக்களின் வாழ்க்கை மிகவும் இரங்கத்தக்கதாக உள்ளது.

### 3.4.4 வாழுமிடம்

செல்வர் வறியவர் என்ற வேறுபாடு வீட்டமைப்பில் இருந்தது. நகரங்களில் உயர்ந்த மாளிகைகளில் செல்வந்தர்கள் வாழ்ந்தனர். சிற்றூர்களில் குடிசைகளில் வறியவர்கள் வாழ்ந்தனர்.

சிற்றூர்களில் வாழ்பவர்களின் வீடுகள் சிறு வீடுகளாக இருந்தன. களிமண்ணால் கட்டப்பட்டு செம்மண் பூசப்பட்டிருந்தன (அகம்.394:8-9). குடிசைகள் புல்லால் வேயப்பட்டிருந்தன (அகம்.200). அவை குறுகிய நுழைவாயிலைக் கொண்டதாக இருந்தன (பட்டி.81).

#### 3.4.4.1 சிறிய வீடுகள்

சிற்றூர்களில் உள்ள மக்கள் வறியவராய் சிறிய வீடுகளில் வாழ்ந்தனர். சான்றாக, தலைவன் ஒருவன் புல்லால் வேயப்பெற்ற குடில்களையுடைய ஊரில் தங்கியதை,

**படலைப் பந்தர்ப் பல்வேய் குரம்பை**
**நல்கூர் சீறூர் எல்லித் தங்கி (அகம்.87:3-4)**

என்ற பாடல் வரிகள் மூலம் காணலாம். மற்றொரு அகநானூற்று பாடல், மதிப்பும் உயர்வும் இல்லாத சீறூரில், வறிய புல் வேய்ந்த வீட்டில் தன் மகள் சிலம்பு கழித்துத் தலைவனுடன் மணம் பொருந்தினாளோ என செவிலித்தாய் வருந்துவதாக எடுத்துரைக்கிறது. இதில்,

**சிறப்புஞ் சீரும் இன்றி, சீறூர்**
**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**
. . . . . . . . . . . . . . . . . . . .
**ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ (அகம்.369: 22-25)**

என்று சிறப்பில்லாத ஊரிலுள்ள சிறிய வீட்டின் வறுமையைக் குறிப்பிடுகின்றது.

பாரி இருந்த போது செல்வ நிலையில் இருந்த அவரது பெண்கள், அவன் இறந்தவுடன் துன்புற்றனர். அப்பெண்களின் நிலையை,

**ஏந்தெழின் மழைக்க ணன்னகை மகளிர்**

**புன்முககவலைய முண்மிடை வேதலிப்**

**பஞ்சி முன்றிற்சிற்றி லாங்கட்**

**பீரை நாறிய சுரையிவர் மருங்கின்**

**ஈத்திலைக் குப்பை யேறியுமணர்**
**உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ (புறம்.116:3–8)**

*என்று எண்ணி துன்பப்படுகிறார். இம்மகளிர் முள்வேலியையும் பஞ்சுபரந்த முற்றத்தையுமுடைய சிற்றிலின் கண் சுரை படர்ந்த இடத்தில், ஈந்திலையையுடைய குப்பைமேல் ஏறிநின்று உமணரின் உப்பு வண்டிகளை எண்ணுகின்றனரே எனக் கபிலர் வருந்துகின்றார். இதில் சிறிய வீட்டில் அம்மகளிர் இருந்ததைக் காணமுடிகிறது.*

*மறக்குடித் தாயொருத்தியின் சிறுவீட்டின்கண் அமைந்த தூணைப் பற்றி நிற்றலை,*

**சிற்றி னற்றூண் பற்றி (புறம்.86:1)**

*என்ற பாடல் குறிப்பிடுகிறது. சிற்றூர்களில் சிறிய வீடுகள் இருந்ததை,*

**புல்வேய் குரம்பை (புறம்.120:13)**

**குறியிறைக் குரம்பை (புறம்.129:1)**

**குரம்பைக் கூரை (புறம்.332:4)**

*போன்ற சான்றுகளின் வழி அறியமுடிகிறது.*

### 3.4.4.2 கூரை வேய்தல்

*சிறிய வீட்டிலுள்ள குடிசைகளின் கூரைகள் புல்லால், தழையால், வரகு வைக்கோலால், தாழை நாரால் கட்டப்பட்ட தருப்பைப் புல்லால், ஈந்தின் இலையால் வேயப்பட்டிருந்தன. இதனை,*

**வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தக**

**ரீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை (பெரும். 87–88)**

**செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்**

**கற்றை வேய்ந்த கழித்தலை (பெரும். 149–150)**

**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**
**குறியிறைக் குரம்பை** (பெரும்.264-265)

**இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை** (குறி.153)

**இலைவேய் குரம்பை** (மதுரை.310)

போன்ற பாடல்கள் எடுத்துரைக்கின்றன. இக்குடிசைகளின் கூரைகள் தத்தம் நிலப்பண்பிற்கு ஏற்ப அமைந்திருந்தன.

### 3.4.4.3 சிதைந்த குடிசை

குடிசைகளின் கூரைகள் கருமை நிறமாக இருந்தன. மழைக்காலத்தில் வானத்தில் உலாவும் கருமேகங்களைப் போல் குடிசைகள் இருந்தன. இதனைப் பெரும்பாணாற்றுப்படை,

**பருவ வானத்துப் பாமழை கடுப்பக்**
**கருவை வேய்ந்த** (பெரும்.190-191)

என்ற உவமையின் மூலம் காட்சிப்படுத்துகிறது. குடிசைகள் மழையில் நனைந்து, வெயிலில் காய்ந்து கருமை நிறமாக உள்ளன.

குடிசையின் நிறத்திற்கு மேகத்தை ஒப்பீடு செய்ததைப் போன்று குடிசையின் சிதைந்த தோற்றத்திற்கு யானை ஒப்பிடப்பட்டுள்ளது. யானை தன் கன்று உண்ண வேண்டி, தான் தழையுணவை உண்ண மறுத்தது. அதனால் வற்றிய உடம்பினையும் வாடிய உறுப்புகளையும் கொண்டு பாழ்பட்ட ஊரிலுள்ள குடிசைபோல் தோற்றம் தருகிறது. யானையின் உடல் மெலிந்த தன்மை பாழான ஊரின் குடிசையின் தன்மையாக உள்ளது. இதனை,

**கயந்தலைக் குழவிக் கவியுகிர் மடப்பிடி**
**குளமறுத் துயங்கிய மருங்குல் பலவுடன்**
**பாழூர்க் குரம்பையின் தோன்றும்** (அகம்.229:4-6)

என்ற பாடல் காட்சிப்படுத்துகிறது. இவ்வாறு சிற்றூர்களில் வாழ்பவர்கள் குடிசை வீடுகளில் வாழ்ந்துள்ளதையும் அவ்வீடுகளின் கூரைகள் பல நிலைகளில் உள்ளதையும் காணமுடிகிறது.

### 3.4.5 செல்வநிலை

*சிற்றூர்கள் இவ்வாறிருக்க, பேரூரில் மாடமாளிகைகள் காணப்பட்டன. நகரங்களில் மாடங்கள் மிக உயரமாக இருந்தன. மாடங்கள் விண்ணைத் தீண்டுமாறு, மேகங்கள் தவழுமாறு அமைந்திருந்தன. இதனை,*

**விண்பொர நிவந்த வேயாமாடத்து (பெரும்.348)**

**மழை தோயும் உயர் மாடத்து (பட்டி.145)**

*போன்ற சான்றுகளால் அறிய முடிகிறது.*

*செல்வர்கள் மாளிகைகளில் வாழ்ந்தனர். பலகட்டுக்கள் அமைந்த வீடுகளைக் கொண்டிருந்தனர் (நற்.71:6-7). செல்வர்களின் இல்லத்தைக் குறிப்பிடுகையில்,*

**குமரி மூத்த கூடோங்கும் நல்இல்**
**தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**
**ஊரா நற்றேர் உருட்டிய புதல்வர்**
**தளர்நடை வருத்தம் வீட, அலர்முலைச்**
**செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்து,**
**அமளித் துஞ்சும் அழகுடை நல்இல் (பெரும்.247-252)**

*என்ற பாடல் சிறப்புற எடுத்துரைக்கின்றது.*

*பலகாலம் நிலைத்திருக்கும் நெற்கூடு உயர்ந்திருக்கும் நல்ல வீடு. அவ்வீட்டில் சிறுவர்கள் தச்சனால் செய்யப்பட்ட சிறுதேரை உருட்டி விளையாடியதலால் சோர்வடைந்தனர். அவர்கள் தங்கள் சோர்வுதீரச் செவிலித் தாயாரைத் தழுவிக் கொண்டு பாலருந்தினர் என்று செல்வ வளமுள்ள வீட்டின் இயல்பை விளக்குகின்றது.*

*பட்டினப்பாலையும், செல்வம் நிறைந்த வீட்டின் பெண்கள், உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியைத் தாம் காதுகளில் அணிந்திருக்கும் பொன்னால் செய்த மகரக் குழையால் அடித்து விரட்டுகின்றனர். அக்குழை, பூண் அணிந்த காலையுடைய தம் புதல்வர் குதிரை பூட்டாமல் மூன்று சக்கரங்களைக் கொண்ட சிறுதேர் செல்லும் வழியில் முன்னர் வீழ்ந்து, அதன் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்துகிறது (பட்டி. 20-25). இதன் மூலம் செல்வர்களின்*

*வளமுள்ள மகிழ்ச்சியுற்ற வாழ்க்கையினைக் காணமுடிகிறது. செல்வர்களின் செழிப்பை,*

**. . . . . . . . . . . . . செல்வர்**
**கடுந்தேர் குழித்த ஞெள்ளல் (அகம்.326:3-4)**

*என்று விரைந்து செல்லும் தேர்களை உடையவர் என்கிறது. பொன்புனைக் கயிற்றால் யானையைப் பிணிக்கும் இயல்புடையவராக இருந்ததை,*

**உள்ளுதற் கினிய மன்ற செல்வர்**
**யானை பிணித்த பொன்புனை கயிற்றி (ஐங்.356:1-2)**

*என்ற பாடலும் கூறுகிறது.*

**கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி**
**கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்**
**பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன (குறுந்.233:1-3)**

*என்ற பாடலும் குறிப்பிடுகின்றது. இப்பாடல் உவமையின் மூலம் செல்வநலத்தைப் பாராட்டுகின்றது. கொன்றைப்பூ உதிர்ந்து கிழங்ககழ்ந்து குழிகளில் நிறைந்திருத்தல், செல்வர் பொற்பேழை திறந்தாற்போன்று தோன்றும் என்று செல்வர் பேழைகளில் பொன்னை வைத்திருந்ததைக் குறிப்பிடுகிறது. இச்சான்றுகளின் மூலம் செல்வர்களின் செல்வநிலையை அறிய முடிகிறது.*

*சங்க மக்களின் வாழ்க்கை வறியவர், ஓரளவு வளம் படைத்தவர், செல்வர் என்ற மூன்று பிரிவுகளில் அமைந்திருந்தது. 2000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்து மக்கள் செல்வர் வறியவர் நடுத்தரமானவர் என்ற மூன்று பிரிவினராக இருந்துள்ளனர் (இலீயா கிரேசிலின் பாலினா, 1974:161). இந்த மூன்று பிரிவுகள் பொருள் அடிப்படையில் உருவானவை. பொருளை ஆதாரமாகக் கொண்ட வாழ்க்கை செல்வ நிலைக்கும் பொருள் ஆதாரத்தை இழந்த வாழ்க்கை வறுமைக்கும் கொண்டு செல்கிறது.*

*பொருளாதாரம் உயர்ந்த நிலையில் வாழ்க்கை வளமிக்கதாக அமைகிறது. அவ்வளம் மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றில் வெளிக்காட்டப்படுகிறது. வளம் இல்லாமை*

இம்மூன்றின் தேவை குறைவை உண்டாக்குகிறது. இவ்வகையில் வளமும் வறுமையும் கொண்ட பொருளாதார அமைப்பில் ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த வாழ்க்கையாக பழந்தமிழர் வாழ்க்கை இருந்தது எனலாம். பொதுவாக சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் இருந்தன. அவைகள் வீட்டமைப்பிலும் உடையிலும் தெளிவாகத் தெரிந்தன (அரு. சின்னசாமி, 1979:35). சங்க காலத்தில் மக்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள் என்ற முடிவுக்கு வரும் வகையில் சங்க இலக்கியங்கள் செய்திகளைச் சொல்லுகின்றன. எனினும் சில மாறுபட்ட குறிப்புகளும் காணப்படுகின்றன. ஒருபுறம் மாடமாளிகைகள் கூட கோபுரங்கள் ஆகியவை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இன்னும் சில நூல்களில் வறுமையின் கொடுமையும் பசியும் பிணியும் படம் பிடித்துக் காட்டப்படுகின்றன. எனவே சங்ககாலப் பொருளாதார நிலையில் செல்வந்தர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையிலான இடைவெளி மிக விரிவானதாக இருந்திருக்க வேண்டும் (பி. கோமதி நாயகம், 1995:116) என்ற கருத்தும் இங்குக் கருதத்தக்கதாக உள்ளது. உலகில் அதிக ஏழைகளுடன் கூடிய பொருளாதாரம் கொண்டது'இந்தியா என்பது உண்மை. 26 கோடி மக்கள் இன்னும் வறுமைக் கோட்டுக்குள் கீழே வாழும் நாடு இது (இந்தியா டுடே, 2006:22). தமிழக அரசின், குடிசைகள் இல்லாத் தமிழ்நாடு படைத்திட வந்தோம் பரிவோடு (தினமலர், 2010 : 5) என்ற வரிகளும், தமிழகத்தில் 21 இலட்சம் கூரை வீடுகள் உள்ளன (தினமலர், 2010: 18) என்ற செய்தியும், இன்றைய தமிழகத்தில் இத்தனை குடிசை வீடுகள் இருப்பதைத் தெரிவிக்கின்றன. இவ்வாறு மக்களின் வாழ்க்கையில் வறுமை காலம் காலமாக இருந்து வருவதைக் காணலாம்.

# 4. பெண்கள் வாழ்வியலில் அவலநிலை

வாழ்கின்ற வாழ்க்கையிலிருந்து பிறழ்ந்து வருத்தம் தருகின்ற வாழ்க்கையை அவலம் நிறைந்ததாக அல்லது துன்பம் கொண்டதாகக் கொள்ளலாம். சங்க இலக்கியத் தலைவி, தலைவனைப் பிரியும் நிலையில் துன்பம் அடைகின்றாள். கல்வி, பகை, தூது, பொருள் ஆகிய காரணங்களால் தலைவன் பிரியும் போது, அப்பிரிவைத் தாங்காது தலைவி துன்புறுகிறாள். இப்பிரிவு தற்காலிகமாக இருந்தாலும், தலைவி அதனைத் தாங்கிக் கொள்ளும் மனஉறுதி இல்லாதவளாக இருக்கின்றாள். பிரிவை எண்ணி கவலையடைகிறாள்.

தலைவனின் பிரிவும் அவன் இல்லாத வாழ்க்கையும் தலைவிக்கு அவலமாக உள்ளது. அவலம் என்பது, துன்பம், வறுமை, அழுகை, கவலை, கேடு, நோய், வலுக்குறைவு, குற்றம், மாயை முதலான பொருள்களைத் தருகின்றது (பெருஞ்சொல்லகராதி, தொகுதி-1,1988:433). கணவன் இறந்தவுடன் பெண்ணின் வாழ்க்கை துன்பத்திற்குள்ளாகிறது. அவனது திரும்பி வராத நிரந்தரப் பிரிவு பெண்ணுக்கு வருத்தத்தைத் தருவதோடு உளைச்சல் மிகுந்த வாழ்க்கைக்கு உட்படுத்துகிறது.

ஆணின் மறைவு பெண்ணிற்குக் கைம்மை, தீப்பாய்தல் முதலான நிலையை உண்டாக்குகிறது. தன்னைத்தானே வருத்திக் கொள்ளும் அவலம் நிறைந்த வாழ்க்கையைக் கைம்மை அவளுக்குத் தருகிறது. கணவனுடன் சிதையில் வெந்து சாகும் அவலமும் அப்பெண்ணிற்கு நிகழ்கிறது. கணவன் இறந்தவுடன் அவலம் நிறைந்த வாழ்க்கையை மேற்கொள்ளும் வகையில் அக்காலச் சமுதாய அமைப்பு இருந்துள்ளது.

சமுதாயத்தின் மற்றொரு நிகழ்வாக பெண்ணை மையப்படுத்தி போரும், அதனால் ஏற்பட்ட அழிவும் காட்டப்படுகின்றன. மகட்பாற் காஞ்சி, மகள் மறுத்தல் ஆகிய துறைகள் போருக்குக் காரணமாக பெண்ணை முன்னிறுத்துகின்றன. பெண்ணின் விருப்பம், அவளது மன உணர்வுகள் ஆகியன வெளிப்படையாக குறிப்பிடப்படாமல், அவளது அழகு போருக்கு வித்திடுவதாகக்

காட்டப்படுகிறது. பெண்ணின் எண்ணங்கள் எதிர்பார்ப்புகள் பற்றி கவலைப் படாமல், போரின் அழிவாக ஊரழிவுக்குக் கவலைப்படும் புலவர்களின் மனக் கருத்தை மட்டுமே காண முடிகிறது. பெண்ணின் திருமணத்தின் பொருட்டு நிகழும் போர் அமைதியற்ற, ஒற்றுமையற்ற இனப்பாகுபாடுள்ள சமுதாயச் சூழலைக் காட்டுகிறது. மேலும், அப்பெண்களின் மன நிம்மதியற்ற கட்டுப்பாட்டு வாழ்க்கைச் சூழலையும் வெளிப்படுத்திக் காட்டுகிறது.

### 4.1 கைம்மை

கணவனை இழந்து துன்புறும் நிலைமை கைம்மை எனப்பட்டது. கணவனை இழந்த பெண்ணை, கைம்மை மகளிர் என்றழைத்தனர். கைம்மையுற்ற பெண்கள் மற்ற பெண்களிலிருந்து மாறுபட்ட வாழ்க்கையைக் கொண்டிருந்தனர். கணவன் இறந்தவுடன், உடன் இறக்காது உயிர்வாழும் மகளிர் கைம்மை நோன்பு மேற்கொண்டனர். அவர்கள் துறவு வாழ்க்கையுடையவராக விளங்கினர். இதனைத் தொல்காப்பியம்,

**காதல னிழந்த தாபத நிலையும் (தொல்.பொருள்.புற.79)**

என்று குறிப்பிடுகிறது. நச்சினார்க்கினியர், காதலனையிழந்த மனைவி தவம் புரிந்தொழுகிய நிலைமையானும் என்று பொருள் கொள்கிறார் (எஸ். கனகசபாபதிபிள்ளை, 1934:313). புறப்பொருள் வெண்பாமாலை தாபதநிலையை,

**குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்**
**கருந்தடக் கண்ணி கைம்மைகூ றின்று (புற.வெண்.257)**

என்று கணவனை இழந்த மனைவி கைம்மை விரதம் பூணலை எடுத்துக் காட்டுகிறது. தவம், துறவு, நோன்பு நிலைகளில் அவர்களுடைய வாழ்க்கை அமைந்திருந்தது.

#### 4.1.1. கைம்மை முறைகள்

கணவனை இழந்த மனத்துயரம் ஒரு பக்கம் என்றால், அவள் வாழ்வின் இயல்புநிலை மாற்றத்தின் துயரம் மறுவகையில் அமைந்திருந்தது. கைம்மையை மேற்கொண்டவர்கள்,

1. கூந்தலைக் களைந்து விடுதல்
2. அணிகலன்களைக் களைந்து விடுதல்
3. உணவில் கட்டுப்பாடு கொள்ளல்
4. குளிர்ந்த நீரில் மூழ்குதல்
5. தரையில் பாயின்றிப் படுத்துறங்கல்
6. கணவனுக்குப் பிண்டச் சோறிடல்

முதலான முறைகளைக் கொண்டிருந்தனர்.

கூந்தலைக் கொய்து, வளையலை நீக்கி, அணிகலன்களைத் துறந்து நின்ற பெண்ணின் தோற்றம், பொலிவற்றதாக பரிதாபத்திற்குரியதாக இருந்தது. தோற்றப் பொலிவு அவளிடமிருந்து நீங்க வேண்டும் என்பதற்காக, இம்முறைகள் மேற்கொள்ளப்பட்டன. மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் முதன்மையானது உணவு. கணவனுடன் சேர்ந்து வாழும் வாழ்க்கையில் விருந்தோம்பலைப் பாதுகாக்கும் இல்லத் தலைவி, கணவனை இழந்த நிலையில் உண்ணும் உணவை மாற்றிக் கொள்கிறாள். உடலை வருத்தும் வகையில் உணவு முறை அமைந்திருந்தது.

கைம்மை மகளிருக்கென தனியான உணவு முறை வழக்கத்திலிருந்தது. பழைய சோறு, அல்லி அரிசி, வேளைக் கீரை, எள்ளு துவையல் முதலானவற்றை உணவாகக் கொண்டனர். உடல் நலத்தை, வளத்தைப் பேணாது உயிர் வாழ மட்டுமே உணவு உட்கொண்டனர்.

கைம்மையுற்ற பெண்கள் படுக்கப் பாயின்றி, பரற்கற்களையுடைய தரையில் படுத்தனர். உறங்குவதற்கு ஏற்ற நல்ல இருப்பிடம் இல்லாது துன்புற்றனர். உடலளவில் வேதனைப்படும்படி அவர்களின் படுக்கை அமைந்திருந்தது. தன் அழகைக் குறைத்து அல்லது இல்லாமல் செய்து, சத்தான உணவின்றி உடல் வளத்தைக் குறையச் செய்து, நிம்மதியாக உறங்குவதற்கு ஏற்ற வகையில்லாது பலவகைகளில் வருத்தமுற்றனர்.

### 4.1.2 சங்க இலக்கியத்தில் கைம்மை

புறநானூற்றின் 13 பாடல்கள் கைம்மையைப் பற்றி விளக்கியுள்ளன. கல்லாடனார், கழாஅத்தலையார், ஆவூர் மூலங்கிழார்,

கருங்குழலாதனார், பெருஞ்சித்திரனார், பெருங்கோப்பெண்டு, ஒக்கூர் மாசாத்தனார், தும்பிசேர் கீரனார், தாயங்கண்ணியார், குளம்பந்தாயனார், கயமனார், மாறோகத்து நப்பசலையார் முதலானவர்கள் கைம்மை நிலையை எடுத்துக் காட்டியுள்ளனர். இப்பெண்களின் நிலை, தொழில், தோற்றம் ஆகியவற்றின் அடிப்படையில்,

1. ஆளில் பெண்டிர் (நற்.353)
2. உயவற் பெண்டிர் (புறம்.246)
3. பருத்திப் பெண்டிர் (புறம்.326)
4. தொடிகழிமகளிர் (புறம். 238)
5. கழிகல மகளிர் (புறம்.280)
6. படிவமகளிர் (நற்.272)

என்று பல பெயர்களில் குறிக்கப்பெற்றனர். இக்காலத்தில் கைம்பெண், விதவை போன்ற பெயர்கள் வழக்கில் உள்ளன. சங்க காலத்தில் விதவை என்ற சொல் காணப்படுகிறது. அது கூழ் (புறம்.326) என்ற பொருளைத் தருகிறது. ஆனால், இன்று கணவனை இழந்த பெண்களைக் குறிப்பதாய் உள்ளது.

### 4.1.3 கைம்மை நோற்றவர்கள்

கணவனின் வாழ்க்கை முடிந்தவுடன், தன் வாழ்க்கையை முடித்துக் கொள்ளாது, யாதொரு பயன் கருதியும் கருதாதும் உயிருடன் இருப்பவர்கள் கைம்மையை மேற்கொண்டனர். மன்னரின் மனைவியர், போரில் உயிர் நீத்த வீரனின் மனைவி ஆகியோர் கைம்மை நோற்றனர். போரில் தோல்வியுற்ற பகைவரின் மனைவியர், தம் கணவர் இறந்தவுடன் கைம்மை வாழ்க்கைக்கு உள்ளாகினர்.

பகைவரின் மனைவியர் இறந்த கணவனோடு உயிர் நீங்காது, தம் குழந்தைகளுக்காக கைம்மையை மேற்கொண்டு உயிர் வாழ்ந்தனர். சான்றாக, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் அழிந்த பகைவர் தம் மனைவியர் இந்நிலைக்கு ஆளாகினர். இதனைக் கல்லாடனார்,

**அறுமருப் பெழிகலை புலிப்பாற் பட்டெனச்**
**சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை**
**பூளை நீடிய வெருவரு பறந்தலை**
**வேளை வெண்பூக் கறிக்கும்**
**ஆளி லத்த மாகிய காடே** (புறம்.23:18–22)

*என்று குறிப்புப் பொருள் மூலம் எடுத்துக்காட்டுகின்றார்.*

*ஆண்மான் புலியால் கொல்லப்பட, பெண்மான் தன் குட்டியை அணைத்தபடி வேளையின் பூவை உண்டு வாழ்கின்றது. இதில் கலைப்புலிப் பாற் பட்டெனச் சிறுமறி தழீஇ மடப்பிணை பறந்தலை வேளை வெண்பூக் கறிக்கு மென்பது, அவன் பகைவரைக் கொன்ற வழி அவர் பெண்டிர் தம் இளம் புதல்வரை ஓம்புதற் பொருட்டு இறந்துபடாது அடகு தின்று உயிர் வாழ்கின்றாரென்பதோர் பொருள் தோன்ற நின்றது (உ.வே. சாமிநாதையர், 1935:69).*

*மேலும், இவ்வரசன் பகைவரைப் போரில் கொன்ற பொழுது, அவர் தம் மனைவியர் கைம்மையை நோற்பதன் பொருட்டு, மார்பில் அடித்துக் கொண்டு கரிய மயிரினைக் கொய்து நீக்குகின்றனர். அவர்களின் செயலை,*

**நிலைதிரிபு எறிய, திண்மடை கலங்கிச்**
**சிதைதல் உய்ந்தன்றோ, நின்வேல் செழிய!**
**முலை பொலி ஆகம் உருப்ப நூறி,**
**மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்**
**ஒள்நுதல் மகளிர் கைம்மை கூர,**
**அவிர் அறல் கடுக்கும் அம் மென்**
**குவை இருங் கூந்தல் கொய்தல் கண்டே** (புறம்.25:8–14)

*என்ற பாடலின் மூலம் கல்லாடனார் உணர்த்துகின்றார். இதில் நெடுஞ்செழியன் அப்பெண்டிரின் துயரத்தால், பகைவரைக் கொல்லும் தன் வேலைச் செலுத்தாது விடுகின்றான் என்கிறார். இது அவன் அருள் உள்ளத்தை வெளிப்படுத்துகிறது என்று கூறி அமைகிறார்.*

*போர் முடிவில் வீரனொருவன் போர்ப்புண் பட்டு இறுதி நிலையில் இருந்தான். எவ்வகையிலும் இறுதி எய்துவான் என்பதைப்*

பலகுறிகளால் அவன் மனைவி உணர்ந்து கொண்டாள். தன் தலைவனின் நிழலில் வாழ்ந்த துடியன், பாணன், விறலி முதலியோர் வாழ்வு அவன் இன்மையால் சீர் குலையும் என்று நினைக்கின்றாள். தலைவன் இல்லாது இவர்கள் இங்கிருந்து வாழ்வது அரிது. அதனைவிட அரிது யான் உயிர் வாழ்ந்திருப்பேன் என நினைப்பது என்று மனம் வெதும்புகிறாள், அவளின் வெதும்பலை, மாறோக்கத்து நப்பசலையார்,

**துடிய பாண பாடுவல் விறலி**
**என்னா குவிர்கொ லளியிர் நுமக்கும்**
**இவணுறை வாழ்க்கையோ வரிதே யானும்**
**மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்**
**தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்**
**சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணும்**
**கழிகல மகளிர் போல**
**வழிநினைந் திருத்த லதனினு மரிதே** **(புற.280:8–15)**

என்ற கூற்றின் வழி எடுத்துரைக்கின்றார்.

இங்கு அப்பெண் மனம் வெதும்பியிருப்பதற்குக் காரணம் அவள் பின்பற்ற வேண்டிய கைம்மை நோன்பு. கழுவுகின்ற மொட்டையான தலையினின்று நீர் ஒழுக, அல்லி யரிசியை உண்ணும் அணிகலன்களைக் கழித்து கைம்பெண்டிர் போல வாழ்தல் அரிதாகும் என்று அவளது மனக்கலக்கத்தைக் குறிப்பிடுகின்றார்.

### 4.1.4 வளமிழத்தல்

கணவன் உடனிருக்கும் போது செல்வவளம் உடைய இல்லம் அவன் இறந்ததும் வளமற்றதாகிறது. இல்லாதவர்க்குக் கொடுக்கும் தன்மை மிக்க மனை, தலைவன் மறைந்த பிறகு அந்நிலையை இழக்கிறது. தலைவனோடு சேர்ந்திருக்கும் பொழுது நலமுடன் இருந்த தலைவி, அவன் இறந்தவுடன் தன் வளமையான நலத்தை இழந்து நிற்கின்றாள். கணவன் இல்லாமையால் தலைமுடி மழிக்கப்பட்டு, அணிகலன் களையப் பெற்று பொலிவிழந்து நிற்கின்றாள். பொலிவிழந்து கலங்கிய அம்மனைவியை ஒப்ப அவனுடைய இல்லம் பொலிவற்றுக் காணப்படுகிறது. தலைவன் இறப்பிற்கு

முன்னும் பின்னும் அவனிருந்த வீட்டின் நிலையை, ஒப்பிட்டுக் காண்கிறார் ஆவூர் மூலங்கிழார். இதனை,

**நிரையிவட் டந்து நடுக லாகிய**
**வென்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்**
**கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய**
**கழிகல மகடூப் போல**
**புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே** (புறம்.261:15–19)

என்று தலைவனை இழந்த பேரில்லத்திற்கு மகளிரது பொலிவிழப்பினை உவமை காட்டுகின்றார்.

இவரைப் போன்று தாயங்கண்ணியாரும் கணவன் இருந்த பொழுது, செல்வ வளமுடையதாக இருந்த மனை, அவன் இறப்பிற்குப் பிறகு பொலிவிழந்து நின்றதைக் குறிப்பிடுகின்றார். தன்னால் புரக்கப்படுவோர் கண்ணீரை மாற்றிய குளிர்ந்த பந்தரையுடைய மனையிடம், அவனிறந்த பிறகு பொலிவிழந்து காணப்படுகிறது.

அம்மனையில் அவனது மனைவியும் பிள்ளைகளும் இருந்தனர். அவனது மனைவி மழித்த தலையும், வளைகழித்த வறுங்கையும், அல்லியரிசி உணவும் உடையவளாய் இருந்தாள். வெள்ளிய சோற்றைக் கொண்டு இனிய பாலை வேண்டும் புதல்வரின் தந்தை புறங்காட்டை அடைந்த பின் இந்நிலையுடையதாக அவனது மனை இருந்தது எடுத்துக் காட்டப்படுகிறது (புறம்.250).

கணவனை இழந்த கைம்பெண்ணொருத்தி, தான் இன்புறும் காலத்தும் துன்புறும் காலத்தும் துணையாக இருந்த ஆம்பலை நினைவு கூர்கிறாள். அவளின் இந்நினைவை ஒக்கூர் மாசாத்தனார்,

**அளிய தாமே சிறுவெள் ளாம்பல்**
**இளைய மாகத் தழையா யினவே, இனியே**
**பெருவளக் கொழுநன் மாய்தெனப் பொழுதுமறுத்**
**தின்னா வைக லுண்ணும்**
**அல்லிப் படூஉம்புல்லா யினவே** (புற.248)

என்று எடுத்துக்காட்டுகின்றார். பெரிய செல்வத்தையுடைய கணவன் இறந்த பிறகு, வேளை தவறி உண்ணும் நிலைக்கு அவள் ஆளாகின்றாள். அவளின் உணவாக அல்லி அரிசி அமைகின்றது.

இல்லம் செழிப்பாக இருக்கப் பொருள் வளம் தேவைப்படுகிறது. பொருள் ஈட்டுதல் ஆண்மகனுக்குரிய செயலாக அமைகிறது. மனையின் வளத்திற்கும் குடும்பத்தின் நலத்திற்கும் பொருள் அடிப்படையாக அமைகிறது. வாழ்வின் அடிப்படைக்குத் தேவையான பொருள் இல்லாத, பொருள் ஈட்டாத இல்லம் வறுமைக்கு உட்படுகிறது. இங்கு ஆடவனின் இறப்பு, அவன் வீட்டை வளமிழக்கச் செய்கிறது. வளமனை வளமிழப்பதோடு, அம்மனையில் வாழும் அவனது மனைவியும் வளமிழப்பவளாக அமைகிறாள். உலகியலில் பொருளில்வழி அறமும் இன்பமும் பெறுமாறு இல்லை. பொருட்குரிய ஆடவனான கணவன் இறந்தபின் அவன்வழி நின்று அறம் செய்து புகழ் வளர்த்துப் பொற்புறுவிக்கும் மனைவிக்கு வாழ்வில்லை (அவ்வை சு. துரைசாமிப் பிள்ளை, 1960:5) என்ற கருத்து இங்குப் பொருந்தி நிற்கிறது.

### 4.1.5 பருத்திப் பெண்டிர்

பொருள் தேடி வந்து பாதுகாக்கும் கணவனை இழந்த கைம்மை மகளிர் பஞ்சில் நூல் நூற்றனர். இதனைக் கபிலர்,

**ஆளில் பெண்டிர் தாளின் செய்த**
**நுணங்குநுண் பனுவல்** (நற்.353:1–2)

என்று எடுத்துரைக்கின்றார். தனிமைத் துயரினின்று நீங்கவும் பிழைப்பின் பொருட்டும் ஆடை நெய்ய நூல் நூற்றனர். நூல் நூற்கும் பெண்ணை,

**பருத்திப் பெண்டிர் பனுவல்** (புறம்.125:1)

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

கைம்மை மகளிர் நூல் நூற்கும் தொழில் மேற்கொண்டதை, இன்றைய நடைமுறையில் சேலம் மாவட்டக் கவுண்டர் இனத்தாரிடையே பழைய பருத்திப் பெண்டின் சென்று தேய்ந்து இற்ற பழக்கத்தின் எச்சமாக கணவனை இழந்த பெண்ணின் மங்கல அணிகளைக் கழற்றியபின் அவளைக்

குளிப்பாட்டுவர். குளிப்பாட்டும் போது அவளுக்கு வெண்சேலை கொடுப்பர். அப்போது நூற்புக் கதிரையும் பஞ்சையும் அவள் கையில் கொடுத்து "இந்தா பிடி கொல்லன் கருதும் (கதிரும்) கொரங்காட்டுப் (கரிசல்காடு) பஞ்சும் வைத்துப் பிழைத்துக் கொள் என்று கூறுவதாகக் கூறுவர் என்று கி. நாச்சிமுத்தின் கருத்து எடுத்துக்காட்டப்படுகிறது (க.காந்தி, 1980:102). மேலும் அவர் நூலின் அடிக்குறிப்பில்,

**கொல்லங் கொடுத்த கதிருக்கு**
**கொடுநாட்டுப் பஞ்சிருக்கு**
**நூறு வயசுக்கும் நூத்துப் பொழச்சிக்கம்மா**

என்ற பாடலை மேற்கோளாகக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இவ்வாறு கைம்மை மகளிரின் தொழிலாக, அவர்களின் வாழ்க்கைக்குப் பொருள் ஈட்டும் கருவியாக நூல் நூற்றல் அமைந்திருப்பதை இச்சான்றுகள் உணர்த்துகின்றன.

### 4.1.6 இழை நீக்குதல்

இழை நீக்கப்படுதல் என்பது கணவன் இறந்தவுடன் செய்யும் நிகழ்வாக அமைகிறது. சாதாரண பெண்ணிலிருந்து அரசமகளிர் வரை இழை நீக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. தொடிகழிமகளிர் (புறம்.238), குறுந்தொடிநீக்கி (புறம்.250), கழிகல மகளிர் (புறம்.280) என்று குறிப்பிடுவதன் மூலம் அவர்கள் அணிகலன்களை நீக்கியதை அறிய முடிகிறது.

வெளிமான் துஞ்சியபின் அவனது உரிமை மகளிர் வளையலை நீக்கினர். இதனைப் பெருஞ்சித்திரனார்,

**காடுமுன் னினனே கட்கா முறுநன்**
**தொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடி (புற.238:5-6)**

என்று அவன் பிரிவினால் அம்மகளிர் வளையல் நீக்குவதைக் காட்டுகின்றார். கரிகாற் பெருவளத்தான் இறந்தவுடன், அவனுடைய உரிமை மகளிர் அணிகலன்களை நீக்கியதை,

**மெல்இயல் மகளிரும் இழை களைந் தனரே (புற.224:17)**

என்ற வரியின் மூலம் கருங்குழலாதனார் எடுத்துக் காட்டுகின்றார். அரசன் இறந்தவுடன் அவனது உரிமை மகளிர் வளையல் மற்றும் அணிகலன்களை மட்டும் நீக்குகின்றனர். கைம்மைக்குரிய பிற முறைகள் காணப்படவில்லை.

அரசமகளிர் மட்டுமன்றி மற்ற மகளிரும் வளை நீக்கியிருந்ததை,

**பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்**
**வளைஇல் வறுங்கை ஓச்சி** (புற.253:4-5)

என்று குளம்பந்தாயனாரும்,

**இடைச் சுரத்து இறுத்த மள்ள விளர்த்த**
**வளை இல் வறுங்கை ஓச்சி** (புற.254:3-4)

என்று கயமனாரும் எடுத்துக்காட்டுகின்றனர். சுரத்தில் தன் கணவனை இழந்த பெண் வெளுத்த வளையில்லாத வெறுங்கையை உடையவளாகக் குறிக்கப் பெறுகின்றாள்.

கணவனது இறப்பின்போது மட்டுமல்லாமல், அவன் பிற பிரிவுகளுக்காக தலைவியை விட்டுச் செல்லும் போதும், மகளிர் அணிகலன்களை அணிவதற்கு விருப்பற்று இருந்திருக்கின்றனர். சான்றாக நெடுநல்வாடை,

**நெடுநீர் வார்குழை களைந்தென, குறுங்கண்**
**வாயுறை அழுத்திய, வறிதுவீழ் காதின்,**
**பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை**
**வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து** (நெடுநல்.139-142)

என்று தலைவனைப் பிரிந்த தலைவி அணிகலன்களைத் துறந்து காணப்படுவதைக் காட்டுகிறது.

### 4.1.7 கூந்தல் களைதல்

கைம்மையில் தலைமுடி களைதல் என்பது மறக்குடி சார்ந்த மனைவிக்கு, பிறபெண்களுக்கு உரியதாக இருந்தது (புறம்.25,புறம்.250, புறம்.261, புறம்.280). பண்டைத் தமிழகத்தில் இப்பழக்கம் இருந்ததை, கூந்தல் மழித்தல் ஆரியர்களின் பழக்கமன்று எனவும், தமிழகத்தில் சமண பௌத்தர்களின் வருகையினால் இப்பழக்கம் பரவியிருக்க வேண்டும் என்ற கே.கே. பிள்ளையின் கருத்தை எடுத்துக்காட்டி, சமண பௌத்தர்களின் தொடர்பினால் வடபுலத்தில் ஏற்படாத பழக்கம், தமிழகத்தில் மட்டும் எப்படி ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது தெரியவில்லை. எப்படியோ தமிழகத்தில் தோன்றி விட்டது என்பர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது (சி.ஈ. இராமச்சந்திரன், 1977:182,183).

அரசமகளிருக்கு இத்தகு செயல் இருந்ததாகக் குறிப்பிடப்படவில்லை. வெற்றி பெற்ற அரசன் தோல்வியுற்ற அரசனின் மகளிர்தம் கூந்தலைக் கொய்யும் வழக்கம் இருந்துள்ளது. சான்றாக,

**விரி உளைப் பொலிந்த பரியுடை நன்மான்**
**வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்**
**கூந்தல் முரற்சியின் கொடிதே** (நற்.270:8-10)

என்ற நற்றிணை பாடல் நன்னன் என்ற மன்னன் தோற்ற வேந்தனது உரிமை மகளிர் கூந்தலை மழித்து கயிறு திரித்ததைக் குறிப்பிடுகின்றது.

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தின் பதிகம் கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் பெண்களின் கூந்தலைக் கயிறாகத் திரித்தான் என்கிறது. இதனைப் பரணர்,

**பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்**
**முழாரை முழு முதல் துமியப் பண்ணி,**
**வால்இழை கழித்த நறும் பல் பெண்டிர்**
**பல் இருங் கூந்தல் முரற்சியால்**
**குஞ்சர ஒழுகை பூட்டி** (பதிற்.ஐந்தாம்பத்து பதிகம்:13-17)

என்று சான்றுரைக்கின்றார். இச்சேரன் பழையனின் மனைவியரின் கூந்தலை நீக்கினான். அப்பெண்களின் கூந்தலைக் கொண்டு திரிக்கப்பட்ட கயிற்றினால் யானைகளை வண்டியில் பூட்டினான். உரிமை மகளிரின் கூந்தலைக் கொய்வது, தோற்ற மன்னனின் உரிமையைப் பறிப்பதாகக் கருதப்பட்டது.

கூந்தல் மழிக்கப்பட்ட செயல், வெற்றி பெற்ற அரசன் தோற்ற வேந்தனது மகளிரைத் தண்டித்து அதன் வழியே தோற்றக் குடியை அவமானப்படுத்தும் அடையாளச் செயலாகச் சங்க காலத்தில் வழக்கத்தில் இருந்தது. கைம்மையில் பெண் தனது கூந்தலைக் களைவதை அவள் தனது சடங்கு வகைப்பட்ட அடையாளமாகக் கருதலாம் (ராஜ்கௌதமன், 2006:97). கூந்தல் உரிமை தலைவனுக்கு உரியது. கணவனுக்கு உரிமையுடைய கூந்தலை இழப்பதன் மூலம் தன் உயிரையே கணவனுக்குத் தியாகம் செய்வதாக நம்பினர். கூந்தல் இழப்பது உயிரை இழப்பதற்கு இணையாகக் கருதப்பெற்றிருக்க வேண்டும்.

### 4.1.8 பிண்டம் இடல்

கணவன் இறந்தபின் தன் நலன்களையெல்லாம் இழக்கின்ற பெண், அவனுக்காக மேலும் துயரடைகின்றாள். கைம்மை நோன்பை மேற்கொண்ட ஒரு பெண், தன் கணவன் விண்ணுலகு சென்றபின் அவனுக்கு உணவிட விரும்புகின்றாள். உணவு படைப்பதற்காக ஒரு சிறிய இடத்தை ஆவின் சாணம் கொண்டு மெழுகுகிறாள். அப்பொழுது அவள் மனம் கணவனை நினைத்து வருந்தியது. கண்ணீர் சொரிந்தாள். தன் கண்ணீருடன் அவ்விடத்தை மெழுகும் தன்மையுடைய அவள் இரங்கத்தக்கவளாக இருக்கின்றாள். அவளின் இத்தன்மையைத் தும்பிசேர் கீரனார்,

**அடங்கிய கற்பி னாய்நுதன் மடந்தை**
**உயர்நிலை யுலக மவன்புக வார**
**நீறாடு சுளகிற் சீறிட நீக்கி**
**அழுத லானாக் கண்ணள்**
**மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே** (புற.249:10–14)

என்ற பாடலின் மூலம் எடுத்துக் காட்டுகின்றார். இதில், அவள் அழுகின்ற வேதனையை மெழுகு மாப்பிகண் கலுழ்நீரானே என்ற வரி உணர்த்துகின்றது.

இப்பாடலில் இழவு பற்றிய அவலம் உள்ளது. மெழுகு மாப்பிகண் கலுழ்நீரானே என்புழிக் கணவனை யிழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகுகின்றா ளென்றமையின் இது தன் கட்டோன்றிய இழவு பற்றிப் பிறந்த அவலச் சுவையாயிற்று (உ.வே. சாமிநாதையர், 1935:446). கணவனையிழந்த பெண்ணின் துன்ப மிகுதியை இப்பாடல் வழி அறியமுடிகிறது.

இறந்தவர்களை நினைவு படுத்தும் வகையில், அவர்கள் விரும்பும் உணவைப் படைத்து வழிபடுவதைப் பழந்தமிழர் கடமையாகக் கொண்டிருந்தனர். தம் குடியில் இறந்த முன்னோர்களுக்கு அருங் கடன் இறுக்கும் (புறம்9:3) வழக்கம் இருந்தது. இறந்தவர் நினைவாக நடுகல் வழிபாடும் (புறம்.232) இருந்தது. நடுகல்லாயினானைத் தெய்வமாக்கி, அவன் விரும்பும் உணவைப் படைத்துப் பரவுவது பண்டையோர் வழக்கு (ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை, பகுதி-II,2002:72). அவ்வகையில் இறந்த கணவனுக்கு உணவிடுதலைக்

கடமையாகக் கொள்கிறாள். அவளின் வழிபடும் இத்தன்மை பிற்கால தெய்வ வழிபாட்டிற்கு வழி வகுக்கிறது. இப்பெண்ணின் செயல், குடும்பத்தில் நடைபெறும் தெய்வ வழிபாட்டிற்கும், குடிதெய்வ வழிபாட்டிற்கும் அடித்தளமிடுகிறது. இன்று நடைபெறும் வீட்டுத் தெய்வ வழிபாடு, குலதெய்வ வழிபாடு என்ற பெயரில் குடும்பத்தில் இடம்பெறுபவை கைம்பெண்டிர் தலைவனின் நினைவாகக் குடும்பத்தில் வழிபட்டதன் தொடர்ச்சியே எனக் கருத இடந்தருகிறது (அ.ஆறுமுகம், 1994:69) என்ற கருத்து கருததக்கதாக உள்ளது. கைம்பெண்ணின் வாழ்க்கை, கணவனை நினைத்து வாழும் வகையில் அமைகிறது.

### 4.1.9 கைம்மை பற்றிய கூற்றுகள்

கைம்மையானது பெண்ணின் வாழ்வியல் இன்பத்தை அழித்தது. சமூகத்தில் குறைந்த மதிப்பீட்டையும் சிறுமையையும் உண்டாக்கியது. இத்தகைய மறைமுகமான ஒடுக்கத்திற்கும், பரிதாபத்திற்கும் உரிய கைம்பெண்டிரின் நிலையை ஆசிரியர்கள் பின்வரும் கூற்றுகளின் மூலம் எடுத்துரைக்கின்றனர்.

கணவனை இழந்த கைம்பெண்ணின் கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி, அல்லி உணவினைத் தந்த அவல நிலையைக் காணும்போது . . . சமூக ரீதியில் பெண்களுக்கு சமுதாயம் முழு உரிமை அளிக்கவில்லை என்றே தோன்றுகிறது (மகா. வேங்கடராமன், 1989:223). மன்னவி என்பவள் கணவனின் உரிமைப் பொருள். உடைமைப் பொருள். கணவன் இறந்துவிட்டால் அவளுக்கு வாழ்க்கையில்லை. சிறுமை அவளை வந்தடையும். ஆகவே சங்க இலக்கியம் இத்தகைய பெண்களைக் கைம்பெண் . . . என்று குறிப்பிட்டது. கைம்பெண் என்ற சொல்லுக்கு இணையாகக் கையாண் என்ற சொல் தமிழில் உருவாகவில்லை. ஏனெனில் மனைவியின் இழப்பு ஒருவரின் வாழ்வில் பெரும்பாதிப்பை உண்டாக்கவில்லை என்று கருத்துரைத்து, மேலும் தொடர்ந்து இத்தகைய விதிகள் புலனடக்கத்திற்காக விதிக்கப்பட்டிருந்தன. அவளுடைய அழகால், அடுத்த ஆடவனின் கற்பு கெட்டுவிடக் கூடாதே என்ற அக்கறையால் எழுந்த விதிகள். இவை ஆணாதிக்க சமுதாயத்தின் அடக்குமுறையின் எதிரொலிகள் (சக்தி பெருமாள், 1993:128-130).

இதே கருத்தை அடியொற்றி, கணவன் இருந்தால் அவன்தன் மனைவியின் அழகை ரசிப்பான். ஆனால் அவன் இறந்துவிட்டால் அவளின் எழிலை மற்றவர் ரசிப்பர். இதனால் அவர்களை இப்படி அலங்கோலப் படுத்தினால் மற்றவர் அவளைக் காணவும் விரும்ப மாட்டார்கள் என்று ஒரு பெண்ணின் எதிர்கால வாழ்வின் சுகத்தைக் கெடுத்தனர் (அ. ஜெயக்குமார், 1999:50).

சங்க காலத்தில் தம் கணவனை இழந்த மகளிர் திருமணம் செய்து கொள்ளாமல் கடுமையான கைம்மை நோன்பு மேற்கொண்டு தம் வாழ்நாளைக் கழித்தனர். இது பழங்காலத் தமிழ் மகளிர்க்குரிய பண்பாடாகவே அமைந்துள்ளது (செ.பழனிச்சாமி, 1989:76) என்ற கூற்றை மறுக்கும் வகையிலும் கருத்து அமைந்துள்ளது. புறநானூறு பெண்களின் சதியையும் கைம்மை கொடுமையையும் அவள் அத்தகைய கைம்மை கொடுமையை அனுபவித்து உயிர் வாழ்ந்தால் அடுத்த பிறவியில் அவளுக்கு அது அவனையே கணவனாக அடையும் வாய்ப்பைத் தரும் என்று நம்பப்படுவதையும் முனைவர்கள் பலர் அது கைம்மை நோன்பு என்றும் சங்ககாலம் வழக்கம் என்றும் சொல்வது கண்டு வெட்கப்படுகிறேன். வேதனைப் படுகிறேன் என்று கூறி, மேலும் தொடர்ந்து கைம்மை கொடுமையைக் கைம்மை நோன்பு என்றும் அக்கால வழக்கம் என்றும் அறிஞர்கள் பலர் கூறுவதை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. ஒரு ஆய்வின் நோக்கமே ஏன் என்ற கேள்விக்கு விடையாக இருக்க வேண்டுமே ஒழிய பழக்கவழக்கத்தைப் பட்டியலிடுவது அல்ல. ஏன் விதவையான பெண்ணுக்கு மட்டும் அத்தகைய கொடுமையான பழக்கம் ஏற்படுத்தப்பட்டது என்ற கேள்வி முன்வைக்கப்படுகிறது.

பிறகு அதற்கு விடையளிக்கும் வகையில் க. திலகவதியின் கூற்றை எடுத்துரைக்கின்றார். கணவர் இறக்க இறந்த நிலையில் காமுறுதல், காமுறப்படல், தன்பால் தோன்றாமைக்கு உதவும் வகையில் மனைவியின் செயல்கள் கைம்மை நோன்பின் நிகழச்சியாயின. கணவன் இறந்த நிலையில் தாம் விரும்பி ஏற்றுக் கொண்ட அச்செயல்கள் காலப் போக்கில் கைம்மைக்குச் சமுதாயம் விதித்தது போலாயின என்ற கூற்றைப் போல தாமே விரும்பி ஏற்றுக் கொண்டவையாயிருக்க முடியாது. ஏற்றுக் கொள்ள வைக்கப்பட்டவையாகவே இருக்க முடியும் (சரோஜா பாண்டியன், 2002:112,115).

கைம்மை செயல் பெண்களுக்குப் பாலியல் கட்டுப்பாட்டை ஏற்படுத்தியது. கூந்தல், அணிகலன், தொடி, வளை களைதல், உணவில் கட்டுப்பாடு, உறக்கத்தில் கட்டுப்பாடு, உடலை வருத்தும் செயல்கள் எல்லாமே அவளது பாலியல் செயலைக் காயடிப்புச் செய்பவையாக உள்ளன (ராஜ் கௌதமன், 2006:96).

மேற்கூறிய கூற்றுகளின் மூலம் கைம்மை மகளிர் தோற்றக் கட்டுப்பாடும், மனக்கட்டுப்பாடும் கொண்டு வாழ்வின் மகிழ்ச்சியைத் துறந்து எதிர்கால வாழ்க்கையற்றவர்களாக இருந்துள்ளனர் என்ற உண்மை பெறப்படுகிறது.

கணவன் இறந்தவுடன் அப்பொழுதே அன்றைக்கே இறக்கும் பெண்ணின் அன்பு சார்ந்த மனத்துயரம், இறக்காமல் கைம்மையில் உணவிற்காக இருப்பிடத்திற்காக தம் உடல் மற்றும் உள்ளம் சார்ந்த நலன்களைப் பொலிவுகளை இழந்து வாழ்க்கையில் நாள்தோறும் எதிர்நோக்கும் துன்பமிகுதி என இவ்விரண்டின் வகையில் அப்பெண்களின் வாழ்க்கை பண்டைத் தமிழகத்தில் அமைந்திருந்தது எனலாம்.

தொடக்கத்தில் கணவனை இழந்தவழி அணிகலன்கள் களையப் பெறுதல் அடுத்து வரும் காலத்தில் நிலையாகவும் முழுமையாகவும் களையப் பெற்றிருக்க வேண்டும். பிற்காலத்தில் இம்முறை கைம்மை வாழ்வின் ஒரு கூறாக உருப்பெற்றிருக்க வேண்டும்.

இன்றைய சமுதாயத்தில் வேறுசில மாற்றங்களைக் கொண்டு பூ சூடுதல், திலகம் இடுதல், போன்றவை களையப் பெறுகின்றன. இவை தொன்றுதொட்டு இன்றளவும் கணவனை இழந்த பெண்களின் வாழ்க்கையில் தொடர்ந்து வரும் அவலங்களாக உள்ளன.

## 4.2 உயிர் விடுதல்

கணவனை இழந்த பெண்கள் தங்களைத் தாமே வருத்திக் கொள்கின்றனர். கணவன் உயிர் துறந்த செய்தியைக் கேட்டதும் தம் உயிரை விடுகின்றனர். உயிர்விடும் நிலையைத் தொல்காப்பியம் மூன்று நிலைகளில் குறிப்பிடுகின்றது (தொல்.பொருள்.79). அவை,

1. ஆஞ்சிக் காஞ்சி

2. தலையொடு முடிதல்

3. மூதனர்ந்தம்

என்பனவாகும். இவற்றில் ஆஞ்சிக் காஞ்சி என்பது கணவனைக் கொண்ட வேலினாலே தன் உயிரை மாய்த்துக் கொள்வது. முடிநிலை என்பது இறந்த கணவனது முகத்தைத் தன் முகத்தோடும் மார்போடும் சேர்த்து அழுது உயிர் துறப்பது. மூதானந்தம் என்பது உயிர் துறந்த கணவனோடு மனைவியும் உயிர் நீத்தலைச் செல்வோர் கூறுவது. இம் மூன்றும் கணவனை இழந்த மனைவியர் உறும் கலக்கமாக காஞ்சித்திணையின் துறைகளிலே தொல்காப்பியர் எடுத்துக் காட்டியுள்ளார். கணவன் மனைவியாக வாழ்கின்ற இல்வாழ்க்கையில் பெண்ணானவள் சிறந்த நிலையில் இருந்தாள். கணவன் மனைவிக்கு உரியவனாக, மனைவி கணவனுக்கு உரியவளாக ஒன்றிணைந்த வாழ்க்கையைக் கொண்டிருந்தனர். கணவன் உடன் இருக்கையில் இல்லறத்திற்கு விளக்குப் போலத் திகழ்ந்தாள்.

கணவன் இருக்கும் பொழுது சிறப்பான வாழ்வை உடைய அவள், கணவன் இறந்த பிறகு, வாழ்க்கைக்கு இயலாதவளாகிறாள். இன்ப வாழ்க்கை மாறி துன்ப வாழ்க்கையை மேற்கொள்கிறாள். கணவனின் இறப்பு பெண்ணின் வாழ்க்கையை மாற்றி அமைக்கிறது. கணவன் இறந்தபின்னர் பெண்ணின் வாழ்க்கை இருவகையில் அமைகிறது.

1. கணவனுடன் உயிர் விடுதல்

2. கைம்மை நோன்பு கொள்ளல்

முதல் நிலையில் அவளின் வாழ்வு முடிவடைகிறது. அடுத்த வகையில் உயிரோடிருந்து துன்புறும் நிலையைத் தொடரச் செய்கிறது.

### 4.2.1 பொருள் வேறுபாடு

இத்துறைகளின் விளக்கத்தில் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் சில இடங்களில் பொருள் காண்பதில் வேறுபட்டுள்ளனர். குறிப்பாக, நீத்த கணவன் றீர்த்த வேலிற் பேஎத்த மனைவி ஆஞ்சிக் காஞ்சி

என்பதற்கு நச்சினார்க்கினியர் உயிர் நீத்த கணவன் தன்னுறவை நீக்கின வேல் வடுவாலே மனைவி அஞ்சின ஆஞ்சிக் காஞ்சி எனப்படுகிறது (எஸ். கனகசபாபதி பிள்ளை,1934: 306). தன்னை நீத்த கணவன் வேலினானே மனைவி தன் உயிரையும் பெயர்த்த ஆஞ்சியும் என்றுரைக்கிறார் இளம்பூரணர் (மு. சண்முகம்பிள்ளை,2003:145).

நீத்த கணவற்றீர்த்த வேலிற் பேர்த்த மனைவி ஆஞ்சி என இத்தொடரைச் சந்தி பிரியாத நிலையிற் கொண்டு நோக்கினால்தான் இதன் பொருள் உள்ளவாறு விளங்கும். போர்க்கருதித் தன்னைப் பிரிந்து சென்ற கணவனது உயிரைப் போக்கிய வேலினாலேயே அவன் மனைவி தன்னுயிரையும் போக்கிய ஆஞ்சிக் காஞ்சியும் என்பது இத்தொடரின் பொருளாகும். இப்பொருளுக்கு ஏற்ற இலக்கியமாக இளம்பூரணர் காட்டிய வெண்பாமாலைப் பாடல் அமைந்திருந்ததால் இதுவே அவருரையின் கருத்தாகக் கொள்ள வேண்டியுள்ளது. பெயர்த்த என்பது எதுகை நோக்கி பேர்த்த எனத் திரிந்தது. பெயர்த்தல்-அப்புறப்படுத்தல், ஈண்டுத் தன் உடம்பினின்றும் உயிரைப் போக்குதல் என்ற பொருளில் ஆளப்பெற்றது (க.வெள்ளைவாரணன்,1983:239) என்று இளம்பூரணர் உரையே கொள்ள தக்கது என்பது சான்றுடன் காட்டப்படுகிறது.

தொல்காப்பியத்தைப் போன்றே புறப்பொருள் வெண்பாமாலையும் இறந்த கணவனுக்காக பெண்கள் அடையும் துன்பத்தை எடுத்துக்காட்டுகின்றது. காஞ்சித் திணையின் இருபத்திரண்டு துறைகளுள் ஒன்றாக ஆஞ்சிக் காஞ்சி உள்ளது. தன் கணவனோடு நெருப்பில் அழுந்தும் பெண்ணின் மிகுதியைச் சொல்வது ஆஞ்சிக்காஞ்சியாகும். இதனை,

**காதற் கணவனொடு கனைஎரி மூழ்கும்**
**மாதர்மெல் லியலின் மலிபுரைத் தன்று (புற.வெ:82)**

என்றும்,

**மன்னுயிர் நீத்த வேலின் மனையோள்**
**இன்னுயிர் நீப்பினு மத்துறை யாகும் (புற.வெ.83)**

என்றும் பாடல்கள் குறிப்பிடுகின்றன. தன் கணவன் உயிரைப் போக்கிய வேலினைக் கொண்டு மனைவி தன் உயிரைப் போக்கிக் கொள்வதும் அத்துறையின் பாற்படுவதை விளக்குகிறது.

இது தொல்காப்பியம் குறிப்பிடும் ஆஞ்சிக் காஞ்சியின் துறையோடு ஒத்திருந்தாலும், கனையெரி மூழ்கும் இயல்பால் வேறுபட்டுள்ளது. மேற்கூறிய இவ்விலக்கணச் சான்றுகள் பழந்தமிழ் சமுதாயத்தில் கணவனுடன் உயிர்விடும் நிலையை மெய்ப்பிக்கின்றன. மேலும் இந்நிலையின் தோற்றம் தொல்காப்பியர் காலத்திற்கு முந்தைய சமுதாயத்தில் தோன்றி விட்டதைக் காணமுடிகிறது.

### 4.2.2 உயிர் விடுதலின் நிலைகள்

கணவனுடன் சேர்ந்து உயிர் விடுதலில் மூன்று நிலைகள் உள்ளன. அவை,

1. உடனுயிர் விடுதல்
2. தாழியில் அடக்கமாதல்
3. தீப்பாய்தல்

என்பனவாகும்.

#### 4.2.2.1 உடனுயிர் விடுதல்

உடனுயிர் விடுதல் என்பது கணவனது இறப்பினை அறியும் நிலையில் உயிர் விடுதலாகும். இதனை, உயிர் துறந்தமை அறிந்து துக்கம் தாங்காமல் உயிர் துறத்தலுக்காக எவ்வித முயற்சியையும் கைக் கொள்ளாமல் மனைவி உயிர்விடுதலாகும் (க. காந்தி, 1980:95). இதைத் தற்கொலையாகக் காட்டும் கருத்தும் காணப்படுகிறது. குருதிப் படையலிருந்தும் உயிர்ப்பலியிலிருந்தும் தற்கொலை வழக்கம் உருப்பெற்று முறையுறுத்தப் பெற்ற பின்னர் அது பல வகைகளாகப் பிரிந்தது. அப் பல வகைகளுள் ஒன்றே கணவனுடன் உயிர்விடும் தற்கொலை வழக்கமாகும் (சிலம்பு நா. செல்வராசு, 2009:118).

கணவனுடன் இணைந்திருக்கும் வாழ்வினையே பெண்கள் விரும்பினர். சான்றாக குறுந்தொகை தலைவி ஒருத்தி,

**இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கியரென் கணவனை** **(குறு. 49:3–4)**

என்று மறுமையிலும் அவனைத் தன் கணவனாகப் பெற்று வாழ விரும்புகின்றாள்.

இறப்பதற்கு அஞ்சவில்லை. இறந்தால் வேறு பிறப்பு உண்டாகும். அப்பிறப்பில் தன் கணவனை மறக்க நேரிடுமோ என்று ஒரு தலைவி அஞ்சுகின்றாள். இதனை நற்றிணை,

**சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்**
**பிறப்புப்பிறி தாகுவது ஆயின்**
**மறக்குவேன் கொல்லென் காதலன் எனவே** (நற்.397:7-9)

என்று கணவனைப் பிரியாது தொடர்ந்து வாழ எண்ணும் பெண்ணின் மன உணர்வை எடுத்துக்காட்டுகிறது. ஒருவனைத் தனது கணவனாகப் பெறுகின்ற ஒருத்தி, அவனே மறுமையிலும் தன் கணவனாக அமைய வேண்டும் என்று எண்ணுகின்றாள். இத்தகைய எண்ணம், அவன் இறந்தவுடன் இறப்பின் ஆற்றாமைத் தாங்காது உயிர்விடும் நிலையைத் தோற்றுவித்தது எனலாம்.

கணவனோடு உயிர் நீங்கும் மனைவியரின் நிலையைப் புறநானூறு எடுத்துக்காட்டுகிறது. குடக்கோ நெடுஞ்சேரலாதனும் பெருவிறற் கிள்ளியும் போரிட்டு இறக்கின்றனர். அவர்தம் மனைவியர் தம் கணவரின் மார்பினைச் சேர்ந்து உயிர் நீங்குகின்றனர். இதனைக் கழாத்தலையார்,

**அறத்தின் மண்டிய மறப் போர் வேந்தர்**
**தாம் மாய்ந்தனரே,** . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . **பெண்டிரும்**
**பாசடகு மிசையார், பனிநீர் மூழ்கார்,**
**மார்பகம் பொருந்தி ஆங்கு அமைந்தனரே** (புறம்.62:7-15)

என்ற பாடலின் மூலம் உணர்த்துகின்றார்.

கணவன் இறந்தவுடன் பசிய கீரைகளை உண்ணுதல், குளிர்ந்த நீரில் நீராடுதல் போன்ற செயல்கள் கைம்மையில் நடைபெறுவதால் அதனை மேற்கொள்ளாது உயிரிழக்கின்றனர். மறுமையில் கணவனுடன் இணைந்து வாழ வேண்டும் என்ற நம்பிக்கையால், கைம்மையுறாது உயிர்விடுதலை ஏற்கின்றனர்.

#### 4.2.2.1.2 மலை பாய்தல்

மலையிலிருந்து வீழ்ந்து உயிர் துறத்தலாகும். உயிர் விடுதலில் மலை பாய்தலும் அமைகிறது. இம்முறையில் உயிர் துறத்தலைக் குறுந்தொகை,

விலங்கினத்தின் செயலோடு பொருத்திக் காண்கிறது. ஆண் குரங்கு இறந்தவுடன், அதன் பிரிவைத் தாங்க இயலாத பெண் குரங்கு மலைப் பக்கத்தில் தாவி உயிரை விடுகின்றது. இதனைக் குறுந்தொகை,

**கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்**
**கைம்மை யுய்யாக் காமர் மந்தி**
**கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி**
**ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்**

**(குறு. 69:1–4)**

என்ற பாடலின் வழி எடுத்துக் காட்டுகின்றது. கைம்மை துன்பத்தைப் போக்க முடியாத பெண் குரங்கு, மரமேறுதல் முதலிய தம் தொழிலைக் கல்லாத குட்டியைச் சுற்றத்திடம் ஒப்படைத்து உயிர் விடுகின்றது. இது தாங்க முடியாத துக்கத்தால் ஏற்படும் நிகழ்வாக இருந்தாலும், இந்நிகழ்வைப் பெண் விலங்கினத்தின் வழி காட்டியுள்ளது, அச்சமூக அமைப்பினை விளக்குவதாக உள்ளது.

குழந்தையின் வளர்ப்பு, அதன் எதிர்கால வாழ்க்கை பற்றிய சிந்தனையின்றி, கணவன் இறந்த பின்னர் மனைவி உயிர்வாழ்தல் கூடாது என்ற சமூகத்தின் எண்ணத் தூண்டலை இந்நிகழ்வு உணர்த்துவதாக உள்ளது.

### 4.2.2.2 தாழியில் அடக்கமாதல்

இறந்தவரின் உடலைப் பானையின் உள்ளே வைத்து புதைத்தலைத் தாழி என்பர். இறந்தவரின் உடலைப் புதைப்பதற்கு மேற்கொண்ட மற்றொரு முறை தாழியில் இட்டு புதைத்தலாகும். பழந்தமிழகத்தில் போரிடை இறந்தவரை ஈமத்தே தாழி கவித்து வைப்பர். தாழியாகிய கலத்தைச் செய்பவன் ஊர்க்குயவன்.

இறந்த ஆடவனின் உடலைத் தாழியில் இட்டு புதைப்பது போன்று கணவனையிழந்த ஒரு பெண், தன்னையும் தாழியில் இடுமாறு வேண்டுகிறாள். போரில் விழுப்புண் பட்டு அவள் கணவன் உயிர் நீங்கி கிடக்கின்றான். அதனால் தனிமையுற்ற அவன் மனைவி ஊர்க்குயவனிடம் தன் வேண்டுகோளை முன் வைக்கின்றாள். அவள் ஊர்க்குயவனை நோக்கி,

**கலம்செய் கோவே! கலம்செய் கோவே!**
**அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய**
**சிறுவெண் பல்லிபோல தன்னொடு**
**சுரம்பல வந்த எமக்கும் அருளி,**
**வியன்மலர் அகன் பொழில் ஈமத்தாழி**
**அகலிதாக வனைமோ**
**நனந் தலை மூதூர்க் கலம்செய் கோவே!** (புறம்.256)

என்று தனக்கும் சேர்த்து தாழியை வனையுமாறு கேட்கின்றாள். அவனிடமிருப்பது ஒருவரைக் கவித்தற்குரிய அகலமுடைய தாழி. ஆனால் அவள் தன்னையும் சேர்த்து ஒருங்கே கவிக்கக் கூடிய அகலமுடைய தாழியைச் செய்ய வேண்டுகிறாள்.

தாழியைப் பற்றி, பெரிய தாழியில் இறந்தவர் உடல் உட்கார்ந்திருக்கும் நிலையில் வைக்கப்பட்டது. அத்தாழியில் சிறிதளவு மணல் இடப்பட்டது. அதன் பின்னர் ஒருதட்டில் அரிசி முதலிய தானியங்கள் சிறிதளவு வைக்கப்பட்டன. . . . பின்னர் தாழி ஒரு மண் மூடி கொண்டு மூடப்பட்டது. இவ்வளவும் ஆன பிறகு தாழி வைக்கப்பட்ட குழி ஒரு கற்பலகையால் மூடப்பட்டது. பின்னர் மிகுதியான மணல் இடப் பெற்று மற்றொரு முட்டை வடிவுடைய கற்பலகை அம்மணல் மீது வைக்கப்பட்டது. தாழியின் உயரம் நான்குஅடி, அகலம் 3லு அடி (மா. இராசமாணிக்கனார், 1969:31-32) என்றும் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது.

இதில் இறந்தவரின் உடலைத் தாழியில் இடுவதைக் குறிப்பிடுகின்றார். இறந்தவர் உடலை இடாமல், அவரை எரித்த சாம்பலை இடுவதையும் குறிப்பிட்டுள்ளார். இதற்கு திருவிதாங்கூரைச் சான்று காட்டியுள்ளார். இது பண்டைச் சேரநாட்டின் பெரும்பகுதியாகும். இப்பகுதியில் மலைகள் பல. அம்மலைகள் மீதும், அவற்றை அடுத்துள்ள இடங்களிலும் பழைய கற்கால மனிதரும் புதிய கற்கால மனிதரும், இரும்புக்கால மனிதரும் இருந்தமைக்குரிய சான்றுகள் கிடைத்த வண்ணமிருக்கின்றன. அம்மக்கள், இறந்தவர்களின் உடல்களை எரித்து உண்டான சாம்பலையும் எலும்புகளையும் பெரும் தாழிகளில் அடைத்து, அவ்விறந்தவர் பயன்படுத்திய பலவகைக் கருவிகளும் பாண்டங்களும் பிறவும் அத்தாழிகளுள் அடக்கிப் புதைத்தனர்

(மா.இராசமாணிக்கம் பிள்ளை,1941:54). இங்கு, இப்பெண் எம் முறையில் இறந்தாள் என்று சான்றுகள் இல்லை. உயிரோடு தாழியில் வைக்கப்பட்டாளா அல்லது இவளது உயிர் நீங்கிய பின் தாழியில் அடக்கமானாளா என்பது தெரியவில்லை. ஆனால் கணவனுடன் சேர்ந்து அவள் தாழியில் அடக்கமானதை அறிய முடிகிறது.

### 4.2.2.3.1 தீப்பாய்தல்

இறந்த தன் கணவனோடு ஈமத் தீயில் பாய்ந்து உயிர்விடல் தீப்பாய்தலாகும். பெரும்பாலும் அரச மகளிர் இவ்வழக்கத்தினைக் கொண்டிருந்தனர். கணவனின் மறைவு தாங்க முடியாத துயரத்தைத் தரும் என்பதால் தீயில் பாய்ந்து உயிர்விட்டனர். இவ்வாறு உயிர் விடுவதை அழல் புகுதல், தீப்பாய்தல், எரிமூழ்குதல் என்ற சொற்களால் குறித்தனர். தொல்காப்பியம்,

**நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇ (தொல்.புற.79)**

என்று அழல் புகுதலைக் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியத்தில் தீப்பாய்தல் என்ற சொல்லாட்சி காணப்படுகிறது. புறநானூற்று பாடலின் (புறம்.246, 247) அடிக்குறிப்பில் பூதப்பாண்டியன்றேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது (உ.வே. சாமிநாதையர், 1935:442) என்றும் அவள் தீப்பாய்வாளைக் கண்டு மதுரைப் பேராலவாயார் சொல்லியது (உ.வே. சாமிநாதையர், 1935:444) என்றும் குறிப்புகள் காணப்படுகின்றன. புறப்பொருள் வெண்பாமாலை,

**காதற் கணவனொடு கனையெரி மூழ்கும் (புற.வெண்.82)**

என்று எரிமூழ்குதலை எடுத்துக்காட்டுகிறது. இச்சான்றுகளின் மூலம் பழந்தமிழகத்தில் தீப்பாய்தலைக் குறிக்க இச்சொற்கள் வழக்கத்தில் இருந்தன எனலாம்.

### 4.2.2.3.2 உடன்கட்டை ஏறுதல்

கணவனது சிதைத்தீயில் மனைவி வீழ்ந்து இறப்பதை உடன்கட்டை ஏறுதல் என்பர். இறந்த கணவனுடன் ஒன்று கூடித் தீயில் உயிர்விடுதல் உடன்கட்டை ஏறுதலாகும் (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, 1997:29). இதனை, வடமொழியில் ஸதி என்ற சொல்லால்

குறித்தனர். சங்க இலக்கியத்தில் குறித்த தீப்பாய்தல் என்ற சொல் வழக்கத்திலிருந்து மாறி உடன்கட்டை ஏறுதல் என்பது பெருவழக்காக மாறியது. தீப்பாய்தல் என்ற சொல் பொதுக்குறியீடாக நின்று தீயில் பாய்ந்து தற்கொலை செய்து கொள்ளும் அனைவர் தம் செயலையும் குறித்தது. கணவனுடன் உயிர் விடுதல் என்பதன்றி வேறுபல காரணங்களுக்காகவும் தீக்குளித்தல் நடைபெற்றது. . . .பல்வேறு காரணங்களுக்கானத் தீக்குளித்த நிகழ்வுகளிலிருந்து கணவனோடு உயிர்விடும் நிகழ்வைத் தனித்து உணர்த்துவதற்காக உடன்கட்டை ஏறல் என்ற சொல்லாட்சி உருப்பெற்றிருக்க வேண்டும் (சிலம்பு. நா. செல்வராசு, 2009:131). கணவர் கண்காணாவிடத்தே எங்கோ தொலைவில் இறந்தால் எரிக்குங்கால் செல்ல முடியாவிட்டால் எரிவளர்த்துத் தீப்பாய்வர் (பா. இறையரசன், 1993:267). இவ்வகையிலும் தீப்பாய்தல் அமைந்திருந்தது.

உடன்கட்டை ஏறுதல் பெரும் சமூக மதிப்பை உருவாக்கியது. தீயில் மாய்ந்த மகளிர் மாண்புடையவராகக் கருதப்பட்டனர். இதனை, மார்க்கோபோலோ என்ற வெனிசு நகரப் பயணி (கி.பி. 1293) பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிடும் போது, தமிழகப் பெண்டிர் உடன்கட்டை ஏறுதலையும், அவ்வாறு உடன்கட்டை ஏறி மடிவோரைச் சமூகம் பெரிதும் பாராட்டுதலையும் குறிப்பர் என்று பழந்தமிழகத்தில் இவ்வழக்கத்திற்கு கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் குறிப்பிடப்பட்டுள்ளது. பண்டைய நாகரிக நாடுகளில் எல்லாம் இப்பழக்கம் இருந்தமையை உலக வரலாறு காட்டும். தொல்காப்பியர் குறிக்கும் நனி அழல் புகுதலும் அவற்றைத் தமிழகத்து இருந்ததாகக் கொள்ளுதலும் பொருந்துவதாகும் (க.ப. அறவாணன், 1978:328-329). தொல்காப்பிய சமூகத்திற்கு முன் உள்ள சமூகத்தில், சங்கச் சமூகத்தில் இவ்வழக்கம் இருந்துள்ளதைக் காண முடிகிறது.

#### 4.2.2.3.3 பாலையும் மாலையும்

நற்குணமுடைய மனைவி, இறந்த தன் கணவனோடு ஈமத் தீயில் பாய்ந்து உயிர்விடத் துணிந்த நிலையில், தன்னைத் தீப்பாயாதவாறு தடுத்து விலக்கும் சான்றோரை நோக்கிக் கூறுவது பாலை நிலை எனப்படும். இதனைத் தொல்காப்பியம்,

நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும் (தொல்.புற.79)

என்றுரைக்கிறது.

பாலைநிலை என்பதை இளம்பூரணர் மாலைநிலை என்றுரைக்கின்றார். கணவனொடு மனைவி அழலில் புகுவழி இடையிட்ட மாலைக் காலத்துக் கூறும் கூற்று (மு. சண்முகம் பிள்ளை, 2003:147) எனப்படுகிறது. நச்சினார்க்கினியர், பாலைநிலை என்று பாடம் கொண்டு பொருள் உரைக்கின்றார். கற்புடை மனைவி தன் கணவன் இறந்துழி அவனோடு எரிபுகுதல் வேண்டி எரியை விலக்கினாரோடு உறழ்ந்து கூறிய புறங்காட்டு நிலை என்கிறார். பாலைநிலை என்ற தொடரை மேலும் தொடர்ந்து விளக்கும் பொழுது, எல்லா நிலத்தும் உளதாகி வேறு தனக்கு நிலனின்றி வருதலானும் நண்பகல் போல் வெங்கனலான் வெதுப்புதலானும் புறங்காட்டைப் பாலை என்று நிறுவுகிறார் (எஸ்.கனகசபாபதி பிள்ளை,1934:313-314).

பாலைநிலை என்பதற்கு மாறாக, கணவனோடு தீப்பாய்தலாகிய இச்செயல் வெயில் தணிந்த மாலைக் காலத்து நிகழ்வதாதலின் மாலைநிலையெனப் பெயர் பெற்றது (க.வெள்ளைவாரணன், 1983:241). இவ்விரு பாடவேறுபாடுகளில் மாலை நிலை என்பதினும் பாலைநிலம் என்பதே பொருத்தமாக அமைகிறது. மனைவி, எரிஅழல் புகும் நிகழ்ச்சி எப்பொழுதும் அமையலாம். அவள் மற்றவரைத் தடுத்து எந்தப் பொழுதும் கூற்று நிகழ்த்தி இருக்கலாம். எனவே, மாலைக் காலத்தில் கூறும் கூற்று என்ற இளம்பாடலும் பொருளும் அத்துணைச் சிறப்பின அல்ல (க.ப. அறவாணன், 1978:327). காலமும் பொழுதும் அறியாது நடக்கும் இறப்பினை, இறப்பைத் தாங்காது, புறங்காட்டில் உடன்தீயில் விழுந்து இறக்க உடன்பட்டு நிற்பதை இத்துறை தெளிவுபடுத்துகிறது.

தனிமைத் துயரில் இருக்கும் பெண்களுக்கு மாலைக்காலம் துன்பம் தருகிறது. அதனால் துன்பம் தரும் மாலைக்காலத்தை இங்கு உள் பொருளாகக் குறித்தனர் போலும். சான்றாக,

**சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேரப்**
**படர்சுமந் தெழுதரு பையுள் மாலை**
**யாண்டுளர் கொல்லோ வேண்டுவினை முடிநர்**
**இன்னா திரங்கு மென்னா ரன்னோ**
**தைவல் அசைவளி மெய்பாய்த் துறதரச்**
**செய்வுறு பாவையன்ன வென்**
**மெய்பிறி தாகுத லறியா தோரே** **(குறு.195)**

என்ற குறுந்தொகை பாடலைக் கூறலாம்.

இதில் பாவை போன்று ஒப்பனை செய்ய பெற்றத் தலைவி,, தலைவன் குறித்த பருவம் வந்தும் தலைவன் வராததால் மாலைக்காலம் துன்பம் தருவதாகக் கூறுகிறாள். மற்றொரு தலைவி,

**புண்கண் மாலையும் புலம்பும்**
**இன்றுகொ றோழியவர் சென்ற நாட்டே** **(குறு.330:6–7)**

என்று துன்பத்தைத் தரும் மாலைக் காலமும் தனிமையும் தனக்குத் துன்பத்தைத் தருவதாகக் கூறுகிறாள். ஏனைய துன்பம் வந்தாலும் தப்பலாம். ஆனால் மாலை வருத்தத்தால் உய்யேன் எனப் புலம்புகிறாள் நற்றிணை தலைவி. தம் வருத்தத்தை,

. . . . . . . **மாலையும் வந்தன்று**
**யாங்கா குவென்கொல் யானே** **(நற்.397:5–6)**

என்று எடுத்துரைக்கின்றாள்.

இந்தப் பருவத்திற்குள் வந்து விடுவேன் என்று சொல்லிச் சென்ற தலைவன், அப்பருவத்தில் வராதபோது, அல்லது காலம் தாழ்த்தி வந்தபோது அவ்விடைப்பட்ட காலத்தில் அவனது பிரிவுத் துன்பத்தைத் தாங்க முடியாதவளாக தலைவி உள்ளாள். தலைவன் திரும்பி வருவான் என்ற உறுதியான நிலையிலும் அவன் இல்லாத தனிமை தலைவிக்கு வருத்தத்தை உண்டாக்குகிறது. மாலைப்பொழுது அவளைத் துன்புறுத்துகிறது.

மீண்டும் உயிர்பெற்று வராத நிலையில் தலைவனது இறப்பு அமைந்துள்ளது என்றால் அவனின் பிரிவுத் துன்பம் அளவில்லாதது.

அத்துன்பத்தை மிகுவிக்கும் மாலைக்காலமும் கொடுமையானது. எனவே, மாலைக்காலம் என்பது உடல், மனம் சார்ந்த துன்பத்தை ஆற்றமுடியாத காலமாக இருந்துள்ளது. அக்காலத்தில் தலைவனின் இழப்பு மனைவிக்கு மிகுந்த துன்பத்தை மன அழுத்தத்தை உண்டாக்கும்.

இடையிட்ட காலப் பிரிவையே மாலைக்காலத்தில் தாங்க முடியவில்லை என்றால், நிரந்தர உயிர்ப் பிரிவை அக்காலத்தில் தாங்குதல் என்பது இயலாது. எனவே, மன அழுத்தத்தை உண்டாக்கும் மாலைக்காலத்தை உள்பொருளாக கொண்டு மாலைநிலை எனக் குறித்தனர் போலும்.

### 4.2.2.3.4 தீப்பாய்ந்த மகளிர்

புறநானூற்றின் மூன்று பாடல்கள், மகளிர் தீப்பாய்ந்து இறந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளன. ஆய் அண்டிரன் இறந்தவுடன் அவனது உரிமை மகளிர் அவனோடு சேர்ந்து தீயில் இறந்தனர். இந்நிகழ்வைக் குட்டுவன் கீரனார்,

**பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்**
**கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு**
**கால னென்னுங்கண்ணிலி யுய்ப்ப**
**மேலோ ருலக மெய்தினன்**
. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
**கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி**
**ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது** **(புறம்.240:3-10)**

என்று எடுத்துக் காட்டுகின்றார்.

இதில் ஆய்அண்டிரன் தன்னுடைய உரிமை மகளிருடன் கூற்றுவன் என்னும் குருடன் கொண்டு போக தேவர் உலகம் அடைந்தான் என்றும் கள்ளி வளர்ந்த பாழிடத்தின் புறத்தே ஒளி பொருந்திய தீச்சுட உடம்பு அழிந்தது என்றும் குறிப்பிடுகின்றார். ஆனால் அவனுடைய உரிமை மகளிர் தீயில் அவனோடு உடன் இறந்த செய்தியை வெளிப்படையாக கூறாமல் அமைகின்றார்.

பூதப்பாண்டியன் இறந்தவுடன், அவன் மனைவி பெருங்கோப்பெண்டு மனம் துன்புற்று நிற்கின்றாள். கணவன் இறந்தவுடன்

உயிர் விடாது நிற்கும் தன்னிலையை எண்ணி வருந்துகிறாள். இவ்வாறு வருந்தும் நிலையை ஆனந்தப் பையுள் துறையாகப் புறநானூறு (புறம்.246) குறிப்பிடுகின்றது.

புறப்பொருள் வெண்பாமாலையும், கணவன் போரிட்டு வீரசுவர்க்கம் அடைந்த பின்னும் அவனோடு சென்று சேராத தன் உயிரை நினைத்துத் தலைவி மனம் தடுமாறிய நிலையைக் கூறுவதாகும் (புற.வெண்.சூ.11) என்று ஆனந்தப் பையுள் துறைக்கு விளக்கமளிக்கிறது. இதனை, இலக்கண விளக்கம்,

> **தலைவன் விண் புகஉயிர் தாங்கினன் என்று அணங்கு**
> **அலமரல் எய்திய ஆனந்தப் பையுளும் (இலக்.விள.புற.619)**

என்று எடுத்துக்காட்டுகின்றது.

தொல்காப்பியத்தில் இதற்கான துறை காணப்படவில்லை. புறநானூற்றில் வரும் பாடல்களை விளக்கிக் கொள்வதற்குத் தொல்காப்பியப் புறத்திணையியலிலே தரப்படுவனவற்றை அடிப்படையாகக் கொண்டு நோக்குவதை விடப் புறப்பொருள் வெண்பாமலையில் தரப்படும் விளக்கங்களின் அடிப்படையில் நோக்குவது பொருத்தமாக இருக்கும் என்ற கருத்து நிலவி வந்துள்ளது (கார்த்திகேசு சிவத்தம்பி, 2009:74) என்பதற்கு ஏற்ப புறநானூற்றில் குறிப்பிடப்படும் ஆனந்தப் பையுள் துறைக்கான விளக்கம் புறப்பொருள் வெண்பாமாலையில் காணப்படுகிறது.

மிகுந்த வருத்தம் கொண்ட பெருங்கோப்பெண்டு தன் வருத்தம் நீங்க தீப்பாய முனைகின்றாள். அவ்வாறு முனையும் போது, சான்றோர் பலர் தடுக்கின்றனர். தீப்பாய்வதைத் தடுக்கும் சான்றோரை நோக்கி தன் கருத்தை எடுத்துரைக்கின்றாள். கைம்மை நோன்பால் வருந்தும் பெண்களைப்போல் இல்லாமல், கணவனுடன் தீப்பாய்தலையே விரும்புவதாக கூறுகிறாள். அவளது கூற்றில் கைம்மையில் பெண்கள் கொள்ளும் துன்பத்தை அறிய முடிகிறது.

நெய் சேர்க்காது, கையால் பிழிந்த நீர்ச் சோற்றை எள்ளரைத்த துவையலுடன், புளி கூட்டி செய்யப்பட்ட வேளையின் கீரையை உணவாக கைம்மையில் பெண்கள் கொண்டிருந்தனர். பருக்கைக் கற்களில் பாயின்றி

படுத்தனர் (புறம்.246). கைம்மை துன்பத்தில் வாழும் உயவற்பெண்டிர் போல வருந்தும் வாழ்க்கையை வாழ விரும்பாமல் தீயில் இறங்கி உயிர்விட துணிகின்றாள்.

தீயின் வெம்மைக்கு அஞ்சும் இயல்புடைய மகளிர்க்கென்றே இக்மைம்மை நோன்பு அமைந்துள்ளது. தீப்பாய்தல், தனக்குத் தாமரை மலர்கள் மலர்ந்த நீர்த்தடாகம் போன்று குளுமையாக இருக்கின்றது என்கிறாள். இதனை,

**பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற**
**வள்ளித ழவிழ்ந்த தாமரை**
**நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே (புறம். 246:13-15)**

என்ற கூற்றின் மூலம் தெளிவுபடுத்துகிறாள். இதில் தீயின் வெம்மையைவிட கணவனது பிரிவு மிகுந்த துன்பத்தைத் தரும் என்பதால், அவ்வெம்மையும் தன்னைக் குளிர்விப்பதாகக் குறிக்கின்றாள்.

### 4.2.2.3.5 இளமை புறங்கொடுத்தல்

கணவனை விட்டுச் சிறிது பொழுது தனித்திருப்பினும் இனிய உயிர் தளரும் எனத் துடிக்கின்றாள். நீர்வடிந்த கூந்தல் முதுகிடத்து அசைய, கண்களில் நீர்பெருக தன் இளமை புறங்கொடுத்துப் பெருங்காடு அடைகின்றாள். அவளின் இச்செயலை மதுரைப் பேராலவாயார்,

**நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்**
**பேரஞர்க்கண்ணள் பெருங்காடு நோக்கித்**
**தெருமரு மம்ம தானேதன் கொழுநன்**
**முழவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்**
**சிறுநனி தமிய ளாயினும்**
**இன்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே**
**(புறம்.247:5-10)**

என்ற பாடலின் மூலம் எடுத்துக் காட்டுகின்றார்.

இதில் இளமை புறங்கொடுத்தலுக்கு, பெருங்கோப்பெண்டு தன் கணவனையிழந்த காலம் வளமை மிக்க இளமைக் காலம். இளமை உடலுணர்வின்

வழி நின்று உடற்குரிய இன்பக் கூறுகளைப் பெரிதும் அவாவி நிற்பது. எதிர்காலத்துக்கு ஆக்கமும் அரணுமாகும் அறிவுப்பேற்றினும், நிகழ்காலத்து இன்பக் காட்சிகளிலும் செய்கைகளிலும் இளமையுள்ளம் பெரிதும் ஈடுபட்டு நிற்பதாதலால் பெருங்கோப்பெண்டு தன்னுடைய இன்பக்காதற் கணவனை இமைப்போதும் பிரியாது வாழ்வதையே விரும்பினாள் . . . வளமான அறிவுடையளாயினும் அவளுடைய அறிவு இளமைக்குப் புறங்கொடுத்து மடிந்து விடும். அதனால் அவள் உளம் கலங்கி உடல் துடித்து வருந்துவள் (அவ்வை சு. துரைசாமிப் பிள்ளை, 1960:12).

இந்தக் கருத்து அறிவு பேற்றைவிட நிகழ்காலத்து இன்பக் காட்சிகளில் இளமை உள்ளம் ஈடுபட்டு நிற்கும் என்பதைக் காட்டுகிறது. அறிவு இளமைக்குப் புறங்கொடுத்து அழிந்துவிடும். எனவே, கணவனைப் பிரியாது வாழ்வதை இவள் விரும்பினாள் என்பதை உணர்த்துகின்றது.

கணவனின் இழப்பு மீளாத் துயரம் உடையது என்பது உண்மை. மற்ற காட்சிகளின் இன்பத்தால் அது‘ மேலும் துயரத்தை உண்டாக்கும் என்பதும் உண்மை. இத்துயரங்களின் மிகுதி அவளின் அறிவை ஆராயாமல் செய்து விடும் என்கிறார். அரச துணைவியான பெருங்கோப்பெண்டு அறிவும் வீரமும் கொண்டவளாக இருக்கின்றாள். அரசனின் மனைவிக்கு இந்நிகழ்வுகள் உரியது போலவே சமூகத்தில் மற்ற பெண்களுக்கும் இவை உரியதாகும். கணவனுடன் இமைப்போதும் பிரியாது வாழ்வு என்பதும் அனைத்துப் பெண்களும் விரும்பும் தன்மையாகும்.

காட்சி இன்பம், மனத்துன்பம் என்பது கணவனை இழந்த மகளிர் அனைவர்க்கும் உரியது. அரச மகளிர்க்கு மட்டும் தனியே அமையாது. கணவன் இறந்தவுடன் உயிர்விடாது கைம்மையுடன் வாழும் பெண்களுக்கும் மேற்கூறிய இன்பம் துன்பம் தோன்றும். அவர்கள் உயிர்விட துணியாது, கைம்மையுடன் துன்பவாழ்க்கை வாழக் காரணம் என்ன? தன் பிள்ளைகளுக்காக, குடும்ப சூழ்நிலைக்காக கைம்மையில் வாழ்ந்திருந்தனர் என்றால், சமூகம் அவர்களைக் குறைந்த மதிப்பீட்டில் காணவேண்டிய அவசியம் என்ன? கழிகலமகளிர், உயவற்பெண்டிர், ஆளில் பெண்டிர் என்று தனித்து காட்டப்படுவதன் நோக்கம் என்ன? அவர்கள் சமூகத்தில் புறக்கணிக்கப்பட்டவர்கள் என்பதைத் தனித்து காட்டுவதற்காக இருக்கலாம்.

அரச மகளிர் மட்டும் ஏன் தீப்பாய்ந்தார்கள்? அதன் காரணம் என்ன? வெற்றி பெற்ற அரசர்களால் தமக்குத் துன்பம் உண்டாகும் என்ற அச்ச உணர்வு காரணமாக இருக்கலாம். போர்க்களத்தில் கணவர் இறந்தபின் தாம் பகைவரால் சிறைப்பிடிக்கப் படலாகாது என நினைத்த மகளிர் பாதுகாப்பு நோக்கில் உடன்கட்டையேறியும் தீப்பாய்ந்தும் உயிர் மாய்த்துக் கொண்ட தொன்முது வழக்கம் .... (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரக முதலி, முதன் மடலம்-மூன்றாம்பாகம், 1997:29) என்ற கருத்து நோக்கத்தக்கது.

ஒரு அரசனின் மனைவி கணவனின் இறப்பிற்குப் பிறகு, இளமை புறங்கொடுத்து ஈமத்தீயிற்கு உடன்பட்டு நிற்கிறாள் என்றால், சாதாரண குடியிலுள்ள பெண்ணும் இளமை புறங்கொடுத்து கைம்மையில் வாழ வில்லையா என்பது சிந்திக்கத்தக்கது.

அன்பின் மிகுதி கொண்டு அல்லது பிரிவு துயரைத் தாங்காது அரசனின் மனைவி தீப்பாயும் முடிவை ஏற்கும் சங்கச் சமுதாயத்தில், கணவன் இறந்த பிறகும், அவ்விறப்பைத் தாங்கிக் கொண்டு மகனைப் போருக்கு ஆயத்தமாக்கும் பெண்களையும் காணமுடிகிறது. இப்பெண்களை மறக்குடி மகளிராக புறநானூறு காட்டுகிறது.

உலக வாழ்வில் உயிரினும் மறத்தையே விரும்புபவர்களாக இவர்கள் போற்றப்படுகின்றனர். சான்றாக மறக்குடி மகளின் செயலை,

**நெருந லுற்ற செருவிற் கிவள் கொழுநன்**
**பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே**
**இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி**
**ஒருமக னல்ல தில்லோள்**
**செருமுக நோக்கிச் செல்கென விடுமே** (புற.279:5–11)

என்று ஒக்கூர் மாசாத்தியார் எடுத்துக்காட்டுகின்றார். இப்பாடல் மறக்குடி பெண்ணின் வீரத்தையும் விளக்குவதாக உள்ளது. முதல்நாள் நடந்த போரில் தந்தையை இழந்தாள். நேற்று நடந்த போரில் அவள் கணவன் இறந்தான். இன்று தன் குடிக்கு ஒரு மகனையல்லது வேறு இல்லாத அவனைப் போர்க்களம் நோக்கிப்

போய்வா என்று கூறி அனுப்பினாள். இங்கும் இப்பெண்ணிற்கு உயிரிழப்புகள் ஏற்படுகின்றன. ஆனால், கணவன் இறந்தவுடன் உயிர் விடாது தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பும் வீரமுடையவளாக காட்டப்படுகின்றாள்.

புறநானூற்றில் ஆய்அண்டிரனுடைய உரிமை மகளிரும், பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டுவும் தீப்பாய்ந்து இறந்ததாகக் குறிப்பிடப்படுகின்றனர். தீப்பாய்தலைத் தடுப்பவர்களாக சான்றோர்கள் குறிப்பிடப்பட்டிருந்தாலும் அச் சமூகத்தில் தீப்பாய்தல் நடந்திருக்கின்றது என்பது உண்மை. தீயின் வெம்மையும் குளிர்விக்கின்றது எனக் குறிப்பிடுவதன் மூலம் அப்பெண்ணின் உள்ளம் கொள்ளும் உணர்வு தூண்டலை அறிய முடிகிறது.

கணவனுடன் உயிர் நீத்தல் நிகழ்ச்சிகள் மனைவியின் இறப்பினை மட்டும் காட்டவில்லை. அச்சமூகத்தின் அமைப்பினையும் படம் பிடித்துக்காட்டுகின்றன. கணவன் இறந்த பின் மனைவி உயிர் வாழக்கூடாது என்ற சமூகத்தின் எண்ணங்களை அதற்காகச் சமூகம் எவ்வாறெல்லாம் பெண்களுக்கு உணர்வுத் தூண்டல்களை எழுப்பியது என்பதை மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் தெரிவிக்கின்றன.

## 4.3 மகள் மறுத்தல்

மண்ணாசை பொன்னாசை போன்றவை போருக்குரிய முதன்மை காரணங்களாக அமைகின்றன. பெண் விருப்பமும் போர் நடைபெறுவதற்குரிய காரணமாக அமைகிறது. பாரியின் மகளிருக்காக பேரரசர்கள் மூவரும் படையெடுத்துச் சென்றனர். தமக்குப் பெண் கொடுக்க மறுத்தவர்களை வேந்தர்கள் அழித்தனர். பெண் கேட்பதும் பெண்ணைக் கொடுக்க மறுப்பதும் போருக்குக் காரணமாக அமைந்தன. இச்செயல்கள் மகட்பாற் காஞ்சி என்றும் மகண் மறுத்து உரைத்தல் என்றும் குறிக்கப்பெறுகின்றன.

நொச்சித் திணையின் ஒன்பது துறைகளுள் ஒன்றாக மகள் மறுத்தல் உள்ளது. புறப்பொருள் வெண்பாமாலை,

**வெம்முரணான் மகள் வேண்ட**
**அம்மதிலோன் மறுத்துரைத்தன்று** **(புற.வெண். 93)**

என்கிறது. உழிஞை அரசன் நொச்சியரசன் மகளைத் தனக்குத் திருமணம் செய்து தரும்படி கேட்க அதனை நொச்சியரசன் மறுத்துக்கூறியது மகள் மறுத்தல் என்னும்

துறையாகும். சாமுண்டி தேவநாயகர் காஞ்சித் திணைக்குரிய மகட்பாற் காஞ்சி அரசர்க்குரியது என்றும் நொச்சித் திணைக்குரிய மகள் மறுத்து மொழிதல் மறவர்க்குரியது என்றும் குறிப்பிடுகின்றார். இதற்கு ஆயிரு திணையு மரசர்க்குரிய என்பதால் மகட்பாற்காஞ்சி அரசர்க்குரித்து; இது மறவர்க்குரித்து என்று சான்று காட்டி விளக்கப்பட்டுள்ளது (உ.வே.சாமிநாதையர்,1963:46). தொல்காப்பியத்தில் இதற்கான துறை காணப்படவில்லை.

சங்க இலக்கியத்தில் மகட்பாற்காஞ்சி, மகண்மறுத்தல் தொடர்பாக பாடல்கள் காணப்படுகின்றன. புறநானூற்றில் மூன்று பாடல்கள் (புறம்.109-111) மகள் மறுத்தல் துறையைக் கொண்டுள்ளன. இம்மூன்று பாடல்களையும் கபிலர் பாடியுள்ளார். பேரரசர் மூவரும் பாரியிடம் மகட்கொடை வேண்டி நின்றனர். மறுப்பின் காரணமாக பாரியின் மீது போர்த்தொடுத்தனர்.

போர்த்தொடுத்த அரசர்களை நோக்கி, கபிலர் நீங்கள் ஒருவரேயன்றி மூன்று பேரும் ஒருங்கு கூடி முற்றுகையிட்டாலும் பறம்பினைக் கைப்பற்ற முடியாது. நீவிர் கூத்தர் வேடமும் நும்முடைய மகளிர் விறலியர் வேடமும் கொண்டு பாரியின் முன் ஆடலும் பாடலும் செய்வீராயின் அவன் தன் நாட்டையும் மலையையும் தந்து அருள்வான்(புறம்.109) என்று கபிலர் எடுத்துரைக்கின்றார்.

நீவிர் மூவரும் கூடிச் சூழ்ந்தாலும் பாரியை வென்று அவன் நாட்டினைக் கைக்கொள்ள முடியாது. அவனுடைய 300 ஊர்களையும் பரிசிலர் பெற்றுக் கொண்டனர். நீங்களும் பாடிவந்தால் அவன் ஊரைப் பெறலாம் (புறம்.110) என்று பாரியின் பேராண்மையை விளக்குகின்றார். இறுதியாக, இம்மூவர்க்கும் பறம்பு மலை கொள்வதற்கு அரிது என்கிறார். இதனை,

**அளிதோ தானே பேரிருங் குன்றே**
**வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே**
**நீலத் திணைமலர் புரையு முண்கட்**
**கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே** **(புறம்.111)**

என்று பாடிவரும் விறலிக்கு எளிதாவதை எடுத்துரைக்கின்றார். இம்மூன்று பாடல்களிலும் அரசர்கள் இரவலர்கள் போன்று பாரியிடம் சென்றால் அவர்களின் விருப்பம் நிறைவேறும் என்ற கருத்தைக் கபிலர் வலியுறுத்துவது தெரிகிறது.

இப்பாடல்களில் பாரியின் மகளிர் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. ஆனால் இம்மகளிரின் பொருட்டு போர் எழுவதாக துறை அமைந்துள்ளது. பெண்ணின் பொருட்டு போர் நிகழ்கிறது என்றால் வெற்றி பெற்றபின் அவ்வரசர்கள் அப்பெண்களைத் திருமணம் செய்ததாகக் குறிப்புகள் இல்லை. ஆனால் போர் மட்டும் மகட்கொடை காரணமாக நடக்கிறது.

மகள் மறுத்தல் துறைபற்றி கு.வெ.பாலசுப்பிரமணியன் பின்வரும் வகையில் கருத்துகளை நிறுவுகிறார். முதலில் ரா.இராகவையங்காரின் கூற்றினை முன்வைக்கின்றார். புறநானூற்றில் உள்ள மூன்று பாடல்களும் மகள் மறுத்த செயல் கூறுவனவே எனக் கருதுவர் ரா. இராகவையங்கார் என்று அவரின் கருத்தைக் கூறி பின் மகள் மறுத்தல் துறையை மறுக்கின்றார்.

நொச்சித் திணையோ, மகள் மறுத்தல் துறையோ தொல்காப்பியத்தில் இல்லை. மகள் மறுத்தல் மொழிதல் மறவர் கூற்றாக நிகழுமென்பர் வெண்பாமாலை உரையாசிரியர் (புற.வெ.94). ஆனால் புறநானூற்றின் மூன்று பாடல்கள் புலவர் கூற்றாக அமைந்துள்ளன. ஆகவே இம் மூன்று பாடல்களும் இத்துறைக்குரியனவல்ல என எண்ண வேண்டியுள்ளது என்கிறார். மேலும், செ.வெங்கடராமச் செட்டியாரின் கருத்துரையைத் தன் விளக்கத்திற்கு ஆதாரமாகக் காட்டுகின்றார். பறம்பு மலையும் நாடும் கொடுக்க மறுத்த செய்தியே இப்பாடல்களில் உள்ளது என்றும் துறை கிடைக்காமையால் ஒருவகையான ஒற்றுமை நோக்கி மகண்மறுத்தல் என்னுந்துறைப்பாற் படுத்தி இவை உரைக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், மதிற்குமரி என்னும் வழக்கு நோக்கி மதில் மறுத்த செயலை மகள் மறுக்கும் செயலோடு ஒப்ப வைத்துத் துறை வகுக்கப்பட்டிருக்குமென்றும் கூறுவன முற்றிலும் ஏற்கத் தக்க செய்திகளாகும். ஆகவே இம்மூன்று பாடல்களும் பெண் காரணமாக எழுந்த போரைக் குறித்தன அல்ல என்பது பெறப்படும் (கு.வெ.பாலசுப்பிரமணியன், 1986: 79,80). பாரிக்கும் மூவேந்தர்க்கும் இடையே நடைபெற்ற போருக்கு மகட்கொடை மறுப்பு காரணம் அல்ல. ஏனென்றால், சங்க இலக்கியத்துள் மகட்கொடை காரணமாகத் தம்முள் முரண்பட்டுப் போராடியவரைக் குறிக்கோள் நிலையிலன்றி இயற்பெயர் சுட்டிய நிலையிற் காணமுடியவில்லை. பாரியைப் புகழ்ந்து கபிலர் பாடிய புறப்பாட்டொன்றுக்கு மகண் மறுத்தல் என்னும் துறை குறிக்கப்பட்டுள்ளது (புறம்.109). எனினும்

பாரிக்கும் மூவேந்தர்க்கும் இடையே நடந்த போருக்கு மகட்கொடை மறுப்பினைக் காரணமாகக் கொள்ளச் சான்றேதும் இல்லை (அ. தட்சிணாமூர்த்தி, 2001:240) என்ற மறுப்பும் எண்ணுதற்குரியது.

1. தொல்காப்பியத்திற்கும் புறப்பொருள் வெண்பாமாலைக்கும் உள்ள காலவேறுபாடு, இரண்டிற்குமுள்ள துறைவேறுபாடு,
2. இலக்கியம் பாடப்பட்ட சூழலும், அதற்குப் பின்னாளில் உரை செய்தவர்களின் காலத்திற்கும் உள்ள இடைவெளி.
3. திணை துறை குறிப்புகள் வகுப்பதில் உள்ள வேறுபாடு
4. ஆய்வறிஞர்கள் முன்வைக்கும் மாறுபட்ட கருத்துகள்-போன்ற காரணங்களால் மகள் மறுத்தல் பற்றி சரியான உறுதிப் பாட்டிற்கு வரஇயலவில்லை.

### 4.3.1 பாரிமகளிர்

பாரி கடையெழுவள்ளல்களுள் ஒருவன். ஈகையில் மாரி போன்றவன். பறம்பு மலைக்கு உரியவன். இவனை வஞ்சனையால் மூவேந்தர்களும் கொன்றழித்தனர். தந்தையை இழந்து பாரியின் பெண்மக்கள் இருவரும் தவித்தனர். கபிலர் அவர்களை அரவணைத்தார்.

தந்தை இருந்தபோது வளமுடன் வாழ்ந்த அப்பெண்கள், தந்தை மறைவிற்குப் பிறகு மனம் வேதனையுற்றனர். தந்தை இருந்தபோது வாழ்ந்த இன்பநிலையைத் தந்தையை இழந்து நின்றபோது ஏற்பட்ட துன்பநிலையோடு ஒப்பிட்டு நோக்கி வருந்தினர். அம்மகளிர்,

**அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
**எந்தையும் உடையேம்; எம்குன்றும் பிறர்கொளார்;**
**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,**
**வென்றுஎறி முரசின் வேந்தர் எம்**
**குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே! (புறம்.112)**

என்று கண்ணீருடன் வருந்தி நின்றனர்.

தந்தை இருந்தபொழுது, பறம்பு மலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறிநின்று பாரியுடன் போருக்கு வந்த அரசரின் போர்க் குதிரைகளை எண்ணி

விளையாடினர். அவன் மறைவிற்குப் பிறகு, புல்கொண்டு கவர்த்த வழியையும், முள்ளால் நெருங்கிய வேலியையும், பஞ்சுபரந்த முற்றத்தையும் உடைய சிறிய மனையின் கண் உள்ள ஈச்சமரத்தின் இலையுடைய குப்பையின்மீது ஏறி உப்பு வணிகரின் வண்டிகளை எண்ணி விளையாடினர் (புறம்.116). தந்தையுடன் கூடிய வாழ்க்கை உயர்வுடையதாக, அவன் பிரிவின் பின் சிறப்பற்றதாக அமைந்திருந்தது.

கபிலர் இவ்விரு பெண்களுக்கும் மண வாழ்க்கையை அமைத்துத் தர விரும்பினார். இப்பெண்களை விச்சிக்கோ என்ற சிற்றரசனிடம் அழைத்துச் சென்றார். பாரியின் பெருமையை எடுத்துக் கூறினார். 'முல்லைக்கு தேர் கொடுத்த வள்ளலின் மக்கள் இவர்கள்' என அறிமுகப்படுத்தினார். யான் பரிசில் பெற வந்தவன். ஒரு அந்தணன். இம்மகளிரை,

***நினக்கு யான் கொடுப்பக் கொண்மதி*** (புறம்.200:15)

என்று பெற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறார். விச்சிக்கோ அப்பெண்களை ஏற்க மறுத்து விட்டான்.

அடுத்து, அப்பெண்களைக் கபிலர், இருங்கோவேளிடம் அழைத்துச் சென்றார். வேளிருள் ஒருவனாகிய அவனிடம்,

***இவரியார் என்குவை யாயி னிவரே***
***ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்***
***முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்***
***படுமணி யானைப் பறம்பிற் கோமான்***
***நெடுமாப் பாரி மகளிர் யானே***
***தந்தை தோழ னிவரென் மகளிர்***
***அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே***
. . . . . . . . . . . . . . . . . . . . (புறம்.201:1–7)

***யான்தர விவரைக் கொண்மதி*** (புறம்.201:16)

என்று வேண்டுகின்றார்.

இப்பெண்களின் தந்தைக்கு யான் தோழன். இவர்கள் என் மகளிர். யான் தருகிறேன். நீ ஏற்றுக் கொள் என்ற கபிலர் கூற்று ஒரு தந்தைக்குரிய கடமையை, தோழமையின் அன்பின் மிகுதியை உணர்த்துகின்றது.

கபிலர் வேண்டுகோளை இருங்கோவேள் மறுத்து விட்டான். கபிலர் வேதனையுற்று அவனிடம், உன் முன்னோர்கள் கழா அத்தலையார் என்ற புலவரை இகழ்ந்தனர். அதன் பயன் அவர்களுடைய சிற்றரையம் பேரரையம் என்ற ஊர்கள் அழிந்தன. உன்னுடைய பழமையை மறந்து எவ்வி என்ற பழைய குடியில் பிறந்த பாரியின் மகளிரை அழைத்து வந்தது தவறு என்று அவ்விடம் விட்டு அகன்று செல்கிறார் (புறம்.202).

பாரியும் பறம்பும் உடனிருக்கையில் அப்பெண்களின் வாழ்க்கை வளமுடையதாக இருக்கின்றது. தந்தையின் இழப்பிற்குப் பிறகு வாழ்க்கையே கேள்விக்குரியதாக அமைகிறது. பாரியின் பெண்களை மணந்து கொள்ள கபிலர் ஒவ்வொருவரிடமும் வேண்டுதலும் அவர்கள் மணந்து கொள்ளாது மறுப்பதும் ஆகிய செயல்கள் அப்பெண்களிடத்துக் கழிவிரக்கத்தைத் தோற்றுவிக்கின்றன. அவ்வரசர் தம்மை மறுத்து ஒதுக்கும் போது, அம்மகளிர் உற்ற மனவேதனையைப் புலவர் கூறாவிட்டாலும், பாடலின் உட்பொருள் வெளிப்படையாகக் காட்டுகிறது.

இம்மகளிரை மறுத்தற்கு காரணம்,

1. தோல்வியுற்றவனின் மகளை மணந்து கொண்டால் தனக்கும் தன் குடிக்கும் தாழ்வு எனக் கருதியிருக்கலாம்.

2. பேரரசர்களைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்ற அச்ச உணர்வும் காரணமாக இருந்திருக்கலாம். இது பற்றிய கருத்துகள் இங்கு வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆனால் மன்னன் மகளாக இருந்தாலும், பெண்மக்கள் வாழ்வு என்பது இரங்கத்தக்கதாக உள்ளதை அறியமுடிகிறது.

3. மகட்கொடை மறுத்தல் பற்றி போர் உண்டாவதும் போருக்குப் பிறகு அம்மகளிரை ஏற்க மறுப்பதும் ஆகிய இச்செயல்கள், அச்சமுதாயத்தில் பெண்ணினத்தை மையப்படுத்தி பெண்களுக்கு உண்டாகும் பாதிப்பை வெளிப்படுத்திக் காட்டுகின்றன.

## 4.4 மகட்பாற்காஞ்சி

புறநானூற்றில் பெண்களுக்கென, பெண் தொடர்பான துறைகள் ஒருசில உள்ளன. மூதின் முல்லை, முதுபாலை, ஆனந்தப் பையுள், மகள் மறுத்தல், மகட்பாற் காஞ்சி போன்ற துறைகளைக் குறிப்பிடலாம். இத்துறைகளில் பெண்கள் வீரமிக்கவர்களாக இருக்கின்றனர். கணவனை இழக்கும் நிலையில் வருந்தும் தன்மைமிக்கவர்களாக காணப்படுகின்றனர். ஆனால், மகள் மறுத்தல், மகட்பாற் காஞ்சி என இரண்டின் துறையில் பெண்கள் போருக்குக் காரணமாகக் குறிக்கப் பெறுகின்றனர். குறிப்பாக, மகட்பாற்காஞ்சி துறை மற்ற துறைகளைவிட வேறுபட்டுக் காணப்படுகிறது. பெண்ணை மையமாக வைத்து உருவாகும் போர் நிகழ்வைக் குறிப்பிடுகிறது. இருதரப்பினரும் தம்முள் முரண்பட்டு நிற்கவும், போர் உருவாகவும் ஆகிய சூழ்நிலையை இத்துறையின் பாடல்கள் கொண்டிருக்கின்றன.

மகட்கொடை வேண்டிய வேந்தருக்கு தம் மகளைத் தரமறுத்து அவ்வேந்தர்களோடு மாறுபட்டு நிற்பது மகட்பாற்காஞ்சியாகும். தொல்காப்பியம்,

> **நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி**
> **மகட்பா டஞ்சிய மகட்பா லானும் (தொல்.புற.79)**

என்று இலக்கணம் வகுத்துள்ளது. இதற்கு நச்சினார்க்கினியர், பெண் கோளொழுக்கத்தி னொத்து மறுத்தல் பற்றிப் பகைவனாய் வலிந்து கோடற்கு எடுத்து வந்த அரசனோடு முதுகுடித் தலைவராகிய வாணிகரும் வேளாருந் தத்தம் மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற்காஞ்சி (எஸ். கனகசபாபதி பிள்ளை, 1934:307) என்று பொருளுரைக்கின்றார். புறப்பொருள் வெண்பாமாலை,

> **ஏந்திழையாட் டருகென்னும்**
> **வேந்தனோடு வேறுநின் றன்று (புற.வெண்.84)**

என்கிறது. நின்மகளை எனக்குத் தருக என்று சொல்லும் அரசனோடு மாறுபட்டு நிற்பது மகட்பாற்காஞ்சி. தொல்காப்பியம் வேந்தனிடம் உறவு கொள்ள அஞ்சும் நிலையை உரைக்கின்றது. புறப்பொருள் வெண்பாமாலை, மன்னவன் ஒருவன் பெண்கேட்க, மற்றவன் மறுத்துப் போர் தொடுப்பதை எடுத்துரைக்கிறது.

சங்கச் சமுதாயத்தில் போர் தோன்றுவதற்குரிய காரணங்களுள் ஒன்றாக மகட்கொடை மறுப்பு உள்ளது. பெண்ணை விரும்பி வந்த வேந்தனுக்குப் பெண்தர மறுக்கின்றனர். அதனால் போர் உண்டாகும் சூழல் உருவாகிறது. பெண்ணின் தந்தையும் தமையனும் வேந்தனை எதிர்த்து நிற்கின்றனர். இவ்வாறு எதிர்த்து நிற்பதால் ஊருக்கு உண்டாகப்போகும் கேடுகளை எண்ணி சான்றோர் வருந்துகின்றனர். போரில் அழிவும் அவலமும் உண்டாகும் நிலை எண்ணி புலவர்கள் அச்சமுறுகின்றனர். இவ்வாறு பெண் காரணமாக எழும் இவ்விளைவுகளைப் புறநானூறு மகட்பாற்காஞ்சி துறையில் விளக்கமாக எடுத்துக் காட்டுகிறது.

மகட்பாற் காஞ்சி துறையாக இருபத்தோரு பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. பரணர், கபிலர், குன்றூர்கிழார் மகனார், அள்ளூர் நன்முல்லையார், அரிசில் கிழார், அண்டர் நடுங்கல்லினார், அண்டர்மகன் குறுவழுதியார், மதுரை மருதனிள நாகனார், மதுரைக் கடைக்கண்ணம் புகுத்தாராயத்தனார், மதுரைப்படைமங்க மன்னியார், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், கதையங் கண்ணனார் முதலானவர்கள் இத்துறையைப் பாடியுள்ளனர். இவர்களில் பரணர் ஆறுபாடல்களையும், கபிலர் மற்றும் அண்டர் நடுங்கல்லினார் இருபாடல்களையும் பாடியுள்ளனர்.

### 4.4.1 பெண்ணின் நலனும் ஊரழிவும்

பெண்ணின் மீது வேந்தருக்கு இருக்கும் விருப்பம் போர் ஏற்படக் காரணமாக அமைகிறது. வீரக்குடிக்கும் வேந்தருக்கும் இடையே நடக்கும் போரினால் அழிவுகள் உண்டாகின்றன. அவ்வழிவுகளுக்குக் காரணமாக பெண் முன்னிலைப் படுத்தப்படுகிறாள். பெண்ணின் அழகு, தான் பிறந்த குடிக்கும் ஊருக்கும் அழிவைத் தேடித் தருவதாக புலவர்கள் வருந்துகின்றனர்.

பெண்ணின் அழகால் ஈர்க்கப்பட்டவன் வேந்தன். அவ்வேந்தனோடு உறவு கொள்ள மறுத்துப் போருக்கு எழுபவன் பெண்ணின் தந்தை மற்றும் தமையன். இங்கு அப்பெண் அவ்வேந்தன் மீது விருப்பம் கொண்டதாக பாடலடிகளில் குறிப்புகள் இல்லை. ஒருதவறும் செய்யாது, அழகுடன் இருக்கும் ஒரே காரணத்தால் அப்பெண்ணை ஊரழிவிற்குக் காரணம் காட்டுகின்றனர். சான்றாக, அண்டர்மகன் குறுவழுதியார்,

**ஓவ்வே னல்ல னதுவா யாகுதல்**
**அழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கற்**
**பேணுநர்ப் பெறா அது விளியும்**
**புன்றலைப் பெரும்பாழ் செயுமிவ ணலனே (புறம்.346:4–7)**

என்ற பாடலின் மூலம் எடுத்துக்காட்டுகின்றார். தாம் வாழும் நிலம் பாழ்படவும், போரின் அழிவால் தம்மைப் புரப்போர் எவருமின்றி சுற்றம் துயரில் வருந்தவும் காரணமாக அமைவது அப்பெண்ணின் அழகு என்கிறார்.

இவரைப்போன்று பரணரும் ஊர்க்கு நலஞ் செய்கின்ற பெண்ணின் மடநோக்கு ஊரின் அழிவிற்குக் காரணமாவதை எண்ணி கலங்குகிறார் (புறம்.354). மேலும், இப்பெண்ணைப் பெற்றதினால் ஊர் பெரும்கேட்டிற்கு உள்ளாகப் போகிறது. யானைகளைப் பிணித்தலால் காவல் மரம் வருந்தும் நிலை ஏற்படப் போகிறது. அவளைத் தாய் பெறாதிருந்தால் நாடு நலம் பெற்றிருக்கும் என்கிறார் பரணர் (புறம்.348).

மதுரை மருதன் இளநாகனார் தான் பிறந்த ஊருக்கே அழிவைத் தேடி தருபவளாக அப்பெண்ணைக் காட்டுகின்றார். இதனை,

**அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை,**
**மரம்படு சிறுதீப் போல,**
**அணங்கு ஆயின், தான் பிறந்த ஊர்க்கே (புற.349:5–7)**

என்று உவமையின் மூலம் ஒப்பிடுகின்றார்.

காட்டிடத்தே தோன்றிய சிறிய தீப்பொறி போல தாம் பிறந்த ஊரையே அழிக்கும் தெய்வமாயினாள் என்கிறார். இவ்வூரை அழிக்கவே இப்பெண் பிறந்தாள் போலும் என்ற புலவரின் அச்சவுணர்வு இதில் வெளிப்படுகிறது. அழகிய பெண்ணைப் பெற்றால் பெற்ற குடிக்கும் பிறந்த ஊருக்கும் கேடுண்டாகும் என்ற ஓர் அவலநிலை அக்காலத்தில் இருந்தது (மு.சாயுபுமரைக்காயர், 1985:39) என்ற கருத்து நோக்கத்தக்கது.

பெண்ணை மையப்படுத்தி போரும், அதனால் வளங்களின் இழப்பும், ஊரழிவும் நடைபெறுவதைப் இப்பாடல்களின் வழி அறியமுடிகிறது.

### 4.4.2 பாடுபொருள்

மகட்பாற் காஞ்சி குறித்து ஆய்வாளர்கள் பல்வேறு கருத்துகளை எடுத்துரைத்துள்ளனர். அவர்களின் கருத்துகள் பின்வருமாறு.

பால்உணர்வே போருக்கு அடிப்படைக் காரணம். இராமாயண மகாபாரதப் போர்கள் மகளிரை மையமாக வைத்து எழுந்தவையே. குறிப்பாக, இராமாயணப்போர் சீதையைக் கவர்ந்ததை வைத்து எழுந்ததும், வாலி-சுக்கிரீவ, இராமன் ஆகியோரின் போர் பெண்ணை வைத்து எழுந்ததும் எண்ணத்தக்கன (க.ப.அறவாணன், 1978:227).

பெருவேந்தரினும் சீறூர்த் தலைவர் மான மாண்பும் மறவுணர்வும் மிக்கவர் எனக் காட்டுதற்காகப் புலவர்கள் மேற்கொண்ட இலக்கியப் புனைவுநெறியே மகட்பாற் காஞ்சித் துறை என்பதை உணரலாம் என்று கருத்துரைத்து, மேலும் தொடர்ந்து புறநானூற்றின் மகட்பாற் காஞ்சிப் பாடல்கள் பெண் காரணமாக எழுந்தன அல்ல எனவும் வீரமும் புகழும் காரணமாகப் பாடபட்டவை (கு.வெ. பாலசுப்பிரமணியன், 1986: 81,82). மிகுந்த பெண்ணாசை காரணமாகப் போர் நடைபெற்றதாகச் சங்கக் குறிப்புகள் இல்லை. ஆயின் போர் விளைவுக்காக அஞ்சிய புலவரின் அச்சம் மேலோங்கியிருப்பதனை மகட்பாற்காஞ்சித் துறையிலமைந்த பாடல்களில் காணலாம் (இராம.குருநாதன், 2004:69).

மகட்பாற் காஞ்சியின் பாடுபொருள் சமுதாயத் தீங்கினை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. இப்பாடல்கள் ஊரின் அழிவிற்குப் பெண்ணே காரணம் என்பதை அழுத்தமாகச் சுட்டி நிற்கின்றன. அவ்வழுத்தத்தினையும் இரக்கச்சுவை புலப்படக் கூறும் முறை பெண்ணினால் ஏற்படும் அழிவாகிய சமுதாயத் தீங்கு களையப்பட வேண்டும் என்ற கருத்தினையும் புலப்படுத்தி நிற்கின்றது. இங்ஙனம் இடம்பெறும் பாடுபொருள்கள் சமுதாயத் தீங்கினை மிக நாகரிகமாகச் சுட்டி நிற்கின்றன (செ. சாரதாம்பாள், 1993:167).

புறநானூற்றில் அமைந்துள்ள மகட்பாற் காஞ்சிப் பாடல்கள் (336-354, 356) பாடுபொருள் அமைப்பில் புராதன சமூகத்தை விளக்குவன. . . . பெண்ணை மையமாக வைத்துப் பேரழிவைத் தரும் இப்போருக்கான சமூகவியல் காரணங்கள் ஆழ்ந்த கவனத்திற்குரியன. தொல்குடி

மரபுப்படியும் தாய்வழி மரபுப்படியும் தாயம் ஆகிய ஆட்சி உரிமை தாயிடமே இருந்தது. இவ்வுரிமையைப் பெண்ணும் அவள் தந்தையும் அவன் தமையனும் காத்தும் அனுபவித்தும் வந்தனர். தந்தையை விடவும் பெண்ணும் அவள் சகோதரனுமே தாயத்திற்கு உரிமை உடையோர் ஆகின்றனர். பெண்ணின் தாய்வழி மணஉரிமை காரணமாக இக்குலத்தில் தந்தை வந்து சேர்கிறார்.

இந்த அமைப்பு, சிதைவிற்குள்ளாவதைச் சமூகவியல் கோட்பாடுகள் விரிவாக விளக்கி உள்ளதை அறியலாம். அதாவது தாயம் பெண்ணிடமிருந்து அவள் கணவன் கைக்கு மாறும் நிலையே அதுவாகும். இம்மாற்றம் எளிதில் நிகழ்ந்துவிட்ட ஒன்றன்று. உடனடி நிகழ்வாகவும் மாற்றமடையவில்லை. வரலாற்றின் நீண்டகால நீட்சிமையில் இம்மாற்றம் நிகழ்ந்தேறியது. இம்மாற்றத்தினால் ஏற்பட்ட போராட்டதையே மகட்பாற் காஞ்சிப் பாடல்களும் மகள் மறுத்து மொழிதல் பாடல்களும் வெளிப்படுத்துகின்றனவோ என்று எண்ண வேண்டியுள்ளது (பக்தவத்சல பாரதி, 1998:109-110) என்று பெண்ணின் தாய உரிமையை முன்வைக்கின்றது.

தம்மை மகட்கொடை வேண்டிய வேந்தர் குடியினரை மதியாது அவர் வேண்டுகோளைப் புறக்கணித்து, அவர் பகைமையைப் பெற்று இறுதியில் போரிட்டு அழிய ஆயத்தமாகும் குறுநில மன்னரின் மறமாண்பு மகட்பாற் காஞ்சி என்னும் துறையிலமைந்த புறப்பாடல்களின் பொருளாக அமைகிறது.

வேந்தர் மருதநிலச் சிற்றூர் மன்னர் தம்மினும் செல்வம் செல்வாக்கு ஆகியவற்றிற் குறைந்தவரெனினும் அவர்பால் மகட்கொடை வேண்டினர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். குறுநிலத் தலைவர் தம் பெண்களின் பேரழகில் ஈடுபாடு கொண்டமையே இதற்குரிய காரணமாகத் தெரிகின்றது (அ.தட்சிணாமூர்த்தி, 2001:238).

மகட்பாற் காஞ்சியில் பெண்ணின் மனநிலைக் காட்டபெறவில்லை. பெண்ணின் தந்தையும் தமையனும் பெண்கேட்டு வந்தவர்களை எதிர்த்துப் போருக்கு ஆயத்தமாகும் நிலையும் அவ்வாறு வந்தவர்களின் வீரத்தையும் ஆற்றலையும் வெளிப்படுத்திக் காட்டும் நிலையும் காணப்படுகின்றன. இக்கருத்தமைந்து அ. பாலமுருகன் பின்வரும் வகையில் எடுத்துரைக்கின்றார்.

பொருளையும் வலிமையையும் காட்டிப் பெண் கேட்டல் தவறு என்றோ பெண் கொடுக்க மறுக்கும் உரிமை பெற்றவர்களுக்கு உண்டு என்பதையோ பாடல்கள் காட்டவில்லை. மேலும், அறனில்லாதவள் தாய் என்றும், செய்ய வேண்டியதைச் செய்யாதவன் தந்தை என்றும் குறை கூறுவதாக உள்ளது. மறத்தைப் போற்றுகின்ற நிலையிலேயே இப்பாடல்கள் அமைந்துள்ளன. மானிட மதிப்பையோ, பண்பையோ இவை பேசவில்லை. பெண்களைப் பற்றிப் பேசும் பொழுது ஒரு பாடலில் மட்டும் தந்தையோடு தாயும் வீரம் மிக்கவள் என்று குறிக்கப் பெறுகிறது. மணப்பெண்ணுக்கும் மனம் உள்ளது. அவளுக்கும் விருப்பு வெறுப்புகள் உண்டு என்ற நிலையைக் காண இயலவில்லை (சிற்பி பாலசுப்பிரமணியம்,தொகுதி-III,2002:1131) என்று பெண்ணின் மனவுணர்வுகளை வெளிகாட்டாது அமைகின்ற நிலையைக் குறிப்பிடுகின்றார்.

சிலம்பு நா.செல்வராசு, குலப்பெருமையை மட்டும் மகட்கொடை மறுத்தலுக்குக் காரணமாக்கிக் காட்டும் க.கைலாசபதியின் கூற்றை எடுத்துக்காட்டி, வேறு சில காரணங்களுக்காகவும் அமைகிறது என்று விளக்கமளிக்கிறார். மகள் மறுத்து மொழிதலில் பெரும் வேந்தர்கள் வேண்டினாலும் கூட மகள் மறுத்தமைக்குக் காரணம் பெருமைக் குறைவு மட்டுமன்று. வேந்தர் மணஉறவு மரபுக்குள் இடம்பெறாததே தலைக் காரணம். அதாவது தொல்காப்பியர் கூறும் கொளற்குரிய மரபினராக அன்னோர் இல்லாததே காரணம் .... புறமணத் தடையின் ஒரு பகுதியாகவே மகள் மறுத்து மொழிதலைக் கொள்ள வேண்டியுள்ளது (சிலம்பு நா.செல்வராசு, 2002:61,62).

மகட்பாற் காஞ்சி, மகள் மறுத்தல் ஆகிய துறைகள் பெண் மக்களின் திருமணத்தை முகாந்திரமாக்கி அதன் நிமித்தமாக எழுகின்ற பகையுணர்வு, போர் ஆகியவற்றைக் குறிக்கின்றன. ஆக அரசர்களுக்கு இடையே நடந்த போரில் பெண்கள் பகடைக் காய்களாக்கப்பட்டார்கள் என்றே கருதவேண்டி இருக்கிறது. மேலும், கூட்டிக் கழித்துப் பார்த்தால் சங்கப் பாடல் காட்டும் மகளிர் காலம் பொற்காலமல்ல. அதே வேளையில் புதைசேறுமல்ல. இயற்கையோடியைந்த நிலையினின்று விலகி நெறிமுறைகள் வளர்ந்த காலகட்டமாக அக்காலத்தை எடுத்துக் கொள்வோமானால் அந்நெறிகளும் முறைகளும் மகளிர் வாழ்வுக்கே விலங்கிட்டு ஆடவரை உயர்த்தின என்பது புரியும் (ஏ.எஸ். மணி, 2004:75,78).

மகட்பாற் காஞ்சியின் பொருண்மையாக பால் உணர்வு, மறஉணர்வு, தாய உரிமை, மன உணர்வுகளை மதியாமை, மானிட மதிப்பை, பண்பைப் பொருட்படுத்தாமை, குலப்பெருமை, புறமணத்தடை, பெண்களுக்கு விலங்கிடும் வகையில் அமையும் வாழ்வின் நெறிமுறை முதலானவை எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இக்கருத்துகளை நோக்கும்போது ஆய்வாளர்களிடையே நிலவும் எண்ண மாறுபாடுகளை அறிய முடிகிறது.

இத்துறையின் பொருண்மை சங்ககாலம் பொற்காலம் என்ற கட்டமைப்பைத் தகர்ப்பதாக அமைகிறது. மரபு ரீதியான போர்முறை, வெட்சி, வஞ்சி போன்ற திணைவைப்பு, போருக்கு அல்லாதவரைப் பேணுதல் போன்றவை சங்கச் சமூகத்தின் நிகழ்வாக இருக்கிறது. இங்கு மரபு ரீதியான போர்முறையிலிருந்து மாறி, பெண்ணிற்காக போர் நிகழ்வு அமைகிறது. அந்நிகழ்வால் உண்டாகும் அழிவிற்குக் காரணமாக பெண் காட்டப்படுகின்றாள். சமூகத்தில் நடந்ததைப் பதிவு செய்பவர்கள் புலவர்கள். தகுதி-தகுதியின்மை, குலக்கட்டுப்பாடு, புறமணத்தடை போன்ற வேறுபட்ட மனப்பான்மையைக் கொண்ட சங்கச் சமூகத்தினைப் மகட்பாற் காஞ்சித்துறையில் பதிவு செய்துள்ளனர்.

# 5. பொற்கால வாழ்க்கை

சங்க இலக்கியங்கள் தமிழர்களின் வாழ்வியல் கூறுகளைக் காட்டுவதாக பெரும்பான்மை கருத்துகள் அமைந்துள்ளன. அவ்விலக்கியங்களைச் சான்றாகக் கொண்டு சங்ககாலம் பொற்காலம் என்றும் பொற்காலம் அன்று என்றும் இருவேறு கருத்துகள் உள்ளன. இரு கருத்துகளும் இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

சங்க காலத் தமிழ்ச்சமுதாயம் உயர்ந்த பண்பாட்டினைக் கொண்டிருந்தது. தமிழர்களைத் தமிழர்களே ஆண்ட சிறப்பிற்குரியது. நேர்மையும் வாய்மையும் ஒழுக்கமும் உயர்ந்த பண்புகளும் நிறைந்த சமுதாயமாக விளங்கியது. அச்சமுதாயத்தில் வாழ்ந்த மக்கள் அனைத்து வளங்களையும் பெற்று இன்ப வாழ்வு வாழ்ந்தனர். அவர்கள் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தினைக் கொண்டிருந்தனர். அம்மக்களை ஆண்ட அரசர்கள் நீதிநெறியுடன் நல்லாட்சி புரிந்தனர். குடிமக்களைத் துன்புறுத்தாது அவர்களை அரவணைத்துச் செல்லும் அரசர்களாக விளங்கினர். ஈகைப் பண்பும் ஈரநெஞ்சமும் கொண்டிருந்தனர். எவ்வகையில் நோக்கினும் மக்கள் எவ்வித துன்பமுமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்ந்த காலம் சங்ககாலம் என்பது பெரும்பான்மையோரின் கருத்தாகும்.

இக்கருத்துகளைக் காணும்போது அக்காலத்தில் பிரச்சினைகள் இருந்ததில்லை. அக்காலச் சமுதாயமே நன்றாகயிருந்தது. அச்சமுதாயத்தில் நாம் வாழவில்லையே என்று குறைபடுபவர்களும் உண்டு. இவ்வாறு எண்ணுபவர்கள் பழமை கண்ணோட்டம் உடையவர்கள். தற்கால வாழ்வு கடுமையானது, கொடுமையானது என்னும் உறுத்தல்களால் பழங்கால வாழ்வே எல்லா வகையிலும் சிறந்தது என்னும் கண்ணோட்டம் தோன்றுதல் உண்டு. இறந்தகால ஈர்ப்பினால் தொன்மைக்கால வாழ்வே தூய்மையானது; சிறப்பானது என நம்புதல் பழமை கண்ணோட்டம் (Primitivism) ஆகும் என்ற கருத்தை அவர்கள் உணருதல் வேண்டும் (சிவம். சிவராசன், 1998:8).

## 5.1 பொற்காலத்தின் பொருள்

தமிழக வரலாற்றில் சங்க காலம் ஒரு பொற்காலம் என்று வரையறை செய்யப்பட்டுள்ளது. கோடைக்காலம், வசந்தகாலம் போன்றவை இயற்கையின் தன்மையில் அமைவது போன்று நல்ல காலம், கெட்ட காலம் போன்றவை மக்களின் வாழ்வு நிலையின் அடிப்படையில் அமைகிறது. நன்மையையும் மகிழ்ச்சியையும் உள்ளடக்கியதாக நற்காலம் அமைகிறது. தீமையையும் துயரையும் உள்ளடக்கியதாக கெட்டகாலம் அமைகிறது.

பொற்காலம் என்று குறிக்கும் காலத்தின் தோற்றுவாய் எப்பொருண்மையை உணர்த்துகிறது? பொன் மிகுந்த காலத்தைப் பொற்காலம் என்று குறிக்கலாமா? அல்லது பொன் போன்று சிறப்புடையதாக மதிப்புடையதாக ஒரு காலம் இருந்ததால் அக்காலத்தைப் பொற்காலம் என்று வரையறை செய்யலாமா? சான்றாக, பிறநாடுகளிலெல்லாம் பொற்காலம் என்பது அணியியற் பொருளில், ஒழுக்கத்திலும் செல்வத்திலும் கல்வியிலும் தலை சிறந்த காலத்தைக் (Golden Age) குறிக்குமேயன்றி, செஞ்சொற்பொருளில் பொற்கருவிகளே வழங்கிய காலமொன்றைக் குறிக்காது. தமிழ் நாட்டிற்குள்ள பல்வகைத் தனிச்சிறப்புகளுள் பொற்காலமும் ஒன்றாகும். பொலிவுள்ளது பொன் எனப்பட்டது. பொல்-பொலி-பொலிவு. பொல்-பொற்பு, பொல்லுதல்-அழகாதல், பொலிதல், பொற்ற -அழகிய சிறந்த பொன்னாலான, பொல்-பொன், பொல்-பொலம்-பொலன் என்று பொற்கருவிகள் வழங்கிய காலத்தைப் பொற்காலமாகக் குறிக்கின்றார் (ஞா. தேவநேயப்பாவாணர், 2000:30).

பொற்காலம் என்பது நாடு பலதுறைகளிலும் சிறப்புற்று விளங்கும் காலம் (நர்மதாவின் தமிழ் அகராதி, 2002:706). தமிழறிஞர்கள் பலர் சங்ககாலம் பொற்காலம் என்பதற்கு அக்காலத்தின் இலக்கியம், கல்வி, கலை, வாணிகம், ஆட்சி போன்றவற்றைப் பொருண்மையாகக் கொண்டு வரையறை செய்துள்ளனர்.

1. மன்னர்கள் நிகழ்த்திய போர்களும் அவர்கள் அடைந்த வெற்றிகளும்.
2. போர்களின் விளைவாக ஆட்சிப் பரப்பு விரிவடைதல்.
3. உள்நாட்டில் எதிர்ப்பின்மை.

4. சிறந்த இலக்கிய வாணர்களும் கலைஞர்களும் அறிஞர்களும் வாழ்ந்து போற்றக்குரிய படைப்புகளைப் படைத்தல்.

5. கலையழகு மிகுந்த கட்டிடங்களும் ஆலயங்களும் எழுப்பப்படல்.

6. ஓவியம், சிற்பம், இசை போன்ற நுண்கலை வளர்ச்சி.

7. வாணிபப் பெருக்கம்.

இவ்வரையறைகளின் அடிப்படையில் வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலத்தைப் பொற்காலம் என்று கணிப்பதில் தவறேதும் இல்லை. ஆயினும் எண்ணிக்கையில் மிகுதியான பொதுமக்களின் வாழ்க்கை நிலை பொற்காலத்தில் எவ்வாறு இருந்தது என்ற உண்மையினை உற்று நோக்கினால்தான் பொற்காலம் என்பது குறித்து ஒரு தெளிவான முடிவுக்கு வரமுடியும் (ஆ. சிவசுப்பிரமணியன், 1981:11) என்ற கருத்து சிந்திக்கத்தக்கது.

### 5.1.1 பொற்காலத்தின் தோற்றம்

தமிழக வரலாற்றில் பொற்காலம் என்ற சொல்லாட்சி எந்தகால கட்டத்தில் தோன்றியது என்பதை அறிய வேண்டுவதாகிறது. உலகில் பல்வேறு நாடுகளின் வரலாற்றில் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட காலத்தைப் பொற்காலம் என்று வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். சான்றாக, கிரேக்க நாட்டு வரலாற்றில் பெரிக்கிளிஸ் என்பவரின் காலம் பொற்காலம் என்று குறிப்பிடப்படுகின்றது. கலிபாஹருண் அவிரஷித் ஆண்டகாலம் பாரசீகத்தின் பொற்காலம் என்று போற்றப்படுகிறது. இங்கிலாந்து நாட்டின் வரலாற்றில் எலிசபெத் மகாராணி காலம் பொற்காலம் என்று அழைக்கப்படுகிறது. இது போலவே அகஸ்டஸ் மன்னன் ஆண்ட காலம் ரோம்நாட்டின் பொற்காலம் என்று அழைக்கப்படுகின்றது. இந்திய வரலாற்றிலும் குப்தர் காலமும், ஷாஜஹான் காலமும் பொற்காலம் என்று புகழப்படுகின்றன (ஆ. சிவசுப்பிரமணியன், 1981:9,10). பழந்தமிழகத்தில் மூவேந்தர் ஆட்சி புரிந்த சங்ககாலம் பொற்காலமாகப் போற்றப்படுகிறது. அக்காலத்தின் இலக்கியங்கள் பொற்கால இலக்கியங்களாகப் பாராட்டப்படுகின்றன.

### 5.1.2 இலக்கிய வரலாற்றில் பொற்காலம்

பொற்காலம் என்ற கருத்தைத் தமிழகத்தில் முதலில் உருவாக்கியவர் வி. கனகசபைப் பிள்ளை (பெ. முருகன், 2003: 269). சங்க இலக்கியம், கருத்தியல்

வளம் என்ற நூலின் கட்டுரையில் தொடர்ந்து அவர், டாக்டர் பர்னல் தென் இந்தியப் பழம் பதிவாராய்ச்சி என்னும் தம் நூலிலும் டாக்டர் கால்டுவெல் திராவிட மொழிகளின் ஒப்பியல் இலக்கணம் நூலின் முன்னுரையிலும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் எதுவுமில்லை என்று கருத்துரைத்தனர். அதனை மறுக்கும் நோக்கில் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் என்னும் கட்டுரைத் தொடரை மெட்ராஸ் ரெவ்யூ இதழில் 1904 இல் ஈழத்து வி. கனகசபைப் பிள்ளை எழுதினார். அத்தொடர் எழுதப்பட்டபோது கலித்தொகை, புறநானூறு ஆகிய இருநூல்கள் தவிர, எட்டுத்தொகை நூல்கள் எவையும் அச்சில் பதிப்பிக்கப்படவில்லை. அகநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களை மேற்கோள் காட்டும் கனகசபை, இந்நூல்கள் இன்னும் அச்சில் வெளிவரவில்லை என்று குறிப்பு தருகிறார். பழைய இலக்கியங்களை எடுத்துக்காட்டி அவை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என நிறுவ முயலும்போது பொற்காலம் பற்றிக் கருத்துரைக்கின்றார்.

அவர், சங்ககால அரசியல், பொருளியல் சமூக வாழ்க்கை முதலிய அனைத்தைக் குறிக்கும் பொற்காலம் என்று குறிப்பிடவில்லை. இலக்கிய வரலாற்றில் பொற்காலம் என்பதே அவர் கருத்து (பெ.முருகன், 2003:269).

### 5.1.3 செல்வமும் வணிகமும்

பழங்காலம் பொற்காலம் ஆகும். அக்காலத்து மக்கள் நனிநாகரிகராய் வாழ்ந்தனர். இலக்கிய வளத்தில் சிறந்து விளங்கினர் என்று தமிழ் நூல் வரலாறு என்ற நூலில் பாலூர் கண்ணப்ப முதலியார் பொற்காலம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் (க. கைலாசபதி, 1969:123).

பொற்காலம் என்ற ஒன்று உருவாக்கப்பட்டதற்கு இரண்டு சான்றுகளை முன் வைக்கின்றார். முதலாவதாக, பட்டினப்பாலையில் மகளிர் முற்றத்தில் உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியை எறிந்த பொன்னாற் செய்த மகரக்குழை, பூணணிந்த காலினையுடைய சிறுவர் கையாலுருட்டும் மூன்றுருளைச் சிறுதேரினது வழியின் முன்பை விலக்கும் (பட்டி. 22-25) செல்வ செழிப்பைக் குறிப்பிடுகின்றார். அடுத்து,

> **பொன் மலிந்த விழுப் பண்டம்**
> **நாடு ஆர நன்கு இழிதரும்** **(மதுரை.82-83)**

என்று பொன்மலிந்த நாடாக சங்காலத் தமிழகம் திகழ்ந்ததை எடுத்துக்காட்டுகிறார்.

பொன் மலிந்த விழுப்பண்டம் நாடு ஆர என்பதில் பொன் மிகுதற்குக் காரணமாகிய சீரிய சரக்குகளை நாட்டிலுள்ளோர் நுகரும்படியாக வந்து சேர்ந்த நாவாய்கள் குறிப்பிடப்படுகின்றன. நாவாய்களும் பொன்னும் பிறபண்டங்களும் இருந்தன என்பது உண்மையே. ஆனால் அவை நாடு முழுவதும் பொங்கி வழிந்து யாவர்க்கும் சொந்தமாயிருந்தன என்பது ஐதீகமே. அதனடிப்படையிலே பொற்காலம் திருஷ்டிக்கப்பட்டது (க. கைலாசபதி, 1969: 129-130).

### 5.1.4 பழம்பெருமை

பொற்காலக் கருத்தோட்டம் நம்மை அடிமைப்படுத்திய ஆங்கிலேயர்கள் நமது கலை இலக்கிய வரலாற்றுப் பாரம்பரியங்களை மதிக்காது அவர்கள் வரவால்தான் நாகரிகத்தின் ஒளியே நம்மீது பட்டது என்ற கருத்தோட்டத்தைக் கொண்டிருந்தார்கள். இக்கருத்தை மறுக்கவும் நமக்கென ஒரு சிறப்புமிக்க வரலாற்றுப் பாரம்பரியம் உண்டு என்ற உணர்வையூட்டி இந்தியர்களைக் கிளர்ந்தெழச் செய்யவும் பொற்காலம் என்ற கருத்தோட்டம் வரலாற்றாசிரியர்களாலும் இலக்கிய வாணர்களாலும் உருவாக்கப்பட்டது (ஆ. சிவசுப்பிரமணியன், 1981:50).

### 5.1.5 ஏற்றத் தாழ்வற்ற சமூகம்

பொற்காலத்திற்கும் பொற்கால இலக்கியத்திற்கும் உள்ள வேறுபாடு பின்வரும் வகையில் குறிப்பிடப்படுகிறது. தமிழக வரலாற்றில் சங்ககாலம் ஒரு பொற்காலம் என்பதற்கும் தமிழிலக்கிய வரலாற்றில் சங்கஇலக்கியம் பொற்கால இலக்கியம் என்பதற்கும் மாறுபாடுளது. முன்னது வரலாற்றுப் போக்கினது. வாழ்வு வளம் பற்றியது. பின்னது இலக்கிய நோக்கினது. இலக்கிய நலம் பற்றியது (மது.ச. விமலானந்தம், 1987:99).

மேலும் தொடர்ந்து, வாழ்வியல்-வாழ்வு நிலையில் ஏற்றத்தாழ்வின்றி அனைவரும் வசதியுடன் வாழ்ந்தார்கள். உயர்வு தாழ்வின்றி எல்லோரும் இன்புற்றிருந்தார்கள். ஓர் ஊரில் மண் குடிசைக்கிடையே மாளிகை என்றால் அவ்வூர் ஒப்புரவு வாழ்வு உடையதாமோ? ஒன்று அனைவரும்

மாடிவீட்டினராகவோ அன்றி மச்சு வீட்டினராகவோ இருத்தல் வேண்டும். அதுவே சமதர்ம சமுதாய உயர்வாழ்வாம். அம்முறையில் சங்க காலத்தில் அத்துணை பேரும் நிகராக விளங்கினர் என்கிறார் (மேலது:100). சங்க சமூகத்தின் மக்கள் அனைவரும் வசதியுடன் வாழ்ந்தனர் என்ற அவரின் கருத்து சிந்திக்கத்தக்கது. குடிசைகளும் மாடமாளிகைகளும், ஏழையும் செல்வந்தரும் என ஏற்றத்தாழ்வுள்ள சமூகமாக சங்க சமூகம் இருந்ததை ஏற்கனவே கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

### 5.1.6 நட்பின் வெளிப்பாடு

அதியன் அவ்வைக்கு அருநெல்லிக்கனி கொடுத்தமை, மோசிகீரனவர்க்குச் சேரலாதன் கவுரி வீசியமை போன்றவை இதனை நிறுவும். தொண்டைமானிடம் ஔவை தூது சென்றமை; நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி இருவரிடையேயும் கோவூர்கிழார் சந்து செய்தமை, வரிகொள் முறையைப் பிசிராந்தையார் அறிவுடை நம்பிக்கு அறிவுறுத்தியமை போன்றவை விளக்கி நிற்கும். இதுமட்டுமன்று புரவலர்கள் புலவர்களால் பாடப்பெறுதலைப் பேறாகக் கருதினர் என்றால், சங்க காலத்தில் பொருட் செல்வத்திலும் அறிவுச் செல்வம் போற்றப் பெற்றது புரிய வரும். இத்தகைய நிலைதான் உச்சநிலை (Zenith). இந்த உச்சநிலை சங்ககாலத்தில் இருந்தது. அதனால் அக்காலம் பொற்காலமாகப் போற்றப் பெறுகிறது (மேலது, 100).

பொருட்செல்வத்தைக் காட்டிலும் புலவர்களின் அறிவுச் செல்வம் போற்றப்படுகிறது. அறிவுச் செல்வம் பொருட் செல்வத்தை எதிர்பார்த்து இருக்கிறது. பாழ்பட்ட பகைவர் நாட்டுக்குள்ளே புகுந்து, அங்கே கிடக்கும் மணிகளையும் பொன்னையும் கைப்பற்றிக் கொண்டு வருகிறார்கள் வீரர்கள். வைரமும், மாணிக்கமும், முத்தும், பொன்னும் அவர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். முதலில் வீரர்கள் எழுச்சி பெறும்படியாகப் பாடிய புலவர்களுக்குப் பரிசு வழங்குகிறார். யாழை மீட்டிப் பாடும் பாணர்களுக்குத் தருகிறார்கள். நாட்டில் மறவேந்தர் புகழைப் பாடிக் காலம் கழிக்கும் புலவர்களுக்கும் பாட்டுப்பாடி யாவரையும் இன்புறுத்தும் பாணர்களுக்கும் இது அறுவடை நாள் (கி.வா. ஜகந்நாதன், 1966:27,28) என்ற கருத்தும் முற்கூறிய கருத்தும் மாறுபட்டு அமைந்துள்ளது நோக்கத்தக்கது.

### 5.1.7 மாறுபட்ட செயல்கள்

சோழன் நலங்கிள்ளியிடமிருந்து நீங்கி, நெடுங்கிள்ளியின் உறையூரை இளந்தத்தன் என்ற புலவர் அடைந்தார். அவரை நெடுங்கிள்ளி ஒற்றன் எனக் கருதிக் கொல்லத் துணிந்தான் (புறம்.47).

ஆற்றிலே நீராடச் சென்ற பெண்ணொருத்தி, அந்நீரிலே அடித்து வரப்பட்ட மாங்கனியொன்றை எடுத்துத் தின்றாள். அத்தவற்றிற்காக, அவள் தந்தை எண்பத்தொரு களிற்றி யானைகளுடனே அவள் நிறையளவு பொன்னால் செய்த பாவையொன்றையும் கொடுக்கவும் கொள்ளாதவனாய் அப்பெண்ணைக் கொலை புரிந்தான் நன்னன் என்பதை,

> **மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை**
> **புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு**
> **ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள்நிறை**
> **பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்**
> **பெண்கொலை புரிந்த நன்னன் (குறுந்.292:1–5)**

என்று பரணர் எடுத்துக்காட்டுகிறார். இளங்கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் ஒன்றாக இருந்தபோது, பெருந்தலைச் சாத்தனார் கண்டீரக்கோவைத் தழுவுகிறார். விச்சிக்கோவைத் தழுவாது இருக்கிறார். அதற்குக் காரணம் கூறுகையில் பெண் கொலை புரிந்த நன்னன் மரபினன் இவன் (புறம்.151) என்று குறிப்பிடுகிறார். பெண்ணைக் கொலை புரியும் அளவு பொறுமையும் இரக்கமும் இல்லாத அரசனின் கொடுஞ்செயலை இந்நிகழ்வு வெளிப்படையாகக் காட்டுகிறது. இச்சான்றுகளின் வழி, அக்காலத்தில் கொடிய மனம் உடையவரும் இருந்திருப்பர். இத்தகைய கொடுங்கோல் ஆட்சியும் அங்குப் பரவலாக நடந்திருக்கும் என்று எண்ணவும் தோன்றுகிறது. மேலும், நின்நாடு பாடி வருவார்க்கு கதவு அடைத்து மறுக்கும் தன்மையுடையது. ஆதலால் நின்னைத் தழுவவில்லை (புறம்.151) என்று வன்பரணர் கூறும் காரணமும் இங்கு நோக்கத்தக்கது.

காவலர் பாவலர் இடையே உறவு உளமொன்றியதாக இருந்தது என்றும் நட்பு நிலையில் அவ்வை-அதியன், கபிலர்-பாரி, கோப்பெருஞ்சோழன்-பிசிராந்தையார் சிறந்திருந்தனர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது

(மது.ச. விமலானந்தம், 1987:100). ஆனால், பேரரசர்களும் சிற்றரசர்களும் நட்புறவு கொள்ளாது பகைமையுணர்வுடன் செயல்பட்டதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பத் தவறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

### 5.1.8 புலமைச் செறிவு

பெண்மை போற்றப் பெற்ற காலமோ பொற்காலம். அவ்வையார், ஆதிமந்தியார், ஒக்கூர் மாசாத்தியார், காக்கைப் பாடினியார், நல்வெள்ளியார், வெள்ளி வீதியார் என 30க்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் புலமைச் செவ்வியராய் விளங்கினரென்னில் அக்காலம் பொற்காலமின்றி எக்காலமாம் என்று பெண்களின் புலமைச் சிறப்புள்ள காலத்தைப் பொற்காலமாக வரையறுக்கின்றார் (மேலது, 101). பெண்களின் புலமை செறிவு உள்ள காலமாக சங்ககாலம் இருந்தாலும், அக்கால பெண்களும் ஆடவரால் பல துன்பங்களுக்கு ஆட்பட்டிருந்தனர் எனலாம். சான்றாக,

களவு மேற்கொண்ட ஒருவன், இளம்பெண் ஒருத்தியின் அழகிய பெண்மை நலத்தினைக் கவர்ந்து உண்டான். அறத்தைப் பேணாத அவனை ஊரார் அழைத்துக் கேட்க அப்பெண்ணை அறியேன் எனப் பொய் கூறினான். அவன் செயலை உண்மையென அறிந்த அவையினர் பெரிய மரத்தின் கிளையில் அவனை இறுகக் கட்டி வைத்து, அவன் தலையில் நீற்றினைக் கொட்டினர். இச்செயலைக் கடுவன் மள்ளனார்,

**கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்**
**திருநுதல் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன் அறியேன் என்ற**
**திறனில வெஞ்சூள் அறிகரி கடாஅய்**
**முறியார் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை (அகம்.256:15–20)**

என்ற பாடலில் எடுத்துரைக்கின்றார். இதில் காதலித்த பெண்ணைக் கைவிட்டவனை அறனிலாளன் என்று பழித்தனர்.

இப்படிப்பட்ட கொடுமை சங்க காலத்திலும் நடந்துள்ளதா? என்று படிப்பவர் நெஞ்சில் பதியக் கூடிய வகையில் தெளிவாகத் தெளிவுரை இல்லை? ஏன்?

தெளிவுரையோ, பொழிப்புரையோ எழுதுகின்றவர்கள் சில இடங்களில் மழுப்புகிறார்கள். சங்க காலத்தைப் பொற்காலம் பொற்காலம் என்று புகழ்ந்து விட்டோமே இப்படிப்பட்ட சிறுமைகளைக் காட்டக்கூடாது என்பதே அவர்கள் நோக்கம். சிறுமையும் பெருமையும் கலந்தது தான் வாழ்க்கை என்ற கருத்து நோக்கத்தக்கதாக உள்ளது (குருவிக் கரம்பை வேலு, 2003:8-9).

மகளிரது நலத்தை நுகர்ந்து ஆடவர் அவர்களை இடையிலே கைவிட்டுச் சென்ற நிலையும் காணப்படுகிறது. அவ்வாறு ஆடவரால் துறக்கப்பட்ட மகளிர் ஒன்றுக்கும் பயன்படாதவர்களாக அமைகின்றனர். அம்மகளிரது நிலையை,

**தோணல முண்டு துறக்கப் பட்டோர்**
**வேணீ ருண்ட குடையோ ரன்னர்**
**நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோ**
**ரல்குநர் போகிய வூரோ ரன்னர்**
**கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்**
**சூடின ரிட்ட பூவோ ரன்னர்** **(கலி.23:8-13)**

என்று கலித்தொகை எடுத்துக்காட்டுகின்றது.

நீருண்டு எறிந்த எச்சில் குடையோலையைப் போன்று, குடியிருப்பார் விட்டு சென்ற பாழூரைப் போன்று, முடிப்பார் முடித்து போட்டு விட்டு போன பூவைப் போன்று எதற்கும் பயன்படாது புறக்கணிக்கின்ற நிலைக்கு உள்ளாகின்றனர். இவ்வாறு பெண்களின் நலத்தை உண்டு பிறகு இல்லையென்று மறுப்பதும், திருமணத்திற்கு பிறகு தம் கணவரால் கைவிடப்பட்டு வாழ்க்கைக்கு பயன்படாதவர்களாக ஒதுக்குவதும் ஆகிய இந்நிலைகளுக்கு சங்க சமூகப் பெண்கள் ஆளாகினர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆண்மகன் ஒருவன் உப்பு விற்றுச் செல்லும் பெண்ணை வழிமறித்து புணர்ச்சிக்கு அழைக்கின்றான். அவள் நெல்லும் உப்பும் ஒரே விலையாகும் வாங்கிக் கொள்வீராக என்று சேரிதோறும் கூறி விற்கின்றாள். அவளை வழிமறித்து, நீ விற்கும் உப்புக்கு விலை கூறும் பெண்ணே உன் உடலில் பொதிந்துள்ள இன்ப உப்புக்கு விலை என்ன? என்று கேட்கின்றான். புணர்ச்சியை மெய்வாழ் உப்பு என்று கூறுகிறான் (அகம்.390). நவீன காலத்தில்

நுகர்வுப் பொருள் விற்பனைப் பிரிதிநிதியாக வீதிவீதியாக, வீடுவீடாகச் செல்லும் பெண்ணொருத்தியைக் காணும் ஆண் நோக்கை விடவும் இந்தச் சங்ககாலத் தலைவனின் நோக்கு இழிவானதாக உள்ளது .... பண்பும் ஒழுக்கமும் நிறைந்த பொற்காலத் தலைவன் ஒருவன் தொடர்புடைய காட்சி இது என வெதும்பிக் கூறப்பட்டுள்ளது (பெ.முருகன், 2003:271,272).

இரவுக்குறியில் தலைவனைச் சந்திக்கச் செல்வதால் தலைவிக்கு ஏற்படும் இடையூறுகளை விளக்குமிடத்து, முதிய பார்ப்பானுடைய செயலைக் கலித்தொகை பின்வரும் வகையில் எடுத்துக்காட்டுகிறது.

**. . . . . . . . . . . . . . . . . அவனாங்கே**
**பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி**
**யாரிவன் நின்றீ ரெனக்கூறிப் பையென**
**வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது**
**தையால் தம்பலந் தின்றியோ என்றுதன்**
**பக்களித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும்**
**வாய்வாளேன் நிற்பக் கடிதகன்று கைமாறிக்**
**கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியான்**
**ஏனைப் பிசாசருள் என்னை நலிதரின்**
**இவ்வூர்ப் பலிநீ பெறாஅமற்கொள் வோனைப்**
**பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப**
**முதுபார்ப்பான் அஞ்சின னாதல் அறிந்தியான்**
**எஞ்சா தொருகை மணற்கொண்டு**
**. . . . . . . . . . . . . . . . . . மேற்றூவ**
**. . . . . . . . . . . . . . . . . . தன்**
**வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்**

**(கலி.65:10-28)**

முதுபார்ப்பான் ஒருவன், மகளிர் நிற்கும் காலம் அன்றாக இவ்விடத்தே நின்ற நீ யார்? என்று கூறி, சிறியவளே நீ என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய் என்று வைக்கோலைக் கண்ட வயது முதிர்ந்த எருதுபோல தலைவி பக்கத்தில் வந்து நின்றான். இதில் முதுமையுற்ற நிலையிலும் காமக்குணம் மிக்கவர் மகளிரைக் கண்டு ஏங்குதலை வைகாண் முதுபகடு என்ற உவமை உணர்த்துகிறது.

தாம்பூலம் எடுத்துக்கொள் எனப் பையை நீட்டுகிறான். நான் ஆண் பிசாசு என்று கூறுகிறான். நீ எனக்கு அரள வேண்டும் என்கிறான். அவனிடமிருந்து தப்பித்துக் கொள்ள ஒரு கையால் மணலை அள்ளி அவன் மீது வீசுகிறாள். அவன் அவ்விடத்தை விட்டு அகல்கிறான். இவ்வாறு தனியாக இருக்கும் பெண்களிடம் தன் காம வேட்கையை வெளிப்படுத்துதலையே தொழிலாகக் கொண்டவனாக இருக்கின்றான். இளமையில் மட்டுமன்றி முதுமையிலும் பெண்கள் மீது காமநோக்குடையவரை இச்சான்று வெளிப்படுத்துகிறது.

### 5.1.9 மொழிவளம்

மொழி வளம் குறித்தும் அதன் இலக்கிய வளம் குறித்தும் பொற்காலம் கருத்துரைக்கப்பெறுகிறது.... உலகில் இன்றுள்ள பல மொழிகள் தோன்றுவதற்கு, முன்னரே இலக்கியச் செம்மையும் இலக்கணக் கட்டுக் கோப்பும் உடையதாய் தமிழ் உயர்ந்து நின்ற காலம். தமிழின் சீர்மையைச் செந்தமிழ், வண்டமிழ், ஒண்டமிழ், பைந்தமிழ் என்றெல்லாம் பாராட்டப்பெற்ற சிறப்பு மிக்க காலம். கடவுளின் பெயரால் சண்டையிட்டுக் கொள்ளாத காலம். தமிழை அறியாத அயலினத்தார் ஆட்சி தோன்றாத காலம். அன்பு வாழ்க்கையே இன்ப வாழ்க்கை எனத் தமிழர் வாழ்ந்த காலம். அன்பின் வழியே அறிவுவழி. அறவழி எனத் தமிழர் அறிந்தொழுகிய காலம்.

ஓரறிவுயிர் முதல் ஆறறிவு வரையிலான அனைத்துயிரின் நிலையுணர்ந்து அவற்றின் நலம் பேணிய இனிய காலம். அக்காலத்துத் தமிழில் தோன்றிய இலக்கியங்களெல்லாம் அழியாநிலைபெற்று உலகுக்கு வழிகாட்டியாய் விளங்கி வருகின்றன. இக்காரணங்கள் கொண்டே சங்க காலம் தமிழின்-தமிழரின் பொற்காலம் எனப் போற்றப்பெற்று வருகின்றது (செந்துறையான், 2001:44).

### 5.1.10 செல்வச்செழிப்பு

சங்ககாலம் பொற்காலமாக எண்ணப்படுவதற்கு அக்காலத்தின் செல்வச் செழிப்பு காரணமாக அமைகிறது. தமிழகத்தின் செல்வச் செழிப்பும் அமைதியான சூழ்நிலையுமே காரணம் எனலாம் (அ. ஜம்புலிங்கம், 2003:2). மேலும், நாட்டில் வாணிகம் செழித்திருந்தது. தமிழகத்துப் பெருங்கலங்கள்

கருங்கடலிடையே முத்தையும் மணிமகளையும் சுமந்து குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும் நிறைந்து யானைத் தந்தங்களையும் கானத்தோகைகளையும் ஏற்றிய வண்ணம் யவனம், கிரேக்கம், சிங்களம், சாவகம் போன்ற நாடுகட்குச் சென்ற வண்ணம் இருந்தன. தமிழகத்தின் விலைமதிப்பற்ற கட்டாணி வெண்முத்துக்கள் உரோம் நாட்டு மங்கையர்களின் மணிக்கழுத்தை அலங்கரித்தன. உரோம் நாட்டுப் பேரழகியான கிளியோபாத்ரா தமிழகத்து வெண்முத்தைப் பொடி செய்து மதுவில் கலக்கி உண்டு மகிழ்ந்தாள் என்று வரலாறு கூறுகிறது.

தமிழகத்தின் மிளகுக்காகப் பொன்னையும் மணியையும் பொதிப்பொதியாகச் சுமந்து வந்து யவனநாட்டு மரக்கலங்கள் முசிறித் துறையில் காத்துக் கிடந்த பொற்காலம் அது (மேலது:3.4) என்று வாணிக வளத்தின் அடிப்படையில் பொற்காலமாகப் புகழ்ந்துரைக்கப்படுகிறது.

### 5.1.11 பொற்காலப் பார்வை

தேவைகளின் அடிப்படையில் பயன்பாட்டு நோக்கில் பொற்காலக் கருத்து பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு கால கட்டத்தின் போதும் ஆளும் ஆட்சியின் சிறப்பு நோக்கி, ஆட்சியின் நன்மை குறித்து, மக்களின் வாழ்வு நிலை கொண்டு பொற்காலம் குறித்த கருத்துகள் பேசப்பட்டு வருகின்றன.

பொற்காலக் கருத்தை யார் எதற்காகப் பயன்படுத்துகிறார்கள் என்பது அறிய தக்கது. அரசியல் அதிகாரத்தை நாடும் ஆளும் வர்க்கத்தின் ஒரு பகுதியினர் மொழி, இனம் ஆகியவற்றின் பழைய பொற்காலத்தை மக்களுக்குக் காட்டித் தன்கருமம் பார்க்கின்றனர். இலக்கிய சனாதனிகள் பொற்காலத்தைப் பிரமாணமாகக் கொண்டு தொல்லாசிரியர்களை நிலை நாட்ட முயல்கின்றனர். இனவாதிகள் பொற்காலத்தைத் தமது சிறையில் அடைத்துக் காட்சிக்காக வைத்துப் பிழைக்கின்றனர் (க.கைலாசபதி, 1969:145,146).

பார்ப்பன மேலாதிக்கம், சம்ஸ்கிருதப் பெருமை ஆகியவற்றிற்கு எதிராகத் தமிழர் மேலாதிக்கம் தமிழின் சிறப்பு ஆகியவற்றைக் கட்டமைக்கத் திராவிட இயக்கம் இந்தப் பொற்காலக் கருத்தை விரிவாக்கித் தமது நோக்கத்திற்கேற்பப் பயன்படுத்திக் கொண்டது. இவ்வாறு குறிப்பிட்ட நோக்கத்திற்கு ஒன்றைக் கையாளும் போது, சாதகமானவற்றை மட்டும் எடுத்துப்

பேசுவதும் மற்றவற்றைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடுவதும் நேர்மையான ஆய்வு முறையல்ல. சங்க காலம் பற்றித் தமது அரசியலுக்குத் தேவையான செய்திகளை மட்டும் விதந்தோதி எடுத்துப் பயன்படுத்தியோர், தமது வரையறைக்குள் வராதவற்றைப் பற்றி எதுவும் பேசாமல், எங்கும் மேற்கோள் காட்டாமல் புறக்கணித்து விட்டமையைக் காண முடிகின்றது (பெ.முருகன், 2003:270). இவ்வாறு பொற்காலம் என்ற கருத்தோட்டம் தேவைகளுக்கு ஏற்ப உருவாவதை இதன்வழி அறிய முடிகிறது.

## 5.2 பண்பு நலக் குறைவுகள்

பழந்தமிழர் சிறந்த பண்பாடு உடையவர்களாக வாழ்ந்திருந்தாலும் அவர்களிடம் பண்பற்ற ஒழுக்கங்களும் இருந்துள்ளன. நல்லெண்ணமும் நற்சிந்தனையும் இயைந்த சங்கச் சமூகத்தில் தீய எண்ணங்கள், தீய நடத்தைகள் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பியுள்ளன. செய்நன்றியின்மை, பொய்கூறுதல், புறங்கூறுதல், சூதாடல் போன்றவை அக்கால மக்களிடையே நிலவியுள்ளன. இவ்வாறு பண்பில் குறைந்தவர்கள் வாழ்ந்த காலத்தைப் பொற்காலம் என்று குறிப்பது பொருந்துமா? என்ற வினா எழுகிறது. வரலாற்றில் எக்காலமும் பொற்காலமாக இருத்தல் இயலாது. ஒரு குறிப்பிட்ட காலச் சமுதாயத்தைக் களைபடுத்துவதற்கு அச்சமுதாயத்தின் உறுப்பான தனி மனிதன் ஒருவனே போதும் (நா.பழனிவேலு, 2004:112) என்ற கருத்து இங்கு சிந்தனைக்குரியது.

### 5.2.1 கலித்தொகை காட்டும் பண்பற்ற நடத்தைகள்

பண்பு நலன் குறைந்த மனித நடத்தைகளைக் கலித்தொகை பின்வரும் வகையில் எடுத்துக்காட்டுகின்றன.

1. ஒருவர் முன்னிருக்கும் பொழுது அவரைப் புகழ்ந்து அவர் நீங்கியவுடனே அவருக்குள்ள பழிகளைப் பிறரிடம் புறங்கூறுதல்.
2. ஒருவரிடம் செல்வம் உள்ள காலத்துப் பயன் பெற்று, அவர் வறுமையுற்ற காலத்து அவர்க்கு உதவி செய்யாதிருத்தல்.
3. நட்பாக இருந்த பொழுது ஒருவரிடமுள்ள மறை பொருளை உணர்ந்து பின் அவர் பிரிந்த காலத்தில் அம்மறைப் பொருளைப் பிறர்க்குச் சொல்லுதல் ஆகிய பண்பற்ற செயல்களை எடுத்துரைக்கின்றது.

இச்செயல்களைச் செய்வோரை முறையே புல்லியார், உணர்விலார், பீடிலார் எனத் தூற்றுகின்றது.

**சிறப்புச் செய்து உழையராப் புகழ்பு ஏத்திமற்று அவர்**
**புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்பு**
**(கலி.25:15-16)**

**செல்வத்து சேர்ந்தவர் வளன் உண்டு மற்றுஅவர்**
**ஒல்கத்து நல்கிலா உணர்விலார் தொடர்பு (கலி.25:19-20)**

**பொருந்திய கேண்மையின் மறை உணர்ந்து அம்மறை**
**புரிந்தக்கால் பிறர்க்கு உரைக்கும் பீடிலார் தொடர்பு**
**(கலி.25:23-24)**

என்று புறங்கூறுவோராக, அறிவற்றவராக, பெருமையற்றவராகக் காட்டுகின்றது.

### 5.2.2 நன்றி மறத்தல்

ஒருவர் தமக்குச் செய்த உதவியை மறக்கும் எண்ணமுடையவர், செல்வம் இருக்கும் வரை சேர்ந்திருந்து செல்வம் குறைந்தவுடன் இனி அவரிடம் பயன் ஒன்றும் இல்லை என்று எண்ணும் எண்ணமுடையவர் நன்றியில்லாதவர் ஆவர். இத்தகையவரை அகநானூறு, நயனில் மாக்கள் (அகம்.71:3) என்று குறிப்பிடுகிறது. நயம் என்பது நன்றியாகும். நன்றி ஒருதனி நாகரிகம். நன்றி மறத்தல் நல்ல மனிதனின் அடையாளம் அன்று என்கிறார் (சிவம். சிவராசன், 1998:17). நன்றி மறந்து செயல்படும் தன்மையைக் கலித்தொகை,

**கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான்**
**விச்சைக்காண்**
**தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்**
**ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான் மற்று அவன்**
**எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்**
**கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்**
**ஆளிலான் குடியேபோல் தமியவே தேயுமால் (கலி.149:4-9)**

என்ற வரிகள் மூலம் எடுத்துக்காட்டுகின்றது. இதில் தன் ஆசிரியர் மனம் வருந்திய போது, தன் கைப்பொருளைக் கொடுத்து உண்ணாது தான் மட்டும் உண்டு வாழ்தல், தனக்கு உதவினவர்களுக்கு ஓர் வருத்தம் வரும் போது உதவாதிருத்தல், உறவினர் வறுமையில் வாட தான் மட்டும் இன்புற்று வாழ்தல் ஆகிய பண்பு குறைகளைக் காணமுடிகின்றது. மேலும், செய்ந்நன்றி கேடு உடம்பினை ஒழித்து உயிர்போன இடத்தும் அது நுகராமல் செல்லாது என்பதையும் அறிய முடிகிறது. கலித்தொகையின் மற்றொரு பாடல், சுற்றத்தார் துன்புறும்படி தான்மட்டும் மகிழ்ச்சியுடன் வாழ்கின்றவனுடைய செல்வம் நிலைக்காது (கலி.34) என்கிறது.

நற்பண்புகளைக் கொள்ளாது, ஆட்சி செலுத்தும் அரசன் இழிவிற்குரியவனாக கருதப்படுவான். தன் புகழை உலகம் பரவச் செய்து, தன்னை உயர்வு படுத்தியவர்களுக்கு ஒரு நிலையில் துன்பத்தைச் செய்து, நடுக்கமான மொழிகளைக் கூறி கொன்று விடும் இயல்புடைய கொடுங்கோல் அரசனின் செயலைக் கலித்தொகை,

**உரைசெல உயர்ந்து ஓங்கி, சேர்ந்தாரை ஒருநிலையே**
**வரைநில்லா விழுமம் உறீஇ, நடுக்குஉரைத்து, தெறல் மாலை**
**அரைசினும் அன்பு இன்றாம், காமம் (கலி.146:1–3)**

என்று எடுத்துரைக்கிறது. தீய பண்பு கொண்ட அரசனின் செயலைக் காட்டிலும் காமத்தின் செயல் கொடுஞ்செயலாக உள்ளதைக் குறிப்பிடுகிறது. இங்கு, காமத்தின் செயலை மிகுதிப் படுத்திக் கூறினாலும்,

**காட்சிக்கு எளியன் கடுஞ்சொல் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம் (குறள்.386)**

என்ற குறள்வழி ஒப்பநோக்க தகுதியுடையவரா என்பது சிந்திக்கத்தக்கது. இதில், தன்புகழ் பரவக் காரணமாக இருந்தவரின் செயலைமறந்து, அவரைக் கொல்லத் துணியும் அரசனின் பண்பற்ற செயல் தெளிவாகத் தெரிகிறது.

### 5.2.3 பொய்ச் சான்று

பொய்ச்சான்று அக்கால வாழ்க்கையில் வழக்கத்தில் இருந்ததை,

**கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி (கலி.34:10)**

என்ற வரி உணர்த்துகிறது. பொய்ச்சான்று கூறியவன் நிழலுக்கு ஒதுங்கிய மரமும் பட்டுப் போகும் என்னும் நம்பிக்கை நிலவியது.

குறுந்தொகை, பொய்ச்சாட்சியின் தீய பண்பை அறிந்து, அப்பண்பு சான்றோர்க்கு அமைதல் இல்லை என்கிறது. உண்மையான நிகழ்ச்சியை மறைத்துப் பொய்ச்சான்று கூறுதல் சான்றோர் இயல்பு அன்று. இதனை,

**அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை** (குறு.184:1)

என்ற வரி உணர்த்துகின்றது.

நற்றிணை பாடல் ஒன்று பொய்யுரைக் கூறுவதை, நிலவின் மேல் ஏற்றி விளக்கியுள்ளது. பொருளுக்காக, தலைவன் பிரிந்து செல்கிறான். அவன் இருக்கும் இடத்தை அறிய தலைவி ஆர்வம் கொள்கிறாள். நிலவை நோக்கி, நீ அறியாத இடமில்லை. என் காதலர் உறையும் இடம் உனக்குத் தெரியும். அவன் இருக்கும் இடத்தை எனக்கு காட்டுவாயாக என வேண்டுகிறாள்.

திங்கள் விடை கூறாததால் அதன் மேல் வெறுப்புற்று, நீ அறிந்த அளவு சான்று கூறாது பொய்யை மேற்கொண்டாய். என்தோள் அழகு இழந்தாற் போன்று நாள்தோறும் இளைத்துக்கவின் இழப்பாய் என்கிறாள். தன்னுடைய எதிர்பார்ப்பை நிலவின் மேல் ஏற்றிக் கூறுவதாக இருந்தாலும்,

**நற்கவின் இழந்தவென் தோள்போற் சாஅய்ச்**
**சிறுகுபு சிறுகுபு செரீஇ**
**அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே** (நற்.196:7-9)

என்ற வரிகள் உண்மையை மறைத்து உரைக்கும் பண்பு இருந்ததை வெளிப்படுத்துகிறது.

### 5.2.4 மனச்சாட்சி

தாம் செய்யும் தீமைகள் பிறருக்குத் தெரியாது. அதனை அவர்கள் அறிய மாட்டார்கள் என்று நினைத்து தீமை புரிபவரை அவரின் மனமே அழித்து விடும். பிறர் அறியாமல் ஒருவர் குற்றம் செய்யினும் அவர் மனம் அவர் செய்த குற்றத்தை மறக்காது. அவருடைய மனத்தைக் காட்டிலும் நெருங்கிய சாட்சி வேறில்லை. இதனைக் கலித்தொகை,

**நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்**
**நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை** (கலி.125:2–4)

என்று எடுத்துக்காட்டுகிறது. பிறருக்குத் தெரியாமல் தீமை செய்யும் பண்பு இருந்ததனால் இத்தகு கருத்துரைகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன என்பதை உணர முடிகிறது.

**தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்த பின்**
**தன்னெஞ்சே தன்னைச் சுடும்** (குறள்.293)

என்ற வள்ளுவரின் கருத்தும் ஒப்பிடத்தக்கது.

### 5.2.5 இருண்ட உள்ளம்

அன்பு, அருள், அறம் எதையும் கருதாது, மற்றவர்க்குத் துன்பம் தரும் செயல்களைச் செய்பவனைக் கலித்தொகை பின்வரும் வகையில் எடுத்துக்காட்டுகிறது.

அருள் முழுவதும் அற்றுப் போனது போன்ற தோற்றம் உடையவன். அறம் செய்தல் இம்மைக்கும் மறுமைக்கும் பயன்தரும் என்று கருதாதவன். பிறர்க்கு நல்லது எதையும் செய்யாதவன். பலரும் கண்டு அஞ்சுமாறு செயல்களைச் செய்பவன் என்று பண்பில் குறைவுற்று இருக்கும் தன்மையை வெளிப்படுத்துகிறது. நற்பண்புகளை இழந்து, அம்மனம் மருட்சி அடைவது போன்று உலகில் மெல்ல இருள் வந்து சேர்கிறது என்று இருண்டு கிடக்கின்ற மனநிலையை உலகில் தோன்றும் இருளோடு உவமை படுத்துகிறது. இதனைக் கலித்தொகை,

**அருள் தீர்ந்த காட்சியான் அறன்நோக்கான் நயம் செய்யான்**
**வெருவுற உய்த்தவன் நெஞ்சம் போல் பைய**
**இருள் தூர்பு** (கலி.120:1–3)

என்று சான்று காட்டுகிறது. நற்பண்புகள் இல்லாது, பிறரை அச்சுறுத்தி வாழும் பண்பற்ற நடத்தையைக் காணமுடிகிறது. கொடிய உள்ளம் கொண்டு செய்யும் கொடிய செயல்களை,

**வெள்ளமான் நிறம்நோக்கிக் கணைதொடுக்கும் கொடியான் போல்**
**(கலி.120:11)**

**வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் போல்**
**(கலி.120:17)**

ஆகிய வரிகள் எடுத்துக்காட்டுகின்றன. வெள்ளத்தில் சிக்கிய மானைக் கரையேற்ற முயலாமல் அம்பெய்திக் கொல்லுதலும், வெந்த புண்ணில் வேல் நுழைத்து துன்புறுத்தலும் கொடுமையான எண்ணம் கொண்டு செய்யும் கொடிய செயல்களாகும்.

### 5.2.6 வஞ்சித்து மறைத்தல்

தனக்குத் தெரிந்த ஒன்றைத் தெரியாது என்று கூறி மறைக்கும் குணமுடையவரைக் கலித்தொகை வெளிப்படுத்துகிறது. தலைவியின் ஆற்றாமையைத் தலைவனிடத்து வெளிப்படுத்தும் தோழி, அவனிடம் தலைவியைக் கைவிடாமல் அவளின் வருத்தத்தைப் போக்குவாய். அவளைக் கைவிடுவையாயின் அது ஒருவன் நோயால் வாட, அந்நோய் தீர்க்கும் மருந்தையும் அதன் திறத்தையும் அறிந்த ஒருவன் அம்மருந்தை அறியேன் என்று வஞ்சித்து மறைத்தலினும் கொடியது என்று எடுத்துரைக்கின்றாள். அவனிடம்,

**வருந்திய செல்லல் தீர்த்த திறன்அறி ஒருவன்**
**மருந்து அறை கோடலின் கொடிதே (கலி.129:23-24)**

என்று உரைப்பதன் மூலம் மருத்துவன் உண்மைக்கு மாறாக நடக்கும் தன்மையை அறிய முடிகிறது.

### 5.2.7 சூதாட்டம்

மக்களுடைய பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளுள் ஒன்றாக சூதாட்டம் இருந்தது. பாழ்பட்ட அம்பலத்தில் முதியோர் சூதாடினர் (புறம்.52:13-14). பொருளை வைத்து சூதாடினர். சூதாட்டத்தில் பொருளை இழந்தவன் மிகுந்த துயரை அடைவான். இதனை,

**உடைப்பொதி இழந்தான்போல் உறுதுயர் உழப்பவோ**
**(கலி.136:12)**

என்ற வரி குறிப்பிடுகிறது. கவறாடிப் பொருளையிழந்தவன் துயருற்று அதனைப் பழித்த செய்தி இருக்கு வேதம் முதலியவற்றிலும் கூறப்பட்டுள்ளது என்று

இ.வை. அனந்தராமையர் அடிக்குறிப்பில் உரைக்கின்றார் (நச்சினார்க்கினியர், 1984:874).

சூதாடு கருவி பெயர்ந்து விழுவது போன்று நிலையில்லாதது பொருள். காமக்கணிபசலையார்,

**கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை (நற்.243:5)**

என்கிறார். வள்ளுவரும்,

**உருள்ஆயம் ஓவாதுகூறின் பொருள் ஆயம்**
**போஓய்ப் புறமே படும் (குறள்.933)**

என்றுரைக்கிறார். மேலும்,

**சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்**
**வறுமை தருவதொன்று இல் (குறள்.934)**

என்றும்

**பொருள்கெடுத்து பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து**
**அல்லல் உழப்பிக்கும் சூது (குறள்.938)**

என்றும் குறிப்பிடுகின்றார். சூதாட்டத்தால் உண்டாகும் வறுமையை, பொருளைக் கெடுத்து பொய்யை மேற்கொள்ள செய்து, அருளைக் கெடுக்கும் சூதின் தீமையை விளக்குகின்றார். தம்பொருளை இழக்கச் செய்வதோடு தம்மிடமுள்ள நற்குணங்களை நீங்கச் செய்யும் ஆற்றலும் சூதிற்கு உண்டு என்பதை மேற்கூறிய சான்றுகள் உணர்த்துகின்றன.

### 5.2.8 தவறும் தண்டனையும்

நாட்டில் குற்றங்கள் கடியப்படுதல் வேண்டும். குற்றங்களுக்கு வழங்கப்படும் தண்டனைகள் குற்றங்கள் பெருகாமல் இருப்பதற்கு வழி செய்யும். தண்டனையை வழங்க முற்படுமுன், செய்த குற்றத்தின் தன்மையை அறிதல் வேண்டும். அரசன் ஏவிய தொழிலைச் செய்ய மறுத்தமைக்கு, போரில் தோற்றமைக்குப் பல்லைப் பிடுங்குதலும், விளைந்த பயிரை, பசு ஒன்று தின்றமைக்கு அதனை வளர்த்தவரின் கண்ணைப் பிடுங்குதலும், தோற்றவரின்

பிள்ளைகளை யானையின் காலால் இடறி கொல்லத் துணிதலும் ஆகிய செயல்கள் பண்டைத் தமிழகத்தில் நடைபெற்றுள்ளன.

### 5.2.8.1 பல்பிடுங்குதல்

சோழ மன்னன் ஒருவன் யானை பிடிக்க வீரர்களை ஏவினான். எயினி என்ற வீரன் சோழனின் ஆணைக்குக் கட்டுப்பட்டு யானை பிடிக்கச் செல்லவில்லை. சினம் கொண்ட சோழன் அவனைப் பிடித்துவர மத்தி என்பவனை ஏவினான். அவனும் படை கொண்டு சென்று எழினியுடன் போரிட்டு, அவனை அகப்படுத்தி, அவன் பல்லைப் பிடுங்கி வந்து வெண்மணி என்னும் ஊரினது வாயிற் கதவிலே பதித்தான் (அகம்.211:9-17).

சேரன் கணைக்காலிரும்பொறை மூவன் என்பவனைப் போரில் வென்றான். அவனுடைய வலிமையான முட்போன்ற பற்களைப் பிடுங்கி தன் வாயிற் கதவில் வைத்து இழைத்தான். இச்செய்தியைப் பொய்கையார்,

**. . . . . . . . . . . . . . . . . . . . மூவன்**
**முழுவலி முள்எயிறு அழுத்திய கதவின்**
**கானல்அம் தொண்டிப் பொருநன் வென்வேல்**
**தெறல் அருந் தானைப் பொறையன் (நற்.18:2-5)**

என்று பல்லைப்பிடுங்கிப் பதித்த கதவையுடைய கடற்கரை சோலையுடைய தொண்டி நகரின் தலைவனாகக் குறிப்பிடுகின்றார்.

### 5.2.8.2 கண்பிடுங்குதல்

வீரக்குடியினராகிய முதுகோசர் கொல்லையில் பசு ஒன்று மேய்ந்தது. அன்னிமிஞிலியின் தந்தை அது தன் பசு என்று உண்மையை உரைத்த போதும், கோசர்கள் அவரின் கண்ணைப் பிடுங்கி துன்புறுத்தினர். அது கண்ட அன்னிமிஞிலி சினம் கொண்டு, குறும்பியன் திதியன் என்பவர்களின் துணை கொண்டு கோசரைக் கொன்று தன் சினம் தணிந்தாள். இந்நிகழ்வைப் பரணர்,

**பாசிலை அமன்ற பயறுஆ புக்கென**
**வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து அருளாது**
**ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின் (அகம்.262:4-6)**

என்று எடுத்துக்காட்டுகின்றார்.

### 5.2.8.3 குழந்தைகளைக் கொல்லத் துணிதல்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானையில் காற்கீழிட்டு கொல்ல முயன்றான். அவன் செயலைக் கோவூர் கிழார் தடுத்து நிறுத்த முனையும் போது அப்பிள்ளைகளின் மழலை நிலையினை எடுத்துக்காட்டுகிறார்.

**களிறுகண்டு அழூஉம் அழாஅல் மறந்த**
**புன்தலைச் சிறாஅர், மன்று மருண்டு நோக்கி**
**விருந்தின் புன்கணோ உடையர் (புறம்.46:5-7)**

இதில் தம்மைக் கொல்ல வரும் யானையைக் கண்டு அப்பிள்ளைகள் தம் அழுகையை மறக்கின்றன. ஆனால், இதுநாள் வரையில் துன்பமறியாத அப்பிள்ளைகள், பலரும் கூடிய பொதுமன்றத்தில் அச்சத்துடன் நோக்கி புதியதொரு துன்பத்தை எய்துகின்றனர். உயிரிழக்கும் துன்பமாதலின் அதனை விருந்திற் புண்கண் என்றார் என்று பொருளுரைத்துள்ளது குறிப்பிடத்தக்கது (ஔவை சு. துரைசாமி பிள்ளை, 2002:125).

### 5.2.8.4 சங்கிலியில் பிணித்தல்

போரில் பகைவரின் வாளால் அழியாது உயிர் பிழைத்தால், சங்கிலியில் பிணிக்கப்பட்ட நாய்போல விலங்கு பூட்டித் துன்புறுத்தும் நிலையும் இருந்துள்ளது. குடவாயிலில் கோச்செங்கணானால் சிறைப்பட்ட கணைக்கால் இரும்பொறை,

**தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய (புறம்.74:3)**

என்று தன்னைச் சிறைப்படுத்தியதை, நாயினைச் சங்கிலியால் பிணைத்தலுடன் ஒப்பிட்டு வருந்துகின்றான்.

இவ்வாறு நல்வாழ்க்கைக்கு வேண்டாத சில தீய பண்புகள் அக்காலச் சமுதாயத்தில் இருந்துள்ளதை மேற்கூறிய சான்றுகளின் வழி அறிய முடிகிறது.

1. பெண்ணை நுகர்ந்து பின் கைவிட எண்ணுதல்.
2. கணவனால் கைவிடப்பட்டு வாழ்க்கையில் ஒதுக்கப்படுதல்.

3. பெண்ணை வழிமறித்து பண்பற்ற வார்த்தைகளைக் கூறுதல்.

4. பெண்களைக் காம நோக்குடன் அச்சுறுத்தல்.

ஆகிய செயல்கள் ஆடவரின் ஒழுக்கமற்ற நடத்தைகளை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

மாங்கனியைத் தின்றதற்கு, மாற்றார் தோட்டத்தில் பசு மேய்ந்ததற்கு ஒரு உயிரையும் கண்ணையும் எடுக்கும் அளவிற்கு அவர்களிடம் இரக்க உணர்வு இல்லாது போனதை, தோற்றவரின் பற்களைப் பிடுங்குதல், பகைவரின் பிள்ளைகளை யானையால் கொல்லத் துணிதல் போன்றவை மனிதநேயம் குறைந்து போனதை எடுத்துக்காட்டுகிறது.

### 5.3 ஒற்றுமையின்மை

பழந்தமிழகத்தைச் சேர, சோழர், பாண்டிய பேரரசர்கள் ஆட்சி புரிந்தனர். சிற்றரசர்களாக குறுநில மன்னர்கள், வேளிர்கள் இருந்தனர். இவர்கள் நாடாண்ட காலத்தைவிட, நாடு பிடிக்கும் காலம் அதிகமாக இருந்துள்ளது. மேலும், இவர்கள் தங்களுக்குள் நல்லுறவு கொண்டு ஒற்றுமையுடன் தமிழகத்தை ஆண்டனர் என்ற கருத்தை விட, ஒற்றுமையின்றி தங்களுக்குள் போரிட்டு அழிந்த அவலநிலைகளே மேலோங்கி உள்ளன.

சில அரசர்கள் ஒற்றுமையுடன் இருந்து நல்லாட்சி புரிந்தனர். பெரும்பான்மையான அரசர்கள் பகையுணர்வுடன் ஒற்றுமையின்றி வாழ்ந்து வந்துள்ளனர். குடிமக்கள் என்ற நிலையில், மக்கள் எவ்வித குறையுமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்ந்த காலம் சங்க காலம் என்று சான்றோர் பலரால் புகழப்படுகிறது. அரசியல் என்ற நிலையில், அரசர்கள் ஒற்றுமையின்றி தொடர்ந்து போர் நிகழ்த்தி, ஒருவரையொருவர் அழித்துக் கொண்ட காலமாக விளங்கியுள்ளது. தொடர்ந்து போர் நிகழும் காலத்தில் மக்கள் அமைதியான வாழ்வை மேற்கொள்ள முடியுமா? என்பது கேள்விக்குறி.

சங்க இலக்கியங்கள் புறவாழ்வில் மக்களின் உறவுகளை நேரடியாக விளக்காவிட்டாலும், அரசர்களின் உறவு நிலைகளை விளக்கியுள்ளன. ஒரு அரசன் மற்றொரு அரசனோடு நட்புறவு கொள்ளாமல் போரிடுதல், அவ்வாறு நட்புறவு கொண்டாலும் மாற்றாரை அழிக்க எண்ணியே

நட்புறவு கொண்டாடுதல் முதலான போக்குகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. மேலும் அரச வாழ்வைப் பெற, அரச குடிகளுக்குள்ளேயே நிகழும் போராட்டங்களையும் இவ்விலக்கியங்கள் எடுத்தியம்பியுள்ளன.

சங்க காலத்தில் மட்டுமன்று உலக வரலாற்றிலும் இந்நிகழ்வுகள் நடந்துள்ளன. இக்காலத்திலும் ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் நட்புறவு கொள்ளுதலும் நட்புறவு கொண்டு வேறொரு நாட்டை அச்சுறுத்தலும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக ஒரு நாட்டை அச்சுறுத்த பொருளாதாரத் தடை விதிக்கப்படும் எனக் கூறிய நிலையும், அதனையும் மீறி தடைக்குட்படுத்தப்பட்ட நாடு வளர்ச்சியடைவதைக் கண்டதும் உறவு பாராட்டுவதும், இணைந்து செயல்படுவதையும் இந்நூற்றாண்டில் காண முடிகிறது. இந்திய வரலாற்றில் காணப்பட்ட பதவிப்போட்டி, தலைமைப் போட்டி அரசியல் தலைவர்களின் குடும்ப உறவுகளுக்குள்ளும் நடைபெற்று வருகின்றன.

### 5.3.1 பேரரசர்களின் உறவு நிலை

மூவேந்தர்களும் ஒருவர் மற்றொருவரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணம் உடையவராக விளங்கினர். பேரரசன் தன்னை முதன்மைப் படுத்தவும், தன் நாட்டை விரிவுபடுத்தி தன் கீழ் மற்ற நாடுகளைக் கொண்டு வரவும் போர்மேற் சென்றான்.

மேலும் ஒரு அரசன் சிறந்து விளங்கினால் ஏனைய அரசர்கள் ஒன்று சேர்ந்து அவனை அழிக்க முற்பட்டனர். அவ்வாறு முற்படுகையில் குறுநில மன்னர்களும் துணை சேர்ந்தனர்.

சேரன் பாண்டியனுக்குப் பகைவன். பாண்டியன் சோழனுக்குப் பகைவன். சோழன் சேரனுக்குப் பகைவன். மேலும், சேரனுக்குச் சோழனும் பாண்டியனும், சோழனுக்குப் பாண்டியன் சேரனும், பாண்டியனுக்குச் சோழனும் சேரனும் பகைவர்களாக அமைந்து போருக்கெழுந்தனர். இவர்களின் பகைநிலையை, சங்க காலத்து ஆட்சியாளர்களிடையே ஒற்றுமையின்மையும் பகைமையுணர்ச்சியும் இயற்கையாகவே நிலவி வந்ததைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. சேர, சோழ, பாண்டியராகிய முடியுடை மூவேந்தர் மூவரும் தம்முள் உறவாடியதை விட பூசலிட்டுக் கொண்டதே

மிகுதியென எண்ண வேண்டியுள்ளது. மூவேந்தர்கள் மட்டுமன்றி அற்றைத் தமிழகத்தில் வாழ்ந்த ஏனைய குறுநில மன்னர்களும் வீரத்தின் பெயரால் ஒற்றுமையின்மையையே வளர்த்து வந்தனர். புறப்பாடல்கள் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் எதனை எடுத்தாலும் இவ்வுண்மை தெளிவாக விளங்கும் (ம.ரா. போ. குருசாமி, 1974:32).

மூவேந்தர்களுக்கிடையே நடைபெற்ற போர்களில் தலையாலங்கானம் வெண்ணிப் பறந்தலை, தகடூர் கழுமலம், திருப்போர்ப்புறம் ஆகிய இடங்களில் நடந்த போர்கள் குறிப்பிடத்தக்கனவாக அமைந்துள்ளன. இவற்றில் திருப்போர்ப்புறம் என்னும் இடத்தில் நடைபெற்ற போர் பழந்தமிழகத்தில் நடைபெற்ற போர்களில் குறிப்பிடத்தக்கதாக வரலாற்று ஆசிரியர்களால் காட்டப்பட்டுள்ளது. இப்போரில் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் ஈடுபட்டனர். இப்போரில் ஒருவரும் உயிர் பிழைக்கவில்லை. போரை நேரில் கண்ட கழாஅத்தலையாரும் (புறம்.62), பரணரும் (புறம்.63) அரசர்களின் அழிவுக்கு இரங்கி பாடியுள்ளனர்.

**எனைப்பல் யானையும் மம்பொடு துளங்கி**
**விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே**
**விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்**
**மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே**
**தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்**
**தோல்கண் மறைப்ப வொருங்குமாய்ந் தனரே**
**விசித் துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்**
**பொறுக் குந ரின்மையி னிருந்துவிளிந் தனவே**
**சாந்தமை மார்பி னெடுவேல் பாய்ந்தென**
**வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர்** **(புறம்.63:1–10)**

அரசர்களின் அழிவுநிலையை இப்பாடலின் வழி அறிய முடிகிறது. போரின் போது கிள்ளிவளவனின் ஆற்றலைக் கண்டு பகைவருக்கு ஏற்படும் உயிர் அச்சத்தைக் கோவூர்கிழார் பின்வருமாறு விளக்குகின்றார்.

**காலனும் காலம் பார்க்கும் பாராது**
**வேலீண்டு தானை விழுமியோர் தொலைய**
**வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே**
. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
**கனவி னரியன காணா நனவிற்**
**செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி**
**மையல் கொண்ட வேமமி லிருக்கையர்**
**புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்**
**கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு**
**பெருங்கலக் குற்றன்றாற் றானே** (புறம்.41:1–16)

என்கிறார். காலன் ஒரு உயிரைக் கவர்வதாயின் காலமும் இடமும் அறிந்தேதான் கவரக்கூடும். ஆனால் கிள்ளிவளவனோ இடம் காலம் எதையும் பாராமல் நினைத்த அளவிலேயே பகைமன்னரை அழித்தொழிக்கும் ஆற்றலுடையவன். அதனால் பகைவர் இவன் படையெடுப்பை எண்ணியவுடனேயே தாம் இறக்க வேண்டுமே என்ற எண்ணத்தால் தம் குழந்தையை அணைத்து முத்தமிட்டு மகிழ்வர். மனைவியர் அறியின் வருந்தித் துடிப்பர் என்றெண்ணி தம் துயரை வெளிக்காட்டாது மறைப்பர். தம் உயிருக்காகப் பயந்து வருந்தும் நிலையுடையவராக அமைகுவர்.

### 5.3.2 உறவுக்குள்ளே ஒற்றுமையின்மை

பேரரசர்கள் ஒருவரோடு ஒருவர் போரிட்டு அழிந்த நிலை ஒருபக்கம் நிலவ, மறுபக்கம் அப்பேரரசர்களின் உறவுகளே அவ்வரசுகளை அரசாட்சி நடத்தவிடாது எதிர்த்த நிலையும் நடந்துள்ளது. கரிகாற் சோழன் அரசு கட்டிலில் ஏறியபோது அவனது தாயாதிகள் அவனுக்கு எதிராகக் கலகம் செய்து போரிட்டனர். அவர்களையெல்லாம் வென்று, பிறகு கரிகாற்சோழன் முடி சூடினான்.

சோழர் ஒன்பது தாயாதிகளாகப் பிரிந்து போரிட்டனர். அவர்களின் நிலையினைச் சீனி. வேங்கடசாமி கூற்றாக, சங்க இலக்கியங்களை ஆராய்ந்து

பார்க்கிற போது, சோழ அரசர்களைப் பற்றி ஒரு செய்தி தெரிகிறது. சோழ மன்னர் பரம்பரையில் ஒன்பது தாயாதிகள் இருந்தனர். அவர்கள் முடி மன்னனாகிய பெரிய சோழ அரசனுக்குக் கீழடங்கிச் சிற்சில நாடுகளை அரசாண்டனர். ஆனால், அவர்கள் அடிக்கடி தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். சோழர் குலத்து அரசர் தங்களுக்குள்ளே போரிட்டுக் கொண்டதைச் சங்க நூல்களில் காண்கிறோம் (அரங்க. இராமலிங்கம், 1987:41).

தாயாதிப் போர் ஒருபுறமிருக்க, சோழ அரசர்களுள் அண்ணன் தம்பிகளுக்குள் அடிக்கடி போர் நிகழ்ந்த வண்ணம் இருந்தன. நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் அரசுரிமை காரணமாகப் போரிட்டுக் கொண்டனர். நெடுங்கிள்ளி நலங்கிள்ளியின் நாட்டைக் கைப்பற்ற எண்ணி போர் தொடுத்தான். நலங்கிள்ளியின் ஆற்றலைக் கண்டு அஞ்சி, நெடுங்கிள்ளி ஆவூர்க்கோட்டையைக் கைப்பற்றினான். அதனை அறிந்த நலங்கிள்ளி அக்கோட்டையைத் தன்வசப்படுத்த எண்ணி, அதனை முற்றுகையிட்டான்.

நெடுங்கிள்ளி வெளிவந்து போர்புரியாது, கோட்டைக்குள் இருந்தான். நலங்கிள்ளியும் முற்றுகையை விடாதிருந்தான். இதனால் ஆவூரில் இருந்த மக்கள் பெரிதும் துன்பமுற்றனர். உணவுப் பொருள்கள் குறைந்ததால் பலர் பசியால் வாடினர். குழந்தைகள் பால் இல்லாமல் அழுதன. குடிமக்கள் குடிநீர் இன்றி வருந்தினர்.

**பாலில் குழவி யலறவு மகளிர்**
**பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்**
**வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும் (புறம்.44:6-8)**

ஆகிய இக்காட்சியைக் கண்ட கோவூர்கிழார், நெடுங்கிள்ளியிடம் கோட்டையைத் திறந்து விடுமாறு அறிவுறுத்துகிறார். மேலும், சோழர் குடிகளுக்குள்ளே நிகழும் இப்போர்ச் செயலைக் கண்டு மனம் வருந்தி இருவரையும் சந்து செய்விக்கின்றார் (புறம்.45).

### 5.3.2.1 முற்றுகையின் நோக்கம்

ஒரு கோட்டையை முற்றுகையிட்டால் எவ்விதமான பொருளும் அந்நாட்டிற்குள் செல்ல முடியாது. இவ்வாறு அத்தியாவசிய பொருட்கள்

செல்வதைத் தடுத்து விடுவதே முற்றுகை இடுவோரின் முதற் செயலாகும். இதை, இக்காலத்தில் விதிக்கப்படுகிற பொருளாதாரத் தடையோடு ஒப்பிட்டு நோக்கலாம். ஒருநாடு அடிபணியும் என்ற எண்ணத்துடன் இத்தடை விதிக்கப்படுகிறது. முற்றுகை என்பது, கோட்டையிலுள்ளோருக்கு உணவும் நீரும் கிடைக்காமல் தடுத்து, அவர்களை அடிமைப்படுத்தும் வகை (கலைக்களஞ்சியம், தொகுதி-1, 1954:174) எனக் கூறப்பட்டுள்ளது.

கோட்டைக்குள் இருப்பவர்கள் உணவுப் பொருள் இல்லாமையால் உயிர்விடுதல் அல்லது தமக்கு அடங்கித் தம்மிடம் வந்து தாழ்தல் என்பது முற்றுகையின் முக்கிய நோக்கமாக இருந்துள்ளது. இதிலிருந்து பகை மன்னர்கள் மட்டுமன்று அவர்களது குடிகளும் பாதிக்கப்படுவதை அறிய முடிகிறது. போரால் மக்கள் சமுகத்திற்கு ஏற்படக் கூடிய கேடுகள் பற்றி மக்கள் உணரவில்லை என்றே தெரிகிறது. ஆனால் மன்னர்களுக்குத் தொண்டு செய்வதிலும் மன்னர்கள் தலைமையின் கீழ் ஒற்றுமையாக மண்ணுக்குப் போராடுவதிலும் மக்கள் மகிழ்ச்சியடைந்தனர் என்று கருத இடமுண்டு (அரு. சின்னசாமி, 1979:26) என்ற கருத்து இங்கு பொருந்தியதாக உள்ளது.

### 5.3.2.2 தந்தை–மகன்

சோழர்களிடையே தந்தை-மகன் என்ற உறவு நிலையிலும் மோதல் ஏற்பட்டுள்ளது. உறையூரை ஆண்ட கோப்பெருஞ்சோழனை, அவனுடைய மகன்களே எதிர்த்துள்ளனர். தம் மக்கள் மேல் போரைத் தவிர்க்குமாறு புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ்சோழனை வேண்டுகிறார் (புறம்.213). கோப்பெருஞ்சோழன் அவமானம் பொறாது வடக்கிருந்து உயிர் விடுகின்றான் (புறம்.221).

இவ்வரசர்களின் பகைமையை, ஒருகுடியில் பிறந்தவர், தம் குடி ஒழிந்த ஏனைய குடிகளில் பிறந்தாரோடு பகைத்து வாழ்தலோடு மட்டும் நின்றாரல்லர். ஒரு குடியில் பிறந்தவர்களே, ஒருவரொருவர் பகைத்தும் போரிட்டு அழித்தார்கள். பண்டைத் தமிழகத்தின் பாராட்டுக்குரிய அரசியல் சூழ்நிலை. தமிழரசர்களின் போர்வெறி அத்துணை ஆற்றல் கொண்டு தலைதூக்கி ஆடிற்று (கா. கோவிந்தன், 2003:282).

### 5.3.3 மூவேந்தர் ஒற்றுமை

சங்க இலக்கியங்களில் மூவேந்தரும் நட்புறவு கொண்டு ஒற்றுமையுடன் வாழ்ந்தனர் என்ற செய்தி அரிதாகவே காணப்படுகிறது. பேரரசர்களிடையே ஒற்றுமையின்மை இயல்பாக அமைந்திருந்ததால்தான் அவர்களில் இருவரோ மூவரோ ஒற்றுமையுடன் இருப்பதைக் கண்டு புலவர்கள் மகிழ்ந்துள்ளனர். காரிக்கண்ணனார், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் நட்புடன் இருந்ததைக் கண்டு வாழ்த்துகின்றார் (புறம்.58).

காரிக்கண்ணனாரைப் போன்று ஔவையாரும், சேரன் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய மூவேந்தரும் கொண்ட நட்பு நிலையை,

**கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்**
**யானறி யளவையோ விதுவே வானத்து**
**வயங்கித் தோன்று மீனினு மிம்மென**
**இயங்கு மாமழை யுறையினும்**
**உயர்ந்துமேற் தோன்றிப் பொலிகநுந்நாளே (புறம்.367:14-18)**

என்று வாழ்த்துகின்றார். பெரும்பான்மையாக பேரரசர்கள், அவர்களது குடிகள் மேலும், ஒரே குடியில் பிறந்தவர்கள் என இவர்களின் பகையுணர்வுகளே அக்காலத்தில் மேலோங்கியிருந்தது. எனவே, தமிழினத்தின் பிற்காலத்துச் சீர் குலைவிற்குச் சங்க காலத் தமிழ்த் தலைவர்களின் ஒற்றுமையின்மையையே வித்தாகக் கொள்ள வேண்டியுள்ளது (ம.ரா.போ. குருசாமி,1974:32) என்ற கருத்து ஆழ்ந்து நோக்கத் தக்கதாக அமைந்துள்ளது.

### 5.3.4 சிற்றரசர்களின் உறவு நிலை

சிறிய ஊர்கள் பலவற்றிற்குத் தலைவர்களாக இருந்து கொண்டு ஆட்சி புரிந்த சிற்றரசர்களின் நிலையும் இவ்வாறுதான் இருந்துள்ளது.

சூழ்நிலைக்குத் தகுந்தவாறு பேரரசர்களுக்குப் பணிந்தும் அவர்களை எதிர்த்தும் வந்தனர். பேரரசர்களும் குறுநில மன்னர்களுடன் நட்புறவு

வைத்துக் கொள்ள விரும்பினர். அந்த நட்புறவும் பிற அரசுகளை அழிக்கப் பயன்படுத்தப்பட்டது. குறுநில மன்னர்களும் பேரரசர்களின் துணை கொண்டு மற்ற சிற்றரசர்களை அழித்தனர். இருபெருவேந்தரின் வெற்றியும் தோல்வியும் குறுநில மன்னர்களிடம் அடங்கியிருந்தன.

குறுநில மன்னர்களும் தம்முள் போரிட்டு ஒருவரை ஒருவர் அழித்துள்ளனர். சான்றாக, அதியமான் திருக்கோவலூரின் மீது படையெடுத்துச் சென்று திருமுடிக்காரியை வென்று அவனை நாட்டை விட்டுத் துரத்தினான். அதியமானால் நாடிழந்த காரி, பெருஞ்சேரல் இரும்பொறையின் துணையை நாடினான். பெருஞ்சேரல் இரும்பொறை வல்வில் ஓரியின் ஆட்சியிலிருந்த கொல்லிமலைப் பகுதியைக் கைப்பற்ற ஆர்வம் கொண்டான். சேரனின் கருத்தையறிந்த காரி ஓரியுடன் போரிட்டு அவனைக் கொன்றான். இச்செய்தியை,

**. . . . . . . . . . . . . . . . செவ்வேல்**
**முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி**
**செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்**
**ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த**
**செவ்வேர்ப் பலவின் பயன்கெழு கொல்லி (அகம்.209:11-15)**

என்று கல்லாடனார் குறிப்பிடுகின்றார்.

ஓரியைக் கொன்ற காரியை அதியமான் அழித்தான் (புறம்.99). காரியை வென்ற அதியமானைப் பெருஞ்சேரல் இரும்பொறை கொன்றான் (பதி.78). இவ்வாறு ஓரி காரியாலும், காரி அதியமானாலும், அதியமான் பெருஞ்சேரல் இரும்பொறையாலும் கொல்லப்பட்டனர். மூன்று பேரரசர்களும் இணைந்து பாரி என்ற குறுநில மன்னனை அழித்தனர் (புறம்.112).

பேரரசர்களைப் போன்று குறுநில மன்னர்களிடையேயும் அண்ணன் ஆட்சியைத் தம்பி கைப்பற்றுவதும் நடந்துள்ளது. குமணன் ஆட்சியை அவனுடைய தம்பி இளங்குமணன் வலிந்து கைப்பற்றினான் (புறம்.165).

போரில் பேரரசர்களுக்குத் துணையாக சிற்றரசர்களும், சிற்றரசர்களுக்குத் துணையாக பேரரசர்களும் ஈடுபட்டுள்ளனர். வெண்ணிப்

போர்க்களத்தில் இருபெரு வேந்தரும் பதினொரு வேளிரும் கரிகாலனை எதிர்த்தனர் (அகம்.246). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சேரனுடனும், சோழனுடனும் வேளிர் ஐவருடனும் போர் புரிந்தான் (அகம்.36). வேளிர் எழுவரையும் பெரும்பூட்சென்னி என்ற சோழ மன்னன் வென்றான் (அகம்.44).

பேரரசன் ஆகவேண்டும் என்ற குறிக்கோளுக்காக உறவுகளுடனும் இனத்துடனும் போராடக் கூட்டணி அமைத்தனர் சங்க கால அரசர்கள். இன்றைய அரசியலிலும் ஆட்சிக்காக, பதவிக்காக பெரிய கட்சிகள், சிறிய கட்சிகள் என்ற வேற்றுமையின்றி கூட்டணி உறவுகள் அமைவதை இத்துடன் ஒப்பிட்டு நோக்கலாம்.

### 5.3.5 அமைதியின்மை

அமைதியான வாழ்க்கை, மகிழ்ச்சியான வாழ்க்கை என்பது அனைவராலும் விரும்பத்தக்கது. அமைதி நிலவும் நாட்டில் வாழும் மக்களும், அமைதியான வாழ்க்கையை வாழ்வர் என்பது உண்மை. இன்று அமைதி நிலவும் நாட்டிலேயே ஆயிரம் பிரச்சனைகளை எதிர் கொள்ள வேண்டியிருக்கிறது என்றால் அக்காலத்தில் அடிக்கடி நடைபெற்ற போர்களால் மக்கள் எத்தனை பிரச்சனைகளை எதிர் கொண்டிருப்பார்கள் என்பது சிந்திப்பதற்குரியது. தமிழகமெங்கும் பலகால கட்டங்களில் பல்வேறு போர்கள் நிகழப்பெற்று வந்தமையால், நாட்டில் அமைதி நிலவவில்லை. போர் மேகமே சூழ்ந்திருந்தது. தலைநகரின் தொலைவிலிருந்த கிராமங்களில் வாழ்ந்த ஏழை மக்கள் அண்மையிலிருந்த சிற்றரசர்களின் தொல்லைகளுக்கு ஆளாகி மிகுந்த துன்பத்திற்குட்பட்டனர். அவர்களுடைய ஆனிரைகளைக் கவர்ந்து சென்றனர். அவர்களுடைய உடைமைகள் எரிந்து போயின. எதிர்ப்பவர்கள் கிராமங்களிலிருந்து விரட்டப்பட்டனர் அல்லது கொலையுண்டனர் (வே. கனகசபை, 1973:109).

போர் அறமாக போர் நடைபெறுமுன் பசு, பெண்டிர், அந்தணர், புதல்வர் பெறாதோர், பிணியாளர் எனும் இவர்கள் விலக்கப்படுகின்றனர் (புறம்.9). எங்ஙனமாவது போர் நிகழ்ந்தாலும் படைக்கும் படைக்குந்தான் போரே ஒழிய மக்களுக்கும் போருக்கும் நேரிடைத் தொடர்பு இராது. போர்

தொடங்குவதற்கு முன் அறிவிப்புச் செய்து போரில் தொடர்பற்ற மக்களையும் மாக்களையும் போர் நிகழும் இடத்துக்கப்பால் இருக்கச் செய்து விட்டே போர் தொடங்கும் நியதியை ஏற்றுக் கொண்டிருந்தனர். போர்ப் பறை கேட்டதும் மக்கள் தக்க காவல் இடத்தை அடைந்து விடுவர். அவ்வாறு அடைய முடியாத ஆவும் பிறவும் காணப்படுமேல் அவைகளைப் படையெடுத்து வருவோரே அப்புறப்படுத்த முயல்வர் (சி. இலக்குவனார், 1966:140). போருக்குரிய மரபு போற்றும் வகையில் இருக்கின்றது என்றாலும், போரினால் உயிரழிவு, ஊரழிவு, நாடழிவு ஏற்பட்டுத் தவிக்கின்ற மக்களிடையே மேற்கூறியவர்களைப் போருக்கு முன்னால் பாதுகாப்போம் என்று கூறுவது கேள்விக்குரியதாக உள்ளது.

### 5.3.5.1 தஞ்சம் புகுதல்

போரின் போது, மக்கள் தங்கள் உடைமைகள் அனைத்தையும் இழந்து உயிர் பிழைத்தால் போதும் என்று பிறநாடுகளில் தஞ்சமடைகின்றனர். சான்றாக, இலங்கைத் தமிழர்கள் அகதிகளாக பல்வேறு நாடுகளில் தஞ்சமடைதலைக் குறிப்பிடலாம். தங்கள் சொந்த நாட்டில் வாழும் போதே, பல இடையூறுகளைச் சந்திக்கின்ற மக்கள் அகதிகளாக மற்ற நாடுகளுக்குச் சென்று வாழும்போது, அங்கு அவர்களுக்கு ஏற்படுகின்ற பிரச்னைகளையும் நோக்க வேண்டும். இக்காலத்தில் குடி உரிமை உள்ளவர்களுக்கே போதிய கல்வி, வேலைவாய்ப்பு கிடைக்காத நிலையில் அகதிகளின் நிலை எவ்வாறு இருக்கும் என்று எண்ணுதல் வேண்டும்.

சங்ககால மக்களும் பகைவரின் படைக்குப் பயந்து தாம் வாழும் இடத்தை விட்டு குடி பெயர்ந்துள்ளனர். அவ்வாறு குடிபெயர்ந்த குடிமக்கள் தம் இனத்தவரையும், பசு முதலியவற்றையும் விட்டு நீங்கியுள்ளனர்.

**வெஞ்சின வேந்தன் பகைஅலைக் கலங்கி**
**வாழ்வோர் போகிய பேர்ஊர்** **(நற்.153:8–9)**

**இனந்தோ டகல ஊருடன் எழுந்து** **(பதிற்.19:16)**

என்ற சான்றுகள், அக்காலத்தில் மக்கள் தங்கள் உயிருக்காக, வாழ்விடங்களை விட்டு, உடைமைகளை விட்டு வேற்றுப் பகுதிகளில் தஞ்சம் அடைந்துள்ளதை எடுத்துக்காட்டுகின்றன.

### 5.3.5.2 மறுசீரமைப்பு

கல்வி, மருத்துவம், அறிவியல், பொருளாதாரம் எனப் பலதுறை சார்ந்த வளம் பெற்றிருக்கும் இந்நூற்றாண்டில் நடைபெறும் போரினால் உயிர், உடைமை, உரிமை இழப்புகள் உண்டாவதைக் காணும் போது மனம் வேதனைப் படுகிறது. இழப்புகளை ஈடுகட்டி, பாதிப்புகளைச் சரி செய்ய எத்தனை ஆண்டுகளாகின்றன. சான்றாக, ஆப்கானிஸ்தான், ஈராக் ஆகிய நாடுகளில் நடைபெற்ற தாக்குதலுக்குப் பின்னர் தொடங்கிய மறு சீரமைப்பைக் குறிப்பிடலாம்.

இடிபாடுகளுடன் சிதைந்த கட்டிடங்களை வீடுகளை மாற்றியமைக்க எவ்வளவு பொருட் செலவு? உடைமைகளை இழந்தாலும் பலர் உதவியுடன் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் உயிரிழப்புகளை எங்ஙனம் பெறுவது? மக்களின் நடைமுறை வாழ்க்கை திரும்ப எத்தனை ஆண்டுகளாகின்றன. போரினால் ஏற்பட்ட இழப்பை ஈடுகட்ட மக்களிடமிருந்து அதிக வரி வசூலிக்கப்படுகிறது. அறிவியல், தொழில் நுட்பம் என பல முன்னேற்றங்களைக் கண்டுள்ள இக்காலத்தில் இத்தகைய நிலை என்றால் சங்ககாலத்தில் இந்நிலை எவ்வாறு இருந்திருக்கும் என்பது சிந்திக்கத்தக்கது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் போர் வினைக்கு அஞ்சி பகைவரது ஊரிலுள்ள குடிமக்கள் தம் நாட்டை விட்டு நீங்கினர். அச்சேரன், முன்பு போலக்குடியேறுக என்று பகைமக்களுக்கு வாழ்வு தராததினால், பகைவர் நாடுகள் உழுவாரின்றிக் கலப்பைகள் வெறுக்கப்பட்டு அதனால் நிலம் வளப்பமின்றி தம் அழகு கெட்டன (பதிற்.16-19). இதில், மக்களுக்குப் பயனுள்ளதாக இருந்த இடம் போருக்குப் பின் பயனற்ற நிலமாக ஆக்கப்பட்டதை அறிய முடிகிறது. எனவே, அக்காலத்தில் அடிக்கடி ஏற்பட்ட போர்கள், அதன் மூலம் ஏற்பட்ட அழிவுகள், படைக்குப் பயந்து இடம்பெயரும் மக்கள் நிலை போன்றவை சமூகத்தை அமைதி வழியில் வைத்திருக்குமா? என்பதும் சிந்திக்கத்தக்கது.

### 5.3.6 வறுமை

சங்க காலம் இயற்கை வளம், செல்வவளம், கலை வளம் என பல வளங்களைக் கொண்டிருந்தது. கலைஞர்களும், புலவர்களும் கலைகளின்

வளர்ச்சிக்கு, கல்வியின் பெருக்கத்திற்கு ஊன்று கோலாக இருந்தனர். கொடைத் தன்மை கொண்ட வள்ளல்கள் பலர் வாழ்ந்திருந்தனர். வளமை பல இருந்தாலும் வறுமையும் இணைந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

சங்ககால சமுதாயத்தின் குடும்ப நிலையை அறிவதன் மூலம் அம்மக்களின் உண்மையான வாழ்க்கை நிலையை அறிந்து கொள்ள முடிகிறது.

1. தாயானவள் தேன் கலந்த இனிமை நிறைந்த பாலினை வற்புறுத்தி ஊட்டும் போது அதனை உண்ணாது அங்கும் இங்கும் ஓடி விளையாடும் சிறுமியும் (அகம்.89).
2. பசியால் பால் இல்லாமல் வேறு உணவும் இல்லாமல் வெறும் பாத்திரத்தைக் கண்டு அழும் சிறுவனும் (புறம்.160).
3. தானியங்களை உண்ண வரும் கோழிகளை விரட்ட தங்க குழைகளைப் பயன்படுத்தும் மகளிரும் (பட்டி.23-24).
4. உணவிற்காக அரிசி வேண்டி நிற்கும் இரவலரும் (புறம்.140).
5. அமிழ்தினு மினிய ஊன்சுவை அடிசில் உண்போரும் (பெரும்.475).
6. குப்பை வேளை உப்பிலி வெந்ததை உண்போரும் (சிறுபாண்.136-139).
7. கொட்டைக் கரையன்ன பட்டுடையும் (பொரு.155).
8. வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅரும் (புறம்.69:3).

முதலான சான்றுகள் செல்வரும் வறியவரும் கலந்த சமூகமாக சங்கச் சமூகம் இருந்ததை எடுத்துக்காட்டுகின்றன. பொற்காலச் சமுதாயம் என்றால் சமுதாயத்திலுள்ள அனைவரும் வளமையான வாழ்க்கை உடையவர்களாக இருந்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் வாழ்ந்த மக்கள் கூட்டத்தினுடைய ஒட்டு மொத்தமான, முழுமையான வாழ்க்கையையும் நோக்காமல் சமுதாயத்தினுடைய ஒரு பக்கத்தை மட்டும் நோக்கி அக்காலம் பொற்காலம் என்ற முடிவுக்கு வருவது தவிர்க்கப்பட வேண்டும் (நா. பழனிவேலு, 2004:112), என்ற கருத்து எண்ணத்தக்கதாக உள்ளது.

போரின் முக்கிய விளைவாக வறுமையைக் குறிப்பிடலாம். போரின் பலன் வறுமைதான் (சாமி. சிதம்பரனார், 1973:157). நாட்டின் வளங்கள்

அழிக்கப்படுவதன் மூலம் அந்நாட்டில் பொருள்களின் பற்றாக்குறை ஏற்படுகிறது. இன்றைய போர் நிகழ்வுகளும் பகைநாட்டின் பொருளாதாரத்தை ஒடுக்கும் வகையில் அமைந்துள்ளன.

பொருளாதாரம் பாதிக்கும்போது நாட்டில் பொருள் பற்றாக்குறையும், விலை உயர்வும் ஏற்படுகிறது. இதில் தங்களின் அன்றாட தேவைகளை நிறைவு செய்வதில் துன்பப்படுபவர்கள் குடிமக்களே. இந்நிலையில் மக்களின் அடிப்படைத் தேவைகளைச் செய்து தருவதில் அரசாங்கமும் சிரமப்படுகிறது. பொருளாதார வளர்ச்சி நன்றாகயிருந்தாலும் அதிகரித்து வரும் பயங்கரவாதம், சமாதானம் என்ற பெயரில் அண்டை நாடுகளிடம் நமது நலனை விட்டுத் தரும் மனப்பான்மை, பெருகிவரும் லஞ்ச ஊழல்கள், கல்வி அறிவற்ற தன்மை, குடிநீர் கூட இல்லாத ஆயிரக்கணக்கான கிராமங்கள், இருவேளை கூட வயிறார சாப்பிட முடியாத கோடிக்கணக்கான மக்கள், சுகாதாரம் மற்றும் அடிப்படை வசதிகளற்ற நிலை போன்ற இவை இன்று தேசத்திற்குண்டான பெரும் தடைகள் (இந்தியா டுடே, 2006:3). பொருளாதாரம் முன்னேற்றம் கண்டுள்ள இந்நூற்றாண்டில், நாட்டில் இவ்வளவு குறைபாடுகள் உள்ளன.

1. சங்க காலம் இலக்கிய வளமும் மொழிவளமும் நிறைந்தது.
2. கலை வளமும் கல்வி வளமும் வணிக வளமும் கொண்டது.
3. பண்பாடும் நாகரிகமும் தலைசிறந்து விளங்கியது.
4. அறநலமும் கொடைவளமும் விழைந்தது.
5. அகம்-புறம் என்ற வாழ்வியல் சிந்தனைகள் மலர்ந்தன.
6. அன்பு, கருணை, கண்ணோட்டம், இரக்கம், பணிவு, பொறுமை, உண்மை என்ற வாழ்வியல் நெறிகளைப் போற்றியது.
7. வீரமும் ஈரமும் இணைந்தது.

இத்தகைய சிறப்புகளைக் கொண்ட சங்ககாலம் பொற்காலமாகப் போற்றப்படுவது சிறப்புக்குரியதாகும்.

சமுதாயம் என்ற நோக்கில் பார்க்கும் பொழுது ஒற்றுமையற்ற அரசியல் சூழ்நிலை, தொடர்ந்து நிகழும் போரும், அதன் அழிவுகளும்

அவலங்களும், வளமை, வறுமை என்ற பாகுபாடு உள்ள வாழ்க்கைநிலை, தீய பண்புகள் சிலவற்றைக் கொண்டிருத்தல் முதலானவைகளும் தொடர்ந்து காணப்படுகின்றன. நிறை குறை என்ற இரண்டின் போக்கும் இச்சமுதாயத்தில் காண முடிகிறது. மக்களின் வாழ்க்கையும் இவ்விரண்டின் தன்மையில் அமைகிறது. எனவே, பொற்கால வாழ்க்கை என்பதும் மேற்கூறியவகையிலே அமையப் பெறுகிறது.

# முடிவுரை

கடலில் பயணம் செய்பவர்களுக்கு உதவும் கலங்கரை விளக்கம் போன்று வாழ்க்கையாகிய பயணத்தில் நல்வழி காட்டும் ஒளி விளக்காக நன்னெறிகள் அமைந்திருந்தன. பழந்தமிழர் நன்னெறிகளைத் தம் வாழ்வியல் நெறிகளாகக் கொண்டு வாழ்ந்தனர். அதனை உலகிற்கும் உணர்த்தினர்.

அன்பு, கருணை, இரக்கம், பணிவு, பொறுமை, உண்மை ஆகிய நன்னெறிகளைக் கொண்டும் இலக்கிய வளம், மொழி வளம், கலைவளம், கல்விவளம், கொடை வளம், வணிக வளம் முதலானவை கொண்டும் பண்பாட்டில் நாகரிகத்தில் தலைசிறந்த காலமாக, பொற்காலமாகப் போற்றப்படும் சிறப்பிற்குரியது சங்க காலமாகும். அன்றுள்ள இலக்கியப் படைப்புகள், வேறு எவராலும் எக்காலத்தும் படைக்க முடியாது என்று கூறுமளவிற்குத் தனித்தன்மை உடையன. இலக்கியப் நயமும் வளமும் கொண்டன. பழந்தமிழரின் இலக்கியத்தை நோக்கும் பொழுது, இலக்கிய வரலாற்றில் சங்க காலம் பொற்காலம் என்றும் சங்க இலக்கியம் பொற்கால இலக்கியம் என்றும் உறுதியிட்டுக் கூறலாம்.

சமுதாய நோக்கில் பார்க்கும் பொழுது, மனித நாகரிகத்தை உலகத்திற்கு பறை சாற்றிய சங்க காலத்தில் சினம் காரணமாக பெருங்கேடுகள் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது. பகைவரது ஊரை எரியூட்டுதல், இல்லங்களை, மன்றங்களை, நீர்நிலைகளை, வயல்களைப் பாழ்படுத்துதல், கழுதை பூட்டி உழுது நிலங்களின் வளமழித்தல், கொள்ளையிடல் முதலான செயல்கள் நடைபெற்றன.

படையெடுப்பிற்கு முன் நாடாக இருந்த நிலம் படையெடுப்பிற்குப் பின் மண்மேடாக உருக்குலைக்கப்பெற்றன. நரியும், மானும், யானையும், புலியும் சுற்றித் திரியும் இடங்களாக மாறின. தோல்வியுற்ற அரசன் தொடர்ந்து ஆட்சி நடத்த முடியாத வகையில், மக்கள் வாழ இயலாத வகையில், வாழ்க்கை ஆதாரங்களை இழந்து தங்கள் நாட்டிலிருந்து வேறு நாட்டிற்குப் புலம்

பெயரும்படி அழிவுகள் மேற்கொள்ளப்பட்டன. அழிவை உண்டாக்கும் சினத்தை அற ஆட்சிக்குத் தடையாக புலவர்கள் குறிப்பிட்டிருந்ததாலும், சினத்தைத் தணித்து, சீர்ப்படுத்தும் தன்மையைக் குறிப்பிடவில்லை. மக்கள் ஆட்சி நடைபெறும் இக்காலத்தில் அரசின் குறைகளைக் கூற தயங்குகின்றனர் என்றால், முடியாட்சியுள்ள சங்க காலத்தில் அரசர்களை எதிர்பார்த்து வாழும் புலவர்கள் அரசர்களின் குறைகளை எடுத்துக்கூற அஞ்சியிருப்பர்.

ஒற்றுமையற்ற அரசியல் சூழ்நிலையில், தொடர்ந்து நிகழும் போரும் அதன் அழிவுகளும் அவலங்களும் மாறாததாக உள்ளன. பழந்தமிழர் வாழ்வியல் நெறிகளில் வறுமை இல்லை. ஆனால் மக்கள் வாழ்க்கையில் வறுமை காணப்படுகிறது. வளமை-வறுமை என்ற பாகுபாடு கொண்ட வாழ்க்கை நிலைகளும் தொடர்ந்து காணப்படுகின்றன.

கணவனை இழந்த நிலையில் பெண்களின் வாழ்க்கை மிகுந்த அவலம் உடையதாக உள்ளது. கணவன் இறந்தவுடன் அப்பொழுதே அன்றைக்கே இறக்கும் அன்புசார்ந்த மனத்துயரம், இறக்காமல் கைம்மையில் உணவிற்காக, இருப்பிடத்திற்காக தன் உடல் மற்றும் உள்ளம் சார்ந்த நலன்களை, பொலிவுகளை இழந்து வாழ்க்கையில் நாள்தோறும் எதிர் நோக்கும் துன்ப மிகுதி என இவ்விரண்டின் வகையில் அப்பெண்களின் வாழ்க்கை அமைந்திருக்கின்றது.

மரபு ரீதியான போர்முறையிலிருந்து மாறி, பெண்ணிற்காக போர் நிகழ்வு அமைகிறது. அந்நிகழ்வால் உண்டாகும் அழிவிற்கு பெண் காரணமாகக் காட்டப்படுகின்றாள். மகட்கொடை, மகள் மறுத்தல் காரணமாக போர் உண்டாவதும், போருக்குப் பிறகு அம்மகளிரை ஏற்க மறுப்பதும் ஆகிய செயல்கள், அச்சமுதாயத்தில் பெண்ணினத்தை மையப்படுத்தி பெண்களுக்கு உண்டாகும் பாதிப்பை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. அப்பெண்களின் மீது கழிவிரக்கத்தைத் தோற்றுவிக்கின்றன.

பெண் நலத்தை நுகர்ந்து பின் கைவிட எண்ணுதல், கணவனால் கைவிடப்பட்டு வாழ்க்கையில் ஒதுக்கப்படுதல், பெண்ணை வழிமறித்து பண்பற்ற வார்த்தைகளைக் கூறுதல், பெண்ணைக் காம நோக்குடன் அச்சுறுத்தல் ஆகிய ஒழுக்கமற்ற நடத்தைகளும் இச்சமுதாயத்தில் காணப்படுகின்றன. தவறிற்காக தரப்படும் தண்டனைகள் இரக்கமற்றதாக, மனிநேயமற்றதாக இருக்கின்றன. சில பண்பு நலக்குறைகளும் காணப்படுகின்றன.

சங்ககாலம் பொற்காலம். அக்காலத்தில் வாழ்ந்த அரசர், குடிமக்கள் என அனைவரும் நன்முறையில் வாழ்ந்தனர் என்பன போன்ற கருத்துகள் காணப்படுகின்றன. எனினும் அக்காலத்தில் எவரும் தவறே செய்யவில்லையா? வறுமை என்ற ஒன்று அக்காலத்தில் இருந்ததில்லையா? துன்பத்தை அக்கால மக்கள் அறிந்ததில்லையா? என்ற எதிர் வினாவும் முன்வைக்கப்படுகின்றது. சமூகத்தின் நிகழ்வைப் பதிவு செய்பவர்கள் புலவர்கள். இச்சமுதாயத்தின் நிறை குறை என்ற இரண்டின் போக்கையும் அவர்கள் இலக்கியத்தின் வாயிலாக பதிவு செய்துள்ளனர். சங்ககால வாழ்வியல் நெறிகளில் நன்னெறிகள் மக்களின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தின என்றாலும் சினம், பகை, போர், நாடழிவு, வறுமை போன்றவை அவர்களின் வாழ்க்கையைத் துன்பத்திற்குள்ளாக்கின.

# முதன்மை நூல்கள்


கலியாண சுந்தரையர், எஸ்.(ப.ஆ.) பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், (ம.ப.), கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1950.

சண்முகம் பிள்ளை, மு. (ப.ஆ.) குறுந்தொகை மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.) புறநானூறு மூலமும் உரையும், லாஜர்னல் அச்சுக்கூடம், சென்னை, 1935.

———— பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1974.

———— ஐங்குறுநூறு, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1980.

சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.) பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, கழக வெளியீடு, சென்னை, 1971.

———— கலித்தொகை (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1977.

———— அகநானூறு (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1977.

துரைசாமிப் பிள்ளை, ஔவை சு. (உ.ஆ.) பதிற்றுப்பத்து மூலமும் உரையும் (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1995.

———— புறநானூறு (ம.ப.), பகுதி-I, கழக வெளியீடு, சென்னை, 2002.

———— புறநானூறு (ம.ப.), பகுதி-II, கழக வெளியீடு, சென்னை, 2002.

நச்சினார்க்கினியர் (உ.ஆ.) கலித்தொகை மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

———— பத்துப்பாட்டு மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

பரிமணம், அ.மா. (ப.ஆ.) சங்க இலக்கியம் (எட்டுத்தொகை+ பத்துப்பாட்டு), நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்(பி) லிட், சென்னை, 2004.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், அ. (உ.ஆ.) நற்றிணை நானூறு மூலமும் உரையும், கழக வெளியீடு, சென்னை, 1956.

# இலக்கண நூல்கள்


இளம்பூரணர் (உ.ஆ.) — தொல்காப்பியம், பொருளதிகாரம் (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1956.

கனகசபாபதி பிள்ளை, எஸ். (ப.ஆ.) — தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், முதற்பாகம், சென்னை, 1934.

சண்முகம் பிள்ளை, மு. (ப.ஆ.) — தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், முதற்பகுதி, (ம.ப.), முல்லை நிலையம், சென்னை, 2003.

———— — தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், மூன்றாம் பகுதி (ம.ப.), முல்லை நிலையம், சென்னை, 2005.

சாமுண்டி தேவநாயகர் (உ.ஆ.) — புறப்பொருள் வெண்பா மாலை மூலமும் சாமுண்டி தேவநாயகரியற்றிய உரையும், ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1963.

நச்சினார்க்கினியர் (உ.ஆ.) — தொல்காப்பியம், பொருளதிகாரம் (அகத்திணையியல்-புறத்திணையியல்) (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1955.

பால சுந்தரம், ச. (உ.ஆ.) — தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை, பொருளதிகாரம், பகுதி-மிமி, தாமரை வெளியீட்டகம், தஞ்சாவூர், 1998.

பேராசிரியர் (உ.ஆ.) — தொல்காப்பியம், பொருளதிகாரம் (ம.ப.), கழக வெளியீடு, சென்னை, 1975.

வெள்ளைவாரணன், க. — தொல்காப்பியம், புறத்திணையியல், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1983.

# துணை நூல்கள்


அரங்க இராமலிங்கம் — சங்க இலக்கியத்தில் வேந்தர், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1987.

அறவாணன், க.ப. — அற்றை நாள் காதலும் வீரமும், பாரிநிலையம், சென்னை, 1978.

———— — தமிழ்ச் சமுதாய வரலாறு (பண்டைக்காலம்), தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, 1992.

ஆறுமுகம், அ. — சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, பாவேந்தர் பதிப்பகம், திருச்சி, 1994.

இராசமாணிக்கம் பிள்ளை, மா. — மொஹெஞ்சொதாரோ அல்லது சிந்து சமவெளி நாகரிகம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நுற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1941.

இராசமாணிக்கனார் — தமிழக ஆட்சி, பாரிநிலையம், சென்னை, 1972.

இராசமாணிக்கனார், மா. — தமிழக வரலாறு (ம.ப.), பாரிநிலையம், சென்னை, 1969.

இராசேந்திரன், ச. — தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2001.

இராமகிருட்டினன், ஆ. — தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 2001.

இராமச்சந்திரன், சி.ஏ. — சங்ககால வரலாறு, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977.

இலட்சுமணன், சி. — வாழ்வியற் சிந்தனை, மாரி பதிப்பகம், தஞ்சாவூர், 1995.

இறையரசன், பா. — தமிழர் நாகரிக வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1993.

| | |
|---|---|
| ஏப்ரஹாம், ஜே.எஸ். | உளவியல் ரீதியாக உருவாகும் உடல் நோய்கள்: ஒரு விளக்கம், நர்மதா பதிப்பகம், சென்னை, 2005. |
| ஒளிவைரம் சொக்கலிங்கம் | மூன்று ஆத்தி சூடிகள், விளக்கவுரை, சகுந்தலை நிலையம், சென்னை, 2000. |
| கந்தசாமி, சோ.ந. | புறத்திணை வாழ்வியல், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1994. |
| காந்தி, கா. | தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980. |
| கார்த்திகேசு சிவத்தம்பி | சங்க இலக்கியமும் கவிதையும் கருத்தும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009. |
| குருசாமி, ம.ரா.போ. | சங்க காலம் (ம.ப.), மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயமுத்தூர், 1974. |
| குருநாதன், இராம. | புறநானூற்றில் புதிய வெளிச்சம், தமிழ்ச் சாரல், சென்னை, 2004. |
| குருவிக் கரம்பை வேலு | மீன் ஊன் கள்ளும் கலந்த தமிழ், வளவன் பதிப்பகம், சென்னை, 2003. |
| கேசவன், கோ. | மண்ணும் மனித உறவுகளும், சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம், 2001. |
| கைலாசபதி, க. | ஒப்பியல் இலக்கியம், பாரி நிலையம், சென்னை, 1969. |
| ———— | பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் (ம.ப.), நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 1991. |
| கோபாலையர், தி.வே. (ப.ஆ.) | வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சை, 1972. |

கோமதி நாயகம், பி. இந்திய அரசியல் மற்றும் பண்பாட்டு வரலாறு, ஜெயபிரசாத் பதிப்பகம், மதுரை, 1995.

கோவிந்தசாமி, மு. திருக்குறட் பொருளகராதி, திருக்குறள் ஆராய்ச்சி வெளியீடு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணா மலைநகர், 1972.

கோவிந்தன், கா. பண்டைத் தமிழர் போர்நெறி (ம.ப.), வள்ளுவர் பண்ணை, சென்னை, 1984.

பண்டைத் தமிழர் போர்நெறி, தமிழ்த்தாய் பதிப்பகம், சென்னை, 2003.

கோவேந்தன், த. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், வேமன் பதிப்பகம், சென்னை, 2003.

சக்திப் பெருமாள் பெண், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1993.

சஞ்சீவி, ந. (க.ஆ.) பதிற்றுப்பத்துச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் ஒன்பதின்மர் சொற்பொழிவுகள்), கழக வெளியீடு, சென்னை, 1955.

சண்பகம், சு. நீதிநூல் களஞ்சியம், திருமகள் நிலையம், சென்னை, 1993.

சண்முகம் பிள்ளை, மு. சங்க தமிழர் வாழ்வியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997.

சந்திர சேகர், இரா. (ப.ஆ.) சங்க இலக்கியம்: கருத்தியல் வளம், மகாகவி பாரதியார் நூலகம், கோயம்புத்தூர், 2003.

சந்திரசேகரன், இரா. (ப.ஆ.) தமிழ் இலக்கிய வாழ்வியல், பாரதியார் நூலரங்கம், கோயம்புத்தூர், 2004.

சரோஜா பாண்டியன் புறநானூற்றில் அகிம்சை வளங்களும் வன்முறை வழிகளும், பாண்டியன் பதிப்பகம், மதுரை, 2002.

சாரதாம்பாள், செ. — சங்கச் செவ்வியல், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1993.

சிதம்பரனார், சாமி. — பழந்தமிழர் அரசியல், இலக்கிய நிலையம், சென்னை, 1973.

———— — பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், அறிவுப் பதிப்பகம், சென்னை, 2003.

சிவ சுப்பிரமணியன் — பொற்காலங்கள் ஒரு மார்க்சிய ஆய்வுரை, கார்க்கி நூலகம், சென்னை, 1981.

சிவம் சிவராசன் — சங்க இலக்கிய வாழ்வியல், சிவம் பதிப்பகம், வேலூர், 1998.

சிவராமன், வீர. (ப.ஆ.) — தமிழர் நாகரிகம், செல்வி பதிப்பகம், காரைக்குடி, 2002.

சின்னசாமி, அரு. — தமிழர் சமுதாய வரலாறு, வானதி பதிப்பகம், 1979.

சின்னசாமி, தே.ப. — அவ்வையாரின் நீதி நூல்கள் (ம.ப.), சரசு பதிப்பகம், சென்னை, 1995.

சுப்பிரமணிய பாரதி, சி. — பாரதி நூல்கள் கவிதை, சென்னை அரசாங்க வெளியீடு, பாரதி நூற்பதிப்புக் குழுவினர், சென்னை, 1954.

சுப்பிரமணியன், அ.வெ. — பேரெழில் வாழ்க்கை, சேகர் பதிப்பகம், சென்னை, 1990.

செந்துறை முத்து — நன்மார்க்கப் போதனைகள், தேவி வெளியீடு, சென்னை, 1993.

செந்துறையான் — தமிழ் இலக்கிய அறிவுக் களஞ்சியம், தமிழன் நிலையம், சென்னை, 2001.

செல்வக்கேசவராயர் (ப.ஆ.) — பழமொழிநானூறு, சாரதா மாணிக்கம் பதிப்பகம், சென்னை, 2005.

செல்வராசு, நா. — சங்க இலக்கியமும் சமூகவியலும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2002.

செல்வராசு, நா. பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை, காவ்யா வெளியீடு, சென்னை, 2009.

தேசையங்கார், டி.ஆர். தமிழர் இந்தியா, க.ப. அறவாணன் (மொ.ஆ.), தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, 1993.

சொக்கலிங்கம், த.ந. நல்வாழ்விற்கு நீதிமொழிகள் (தமிழ் உரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும்), வானதி பதிப்பகம், சென்னை, 1996.

———— திரிகடுகம் நான்மணிக்கடிகை (தமிழ் உரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும்), வானதி பதிப்பகம், சென்னை, 1998.

தட்சிணாமூர்த்தி, அ. சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள், மங்கையர்க்கரசி பதிப்பகம், தஞ்சாவூர், 2001.

திருநாவுக்கரசு, க.த. வரலாற்று வஞ்சி, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், சென்னை, 1977.

துரைசாமிப்பிள்ளை, அவ்வை.சு. பெருந்தகைப் பெண்டிர், சாந்தி நூலகம், சென்னை, 1960.

தேவநேயப் பாவாணர் தமிழர் வரலாறு (முதற்பாகம்), (ம.ப.), தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2000.

தேவநேயன், ஞா. பழந்தமிழாட்சி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1952.

———— திருக்குறள் தமிழ் மரபுரை, நேசமணி பதிப்பகம், சென்னை, 1969.

தேவராசன், கோ. (ப.ஆ.) சங்ககால வரலாற்று ஆய்வுகள்-மி, (மயிலை சீனி வேங்கடசாமி), எம்.வெற்றியரசி வெளியீடு, சென்னை, 2001.

தோமைராஜன், செ. உங்களைப் பிடிக்குமா உங்களுக்கு?, அரும்பு பதிப்பகம், சென்னை, 2001.

நரசிம்மன், வை.மு. (ப.ஆ.) — திருக்குறள் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் மூலமும் பரிமேலழகருரையும், சென்னை, 1965.

பக்தவத்சல பாரதி — பெண்ணிய ஆய்வுகள், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், புதுச்சேரி, 1998.

பரிமேலழகர் (உ.ஆ.) — திருக்குறள், சக்தி காரியாலயம், சென்னை, 1957.

பழனிவேலு, நா. — சங்கப் புறஇலக்கியங்களில் சமூகச் சித்திரிப்புகள், மனோன்மணி பதிப்பகம், கிருட்டினகிரி, 2004.

பாண்டுரங்கன், கி. — பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், வெற்றிவேல் வெளியீடு, சென்னை, 1986.

பாலசாரநாதன், சு. — அபிதானமணிமாலை, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1988.

பாலசுப்பிரமணியன், கு.வெ. — சங்க இலக்கியத்தில் புறப்பொருள், மீரா பதிப்பகம், புதுக்கோட்டை, 1986.

புரட்சிதாசன் — தொல்காப்பிய ஐந்திணை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1988.

பெருமாள், க. (க.ஆ.) — பதிற்றுப்பத்துச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் ஒன்பதின்மர் சொற்பொழிவுகள்), கழக வெளியீடு, சென்னை, 1955.

மயிலானந்தன், எஸ்.கே.எம். (ப.ஆ.) — வாழ்வியல் விழுமியங்கள், வேதாத்ரி பதிப்பகம், ஈரோடு, 2002.

மருதவாணனார், சா. — தமிழ்நெறி, மாவட்ட இலக்கிய தமிழ்நெறி அணி, கோவை, 1983.

மாணிக்கம், வ.சுப. வள்ளுவம் (ம.ப.), பாரிநிலையம், சென்னை, 1969.

மாதையன், பெ. சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 2004.

முத்துரத்னம், எஸ். (ப.ஆ.) நாலடியார் உரைவளம், முதல் பாகம், தஞ்சை சரசுவதி மஹால் வெளியீடு, தஞ்சை, 1953.

முனிசாமி, வீ. திருக்குறள் அதிகார விளக்கம், வானதி பதிப்பகம், சென்னை, 1988.

மேரி மாசிலாமணி (க.ஆ.) பதிற்றுப்பத்துச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் ஒன்பதின்மர் சொற்பொழிவுகள்), கழக வெளியீடு, சென்னை, 1955.

மேலைச்சிவபுரி முத்துராமன் வாழ்வியல் சிந்தனைகள், மணிவாசகர், பதிப்பகம், சென்னை, 2006.

ராமசாமி, கோ.தெ. (ப.ஆ.) பழமொழிப் பேதம் மூலமும் உரையும், கரூர், 1932.

ராஜ்கௌதமன் பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், தமிழினி, சென்னை, 2006.

விமலானந்தம், மது.ச. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் (முதல் தொகுதி), ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1987.

———— தமிழ் இலக்கிய வரலாறு, அபிராமி பதிப்பகம், சென்னை, 2003.

விவேகானந்தசாமி, ச. திருப்பொருள், ஸ்ரீஸர்வேஸ்வரி பதிப்பகம், இராஜபாளையம், 1986.

வெங்கடசாமி நாட்டார், ந.மு. (உ.ஆ.) நன்னெறி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1952.

வெங்கடசாமி நாட்டார், ந.மு. (உ.ஆ.) நன்னெறி (ம.ப.), மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை, 1992.

வேங்கடசாமி, மயிலை, சீனி. சங்ககால தமிழக வரலாற்றில் சில செய்திகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1970.

வேங்கடராமன், மகா. புறநூல்களில் பொருளியல் கோட்பாடுகள், அகத்தியர் அறிவாலயம், திருச்சிராப்பள்ளி, 1989.

ஜகந்நாதன், கி.வா. வீரர் உலகம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1966.

ஜம்புலிங்கம், அ. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, இந்துமதி பதிப்பகம், சிதம்பரம், 2003.

ஜெயக்குமார், அ. பெண்களும் சமூகமும், உமா பதிப்பகம், சென்னை, 1999.

ஜோஸபின்டோரதி, (ஆ.ஆ.) ஔவையாரின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், பாரி நிலையம், சென்னை, 1990.

ஷிவா கோபத்தை வென்றுவிடு வெற்றி நிச்சயம், அவ்வை வெளியீடு, சென்னை, 1993.


## ஆய்வுக் கட்டுரைகள்


இலீயா கிரேசிலின் பாலினா, க. சங்க இலக்கியத்தில் பொருளாதாரம் (முதுகலை கட்டுரை), கேரளப் பல்கலைக் கழகம், 1974.

சிற்பி பாலசுப்பிரமணியம், (ப.ஆ.) ஆய்வுக்கோவை (தொகுதி-மூன்று), இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், திருச்சிராப்பள்ளி, 2002.

பக்தவத்சல பாரதி (ப.ஆ.) பெண்ணிய ஆய்வுகள், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், புதுச்சேரி, 1998.

விசய வேணுகோபால், கோ. (க.ஆ.) சங்கத் தமிழ் மாலை (கட்டுரைத் தொகுப்பு), புதுவைத் தமிழ்ச் சங்கம் வெளியீடு, புதுச்சேரி, 2003.

தமிழ்நாட்டு வரலாறு, சங்க காலம்-வாழ்வியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1983.

தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம்-அரசியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1983.

## ஆய்வேடுகள்

மாயாண்டி, இரா. சங்க இலக்கியத்தில் கற்பனை, சென்னைப் பல்கலைக் கழகம், 1977.

அமிர்தலிங்கம், த. தமிழ்க் கவிதைகளில் வறுமைப் புனைவு, சென்னைப் பல்கலைக் கழகம், 1979.

பாண்டுரங்கன், கி. பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், சென்னைப் பல்கலைக்கழகம், 1984.

## இதழ்கள்

இந்தியாடுடே-வாரஇதழ், ஜனவரி 25, பிப்ரவரி 22, 2006.

தினமலர்-நாளிதழ், மார்ச் 3, 2010.

## களஞ்சியம்

கலைக்களஞ்சியம், தொகுதி-ஒன்று, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1954.

கலைக்களஞ்சியம், தொகுதி-மூன்று, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி-மூன்று, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1988.

வாழ்வியற் களஞ்சியம் (ம.ப.), தொகுதி-ஒன்பது, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2004.

## நிகண்டுகள்

ஆறுமுக நாவலர் (ப.ஆ.). மண்டல புருடரின் சூடாமணி நிகண்டு மூலமும் உரையும், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1966.

இலம்போதரன், சு. (ப.ஆ.) பழைய தமிழ் அகராதி, பிங்கல நிகண்டு, வசந்தா பதிப்பகம், சென்னை, 2000.

இன்னாசி, சூ. (ப.ஆ.) சதுரகராதி (ம.ப.), மாதாபதிப்பகம், சென்னை, 1989.

சண்முகம் பிள்ளை, மு. (ப.ஆ.) திவாகரம், இரண்டாம் தொகுதி, சென்னைப் பல்கலைக்கழகம், 1993.

சாமிநாத கவிராயர் பொதிகை நிகண்டு, தமிழகராதியின் ஆதார நூற்றொகுதி, சென்னை, 1934.

சிவசுப்பிரமணியக்கவிராயர் நாமதீப நிகண்டு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை, 1930.

நாகசாமி, இரா. (ப.ஆ.) அகராதி நிகண்டு, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1983.

———— வடமலை நிகண்டு, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1983.

பிங்கலர் பிங்கல நிகண்டு மூலமும் உரையும், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1968.

வையாபுரிப் பிள்ளை, எஸ். (உ.ஆ.) நாமதீப நிகண்டு (ம.ப.), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

சேந்தன் திவாகரம், பிங்கலம், சூடாமணி, சாந்தி சாதனா வெளியீடு, சென்னை, 2004.

# அகராதிகள்


க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (ம.ப.), க்ரியா, சென்னை, 2001.

செந்தமிழ் அகராதி, செந்தமிழ் அகராதி ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1950.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, முதன்மடலம், மூன்றாம் பாகம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்கம், சென்னை, 1997.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ஐந்தாம் மடலம், மூன்றாம் பாகம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி திட்ட இயக்கம், சென்னை, 2005.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ஏழாம் மடலம், முதல் பாகம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி திட்ட இயக்கம், சென்னை, 2007.

தமிழ்ச் சொல்லகராதி, முதற்பாகம், தமிழ்ச் சங்க முத்திரா சாலைப் பதிப்பு, சென்னை, 1910.

தமிழ்ச் சொற்றொடர் அகராதி (தெசாரசு), மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2003.

தமிழ் தமிழ் அகரமுதலி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1985.

தமிழ் மொழியகராதி, பாகம்-1, சென்னை, 1922.

தமிழ் மொழிஅகராதி, சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

தற்காலத் தமிழ் மரபுத் தொடர் அகராதி, தமிழ்-தமிழ்-ஆங்கிலம், கலாச்சார மேம்பாட்டு அறக்கட்டளை, சென்னை, 1977.

நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், சென்னை, 2002.

பெருஞ்சொல்லகராதி, தொகுதி-4, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2000.

மதுரைத் தமிழ்ப் பேரகராதி, (இரண்டாம் பாகம்) (ம.ப.), இ.மா. கோபால கிருஷ்ணக்கோன் வெளியீடு, மதுரை, 1956.

மரபுத்தொடர் அகராதி, ராஜராஜன் பதிப்பகம், சென்னை, 2004.

மெய்யப்பன் தமிழ் அகராதி, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2006.

வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி, இரண்டாம் தொகுதி, சாந்தி சாதனா, சென்னை, 2001.

வரலாற்று முறைத் தமிழ் இலக்கியப் பேரகராதி, ஐந்தாம் தொகுதி, சாந்தி சாதனா, சென்னை, 2002.

